# மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை

எம். அருணகிரி

அருணகிரி பதிப்பகம்
நெ. 26, கந்தசாமி கோவில் தெரு,
பெரம்பூர் பேராக்ஸ், சென்னை– 600 012

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை |
| ஆசிரியர் | : | திருப்புகழ் மாமணி மு.அருணகிரி |
| மொழி | : | தமிழ் |
| முதற் பதிப்பு | : | செப்டம்பர், 2004 |
| தாள் | : | 11.6 கி.கி. வெள்ளைத் தாள் |
| நூல் அளவு | : | 1 X 8 கிரவுன் 12.5X18.5 செ.மீ. |
| பக்கங்கள் | : | 320 பக்கங்கள் |
| எழுத்து | : | 11 புள்ளி |
| கணினி | : | அன்னை கிராபிக்ஸ் இராயப்பேட்டை, சென்னை – 14 |
| வெளியிடுபவர் & உரிமை | : | அருணகிரி பதிப்பகம் நெ. 26, கந்தசாமி கோயில் தெரு, பெரம்பூர் பேராக்ஸ், சென்னை–600 012. |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம் இராயப்பேட்டை, சென்னை–14. தொலைபேசி : 28351189 |

விலை : ரூ.75.00



# இந் நூல்

திருமலை—திருப்பதி தேவஸ்தான

நிதி உதவியுடன் அச்சிட்டு வெளியிடப்படுகிறது.

—நன்றி—

**This Book**

**is Printed and Published with the Financial assistance of Tirumala-Tirupati Devasthaanams. Thanks and Hail to**

**LOARD VENKATESWARA.**

**நீதிபதி P.R. கோகுலகிருஷ்ணன்**
முன்னால் தலைமை நீதிபதி (குஜராத்)

7, அண்ணா அவென்யூ,
பக்தவச்சலம் நகர் விரிவு,
அடையார், சென்னை-20.

# அணிந்துரை

திருப்புகழ் மாமணி மு. அருணகிரி பத்திரிகைகளுக்கு வடித்துத் தந்த திருப்புகழ் சாரங்கள் சிலவற்றைப் படித்து மகிழ்ந்தேன். பொதுமக்களுக்குப் புரியாது என்று இசை மேடைகளிலே மட்டும் ஒலித்து வந்த திருப்புகழின் விளக்கங்களை, திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்கள் பாமரரும் படித்து மகிழும் வண்ணம் பல திருப்புகழ் பாடல்களின் விளக்கங்களைத் தந்திருக்கிறார். சிவனார் முடியிலே சூடியிருக்கும் பிறைச்சந்திரனையும், கங்கையையும், சடா முடியினையும் விளக்கிப் பாடிய தேவார, திருவாசக பாடல்கள் ஏராளம். அத்தனை பாடல்களும் சிவபெருமான் முடியிலே அணிந்திருப்பது பிறைச்சந்திரன் என்பதைத்தான் குறிப்பிட்டுள்ளன. திருப்புகழில் அருணகிரிநாதர்,

"பூரண மதானதிங்கள் சூடுமரனாரிடங்கொள்
பூவைய ருளால் வளர்ந்த - முருகோனே"

என்ற வரிகளுக்கு, அழகான விளக்கத்தைத் திரு. மு. அருணகிரி தந்திருப்பதை நான் படித்தேன். எம்பெருமான் கைலையிலே நடனமாடும் சமயம் மிகவும் உற்சாகமாக உடனிருந்து கவனித்த உமாதேவியார் வியக்க, வேகமாகப் பம்பரம்போல் சுழன்று ஆடியதைப் பார்த்ததும், சடையில் அணிந்திருந்த பிறைச்சந்திரனும், சுழன்று ஆடும் நேரத்தில், முழுச் சந்திரனாக, உமாதேவியார் கண்ணுக்குப் புலப்பட்டதையே அருணகிரியார் மனக்கண்ணால் நோக்கி அனுபவித்த பேரின்பக் காட்சியை "பூரண மதானதிங்கள் சூடுமரனாரிடம்" என்று பாடி அருளினார்.

பல பாடல்களில் அருணகிரிநாதர் துன்பம் தரும் சிற்றின்பத்தையும், கோபத்தையும் தன் மேலேயே சூட்டிக் கொண்டு பாடிய பாங்கினை திரு. மு. அருணகிரி அவர்கள் விளக்கும்பொழுது, மனித சமுதாயம் செய்கின்ற தவறை அருணகிரியார் தான் செய்வதுபோல் கூறி, தவறுகளிலிருந்து மானிட இனம் உய்வு பெற அருளியதுதான் தெய்வத் திருப்புகழ் என்று கூறுகிறார். இதற்காக அவர் எடுத்துக்கொண்ட பல திருப்புகழ் பாடல்களை இவரது விளக்கவுரை களிலிருந்து நாம் காண முடிகிறது. தெய்வ வழிபாட்டினுடைய பெருமையையும், எத்தெய்வமாக இருந்தாலும் தமிழ் மக்கள் மனம் ஒன்றி வணங்குகின்ற பான்மையையும், திருப்புகழ் மாமணி அவர்கள் தன்னுடைய எழுத்தோவியத்தில் அழகாகச் சுட்டிக்காட்டி இருக்கின்றார். அவர் சொல்வது :

"இராமன் முழுக்க முழுக்க விஷ்ணுவின் அம்சம், வடநாட்டான்; ஏகபத்தினி விரதன். அவன் ஏந்தி இருப்பதோ கோதண்டம். இதனை அடிப்படை

வேற்றுமைகள் இருந்தாலும் இராமனும், முருகனும் தமிழ் மக்களால் போற்றி வணங்கப்படுகின்ற தெய்வங்கள் ஆவர். இந்த இருவரும் தனித்தனியாக இருப்பதைவிட இணைத்துப் பார்க்கவே கலைஞன் விரும்பினான். ஆதலால் வேலேந்தியவனை வில்லேந்த வைத்திருக்கிறார்கள். வில்லேந்தியவனை வேலேந்த வைத்திருக்கிறார் கள். அவனை தனுஷ் சுப்ரமணியன் எனப் பெயரிட்டு அழைத்தனர். மேலும் அழகாபுரத்தில் முருகன் கைகளில் சங்கு, சக்கரம் ஏந்தி நின்று அருள்பாலிக்கிறார். வில்லேந்திய வேலனைக் கல்லிலே வடித்து நிறுத்தியிருக்கிறார்கள். திருவையாற்றிலும், திருவண்ணாமலையிலும் செப்புச் சிலையாக வைத்திருக்கிறார்கள். சாய்க்காடு என்னும் சாயாவனத்தில் ராமனையும் முருகனையும் பின்னிப் பிணைந்து நிற்கும் கோலம்தான் எத்தனை அழகு? இந்தப் பிணைப்புகளுக்கெல்லாம் மூலாதாரம் என்ன? உயிர்கள் அனைத்தையும் ஒன்றோடொன்று இணைக்கும் வலிமையுடையது அன்புதானே? "அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே" என்று வள்ளலார் பாடியுள்ளார்.

இப்படிக் கூறி தெய்வங்களின் உருவம் வேறுபட்டாலும் வணங்குகின்ற உணர்வு ஒன்றுதான். அதுதான் தெய்வ நம்பிக்கை என்ற அரிய தத்துவத்தை திரு. மு. அருணகிரி அவர்கள் இப்புத்தகத்தில் எழுதியுள்ளார்.

இப்படி எத்தனையோ விளக்கங்கள் அருணகிரியாரின் சமரச சன்மார்க்கக் குணத்தை விளக்குகின்றன. இவற்றில் பல பாடல்களைச் சிறப்பாக இப்புத்தகத்தில் எழுதி, பக்தர்களின் மனம் மகிழும்படியாக திருப்புகழ் மாமணி, அழகிய வர்ணனையை, அழகான கருத்துகளை, அழகு தமிழில் வடித்துள்ள பாணியினை இப்புத்தகத்தில் ஏராளமாகக் காண முடிகிறது.

அருணகிரியார் சைவர் என்பதை நிர்ணயிக்கும் வகையில் ஆசிரியர் அவர்கள் கந்தர் அந்தாதியில் 31வது பாடலை எடுத்து விளக்கியிருக்கிறார். அந்தப் பாடலில்,

"செந்தீ தாவு அசவு அநியாயம் செய் வேதியரே"

என்ற வரிகள் வருகின்றன. இதன் மூலம் ஆட்டை ஜீவகாருண்யம் இல்லாது நெருப்பில் வதைத்து யாகம் செய்பவர் மறையோரே என்று கூறுவதன் மூலம் அருணகிரிநாதர் சைவர் என்பது தெரிகிறது என விளக்கியுள்ளார்.

"மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" எனும் இப்புத்தகத்தைப் படிப்பவர்கள் இப்புத்தகத்தில் மட்டும் கூறியுள்ள அருணகிரியாரின் பாடல்களின் அழகான கருத்துக்களை உணர்வதோடு அருணகிரியார் பாடிய பல்லாயிரம் பாடல்களையும் படித்து மகிழ வேண்டுமென்பதில் ஆர்வம் கொள்வர் என்பது உறுதி. திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்களுடைய முயற்சியை நான் பாராட்டுகிறேன். அவர்தம் தமிழ் உணர்வினைப் படித்து மகிழ்ந்தேன். இவரது ஆன்மீக எழுச்சியினை இவர் எழுத்தோவியத்திலிருந்து புரிந்து கொண்டேன். தொடரட்டும் திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்களுடைய சீரிய பணி.

தா. சந்திரசேகரன், இ.ஆ.ப.,
அரசு சிறப்புச் செயலாளர்

*தமிழ் வளர்ச்சி பண்பாடு (ம)*
*அறநிலையத் துறை,*
*தலைமைச் செயலகம், சென்னை-9.*

# அணிந்துரை

திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்கள் வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகளைத் தம் குருவாக ஏற்றவர். திருப்புகழ் பாடல்களைப் பாடும் பணியிலே தம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்டார். இவருடைய கட்டுரைகள் முறையே நன்னெறிக்கு அருணகிரி, ஸ்ரீ அருணகிரியார் படைப்பில் கர்ணன், வினாவும்–விடையும், முருகவேள் பன்னிரு திருமுறை, தில்லையில் திருப்புகழ் திருவிழா, திருத்தணி திருப்புகழ்த் திருவிழா, சென்டைக் கண்டு கொண்டேன், கந்தர் அனுபூதி, விபூஷணர் சோதரி மற்றும் மேனை அரிவைக்குரிய பேரன் ஆகிய கட்டுரைகள் அடங்கிய "மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" எனும் அரிய புத்தகத்தை அடியவர்கள் படித்துப் பயனடைய வேண்டும். திருவாளர் மு. அருணகிரி அவர்களின் கட்டுரைகளில் வரும் அனைத்தும் கற்கண்டாக, கனிரசத் தேனாக இனிப்பவை. அடியார்களுக்கு இது ஓர் அஞ்சறை பெட்டியாகும் என்றால் மிகையாகாது. அவர் பரமகுரு அருணகிரிநாதர் மேல் அவருக்குரிய ஆழ்ந்த மதிப்பும், திருப்புகழ் அமைந்துள்ளதை விளக்கும் ஆற்றலும் போற்றுதலுக்குரியவை. நன்னெறிக்கு அருணகிரி என்ற கட்டுரையில் இது யாரும் கேட்டிராத அவர் கூறும் விளக்கங்கள் அருமையானவை. நோய்களைப் பற்றிக் கூறுகையில் இருமல், உரோகம், முயல்கன் வாதம் என்ற பாடல் சிந்தனைக்குரியவை. அருணகிரியார் வாழ்ந்த காலத்தில் அரசர்களும், போர் வீரர்களும், மக்களும் சுகபோக வாழ்க்கையில் வாழ்ந்ததையும், பக்தியில் மனம் செலுத்தாத நிலையை ஆசிரியர் அழகாக விளக்குகிறார். சிற்றின்ப நோய் தற்காலத்தில் திரைப்படம் மூலமாகவும், சுவரொட்டி மூலமாகவும், மக்களை இன்னும் தொடர்ந்து தொல்லை கொடுத்து வருவதை ஆசிரியர் அழகாக விளக்குகிறார். அவர்களுக்கு நற்கதி வேண்டுமென்ற நன்னெறிக்குச் செல்ல அருணகிரி சுவாமி பாடிய திருப்புகழைப் பாடுவதைத் தான் குறிப்பிட்டுள்ளவை மிக அருமை. அருணகிரி மக்கள் குறைபாடுகளைத் தாமே ஏற்று முருகப் பெருமானிடம் விண்ணப்பித்ததோடு இருக்காது மக்களுக்கும், இறைவனுக்கும் ஓர் இணைப்பு பாலமாக இருந்து தாம் பெற்ற பேரின்பத்தைக் கூறி மக்களுக்கு ஏற்ற வகையில் பாடியுள்ளார் என்பதைக் கோடிட்டுக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

அடுத்து "ஸ்ரீ அருணகிரியார் படைப்பில் கர்ணன்" என்ற கட்டுரையில் கந்தரலங்காரத்தில் 'தடுங்கோள் மனத்தை, விடுங்கோள் வெகுளியை' என்ற

பாடல் துரியோதனனுக்குப் பாடப்பட்டதுபோல மக்களுக்கு வழங்கும் நான்கு கட்டளைகள் என்பதைத் ஆசிரியர் குறிப்பால் உணர்த்துவது ரசிக்கத்தக்கது, துதிக்கத்தக்கது.

அதேபோன்று 'வினாவும்– விடையும்' என்ற தலைப்பிலுள்ள கட்டுரைகள் திருப்புகழ் உள்ள கையிருப்பிலே இருப்பவலே உள்ள அவலைப் போன்றது. அது முருகனடியார்களுக்கு அருணகிரியார் கொடுத்த சொல் அவல் என்று குறிப்பிடுவதை இதுவரையில் நான் கேட்டதேயில்லை. இது திருப்புகழ் மாமணி அருணகிரி அவருடைய அருமையான சொல்லாற்றலை எடுத்துக்காட்டுகிறது. அதேபோல இராவுத்தன் பதத்திற்கு இவர் கூறும் விளக்கம் அருமையிலும் அருமை.

'முருகவேள் பன்னிரு திருமுறை' கட்டுரையில் ஒரு முறை அன்பினால் முருகனைப் போற்றி உருகி,

"முருகா என ஓர் தரம் ஓதும் அடியார்
முடிமேல் இணைதாள் அருள்வோனே"

என்பதை அருணகிரிநாத சுவாமிகள் தரும் அத்தாட்சிப் பத்திரம் என்பது அருமை.

அதேபோன்று 'திருப்பரங்குன்றம்' கட்டுரையில் அதனுடைய மகிமையும் சுவைக்கத்தக்கக் கட்டுரையாகும்.

'தில்லையில் திருப்புகழ் திருவிழா' என்ற கட்டுரையில் அவர் குறிப்பிடும் சரித்திர நிகழ்ச்சிகள் சிந்தனைக்குரியவை.

'திருத்தணித் திருப்புகழ் திருவிழா' என்ற கட்டுரையில் முருகப் பெருமானை ஆண்டுதோறும் ஒவ்வொரு ஜனவரித் திங்கள் 1ஆம் தேதி அடியவர்கள் சென்று வணங்கும் வரலாற்றைக் கூறும்போது உள்ளம் எல்லாம் பூரிக்கிறது. தன்னுடைய குருநாதரான ஸ்ரீ வள்ளிமலை திருப்புகழ்ச் சச்சிதானந்த சுவாமிகளை மூல புருஷராகப் போற்றுவதும் அவருடைய பெருமைகளை ஆசிரியர் கூறும்போது இவர் முருகப்பெருமான்மேல் கொண்ட ஆழ்ந்த பக்தியையும், தம் குருநாதர் மேல் கொண்ட அளவற்ற பக்தியை இக்கட்டுரை மூலம் எடுத்துக் காட்டுகிறது. பொதுவாக மக்கள் புது வருடத்தில் உயர் அதிகாரிகளைப் பழங்களோடும், மாலைகளோடும் சந்திப்பது வழக்கம். இவை இப்பொழுதும் நடந்து வருகிறது. அதற்கு மாறாக எல்லோருக்கும் துரையாக விளங்கிக் கொண்டிருக்கிற முருகப் பெருமானை ஆண்டின் தொடக்கத்தில் திருத்தணி சென்று, 365 படிகளிலும் திருப்புகழ் பாடித் துதித்து ஏழைகளுக்கும்,

அடியார்களுக்கும் நல்ல அறங்களைச் செய்ய வகுத்த தன்னுடைய குருவின் நெறியைப் போற்றிப் புகழ்கின்றார் ஆசிரியர். பொன் எழுத்துகளால் போற்ற வேண்டிய அருமையான வரலாற்று நிகழ்ச்சி இது.

'செண்டைக் கண்டு கொண்டேன்' என்ற கட்டுரை மகாபாரத நிகழ்ச்சியிலிருந்து ஆசிரியர் கூறும் அழகான விளக்கங்கள் அருமை.

அதேபோல 'கந்தர் அனுபூதியில்' ஆசிரியர் காதலி காதலனுக்குக் கூறுவது போல சுவையும் பக்தியும் பொருந்திய கருத்துகளை அருணகிரியார் பாடிய கந்தரனுபூதியில் படிக்கக் காணலாம். அனுபூதி என்பது 'அருட் பிரசாதம்' என்று கூறுவது மிக அழகான விளக்கம்.

'விபீஷணர் சோதரி' என்ற கட்டுரையில் சுங்கமந்திரன் என்ற அரசனுக்குப் பிறந்த மகன் குணசீலன், குருவின் மகள் சுமதி, ஆதிசேடன் ஆகியோர் மறுபிறவியில் எவ்வாறு விபீஷணனாக, சூர்ப்பணகையாக, மற்றும் இலக்குவனாகப் பிறந்தார்கள் என்ற வரலாற்றுச் சிறப்பு மிகுந்த செய்தியை ஆசிரியர் நெஞ்சைத் தொடும் வகையில் விளக்கியிருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது.

'மேனை அரிவைக்குரிய பேரன்' என்ற கட்டுரையில் நம்முடைய ஆசிரியர் நக்கீரர், கச்சியப்ப சிவாச்சாரியார் ஆகிய பெரும் புலவர்களை எல்லாம் எவ்வாறு அருணகிரிநாதர் தமது திருப்புகழ் மூலம் மிஞ்சி விட்டார் என்பது இக்கட்டுரையில் எடுத்தியம்பியிருக்கும் விதம் சிந்தைக்கு விருந்தாகும். பார்வதியின் தாய் மேனை ஆகவே முருகன் அவருக்குப் பேரன் என்றும் சிவபெருமான் காரைக்காலம்மையாரை 'அம்மா' என்று குறிப்பிடுவதால் முருகப் பெருமானுக்குக் காரைக்காலம்மையார் பாட்டி என்று கூறுவது எத்தனை பேருவகை அளிக்கிறது.

திருப்புகழ் மாமணி திருவாளர் மு. அருணகிரி அவர்கள் ஆறுமுகன் ஆண்டவன் மேல் அளவற்ற பக்தி உள்ளவர். ஆலய வழிபாட்டில் இந்த தள்ளாத வயதிலும் பக்தி செலுத்துவதில் தள்ளாது தொடர்ந்து நிற்பவர். ஆன்மீகப் பெரியவர், இனிமையும், இளமையும் இயற்கையோடு இயைந்து கட்டுரைகள் வழங்கும் பண்பாளர். இவருடைய கட்டுரையில் பல நிகழ்ச்சிகள் மின்னுகின்ற பொன்போல உள்ளன. இவர் நமக்கு வழங்கும் நூலில் எடுத்துக்காட்டுகள் அமுதமாக, எண்ணி எண்ணிச் சுவைக்கத்தக்கவை. பன்னிருகை பெருமானின் அருமையான திருப்புகழ் அமுதம் படித்து சுவைத்துக் களித்து நமக்கு அருமையான கட்டுரைகள் மூலம் வழங்கிய மெய்யன்பர் திரு. அருணகிரி அவர்களுக்கு என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தையும், வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**தென்கச்சி கோ. சுவாமிநாதன்** B.Sc. (Agri.). I.B. (P) S

முன்னால் துணை நிலைய இயக்குநர்,
சென்னை வானொலி நிலையம்,
சென்னை-600 004.

## அணிந்துரை

*அன்பே சிவம்,*

*அன்பும் சிவமும் வேறு வேறு என்று நினைக்கிறவர்கள் அறிவில்லாதவர்கள் என்கிறார் திருமூலர். இத்தகைய அன்புக்கு ஏராளமான வடிவங்கள் உண்டு.*

*எளியவர்கள்மீது காட்டப்படுகிற அன்புக்கு இரக்கம் என்று பெயர். நண்பர்களிடையே காணப்படுகிற அன்பு நேசம். உறவினர்களிடையே உள்ள அன்பு பாசம். கடவுள் நம்மீது காட்டுகிற அன்பு கருணை. கடவுள்மீது நாம் காட்டுகிற அன்பு பக்தி.*

*மனிதர்களைப் பொருத்தவரையில்....*

*அன்பின் உன்னதமான ஒரு நிலை பக்தி. அது எப்படி என்பதைத் தெரிந்து கொள்ள உங்களுக்கு ஆசையாக இருக்கிறதா? அப்படியானால் திருப்புகழ் மாமணி மு. அருணகிரி அவர்களின் நூலை நீங்கள் படிக்க வேண்டும். "மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" என்கிற அழகான தலைப்பில் ஓர் அற்புதமான புத்தகத்தை அவர் நமக்கு வழங்கியிருக்கிறார்.*

*இந்நூலாசிரியர் வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளின் சீடர். எனவே இவர் எழுத்துகளில் திருப்புகழின் மணம் கமழ்வதில் வியப்பேதுமில்லை. ஆன்மீக உலகின் அழகையும் அற்புதங்களையும் புரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் அவசியம் படிக்க வேண்டிய நூல் இது. அதற்கு வாய்ப்பளித்திருக்கிற அன்பு நண்பர் மு. அருணகிரி அவர்களுக்கு எனது இதயபூர்வமான*

**கலைமகள்**

நெ.1, சம்ஸ்கிருதக் கல்லூரி தெரு,
மயிலாப்பூர், சென்னை-600 004.
தபால் பெட்டி எண் : 604
தொலைபேசி : 2498 3099 / 2498 3799

# அணிந்துரை

திருப்புகழ் மாமணி திரு. மு. அருணகிரி அவர்கள் எழுதியுள்ள **"மதுரங்கனிந்த திருப்புகழ்ப் பாமாலை"** எனும் நூல் ஆன்மீகத்தில் அக்கறையுள்ளவர்கள் அவசியம் படித்துத் தெளிவு பெற வேண்டிய நூல் இது. "கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயமே" – என்பது அப்பரது வாக்கு. திரு. மு. அருணகிரிக்குத் தெப்பகமாக முதுமையிலும் உதவியது கந்தரனுபூதி பாடல்களாம்! முருகப் பெருமானை நாளெல்லாம் நினைத்து உருகும் இப்பெரியவர் "பித்தா பிறைசூட பெருமானே" என்ற கட்டுரையில் சுந்தரரை நமக்கு நன்றாகவே படம் பிடித்துக் காட்டுகிறார்.

மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் திருச்சியிலிருந்து திருவானைக்காவிற்குச் சென்று கொண்டிருந்த சமயம் அகிலாண்டேஸ்வரிமீது பாடிய பாடலையும் அதன் கருத்தையும் நூலில் ரத்தினச் சுருக்கமாகத் தந்துள்ளார்.

அருணகிரிநாதரின் புகழைப் பரப்பி வரும் இந்த பரம பக்தர் நெற்றியில் திருநீறு அணிந்து கையில் கிங்கிணியுடன் திருப்புகழைப் பாட பாட வாய் மணக்கும், மனம் நிம்மதியடையும். இவரின் இந்தப் புதிய நூல் முயற்சி முருக பக்தர்களுக்குத் தெவிட்டாத வரப்பிரசாதம். திருச்செந்தூர் ஆண்டவன் இவருக்கு நிறைய ஆயுளைக் கொடுத்து திக்கெட்டும் அவன் புகழ் பரப்ப இவருக்கு வலிமையைக் கொடுக்கட்டும். நல்ல நூல் ஆகவே இதுவும் ஒரு நன்னூல்தான்!

முனைவர் த. அமிர்தலிங்கம்,
எம்.ஏ., பி.எச்.டி.,
ஆசிரியர், திருக்கோயில்
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை
சென்னை- 600 034.

# அணிந்துரை

"உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் எம்பெருமான்" என்று வாழ்ந்திருந்த ஆழ்வார் பெருமக்களை நாம் நன்கு அறிவோம்.

அவ்வாறே, "உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் குமரவேள் திருப்புகழ்" என்று கொண்டாடி வாழ்பவர்தாம் ஸ்ரீ வள்ளிமலை திருப்புகழ்ச் சுவாமிகளின் மெய்யடியாராம் "திருப்புகழ் மாமணி" மு. அருணகிரி அவர்கள்.

தம் தந்தையார் கா.ரா. முருகேசனார் அவர்களால் பள்ளிப் பிராயத்திலிருந்தே "திருப்புகழ் அமுதம்" ஊட்டி வளர்க்கப் பெற்றவர் இவர்.

"நாளும் இன்னிசையால் திருப்புகழ் பாடிப் பைந்தமிழையும், செவ்வேள் பரமனையும் கொண்டாடி வாழும் இவரைத் "திருப்புகழ்ச் சித்தர்" எனவும், பித்தர் எனவும் நாம் பாராட்டி மகிழலாம்.

"திருப்புகழ்ச் சித்தர்" "திருப்புகழ்மாமணி" மு. அருணகிரி அவர்கள் எழுதியுள்ள "மதுரங் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" உண்மையில் தலைப்பிற்கேற்ப தேமதுரத் தமிழமுதம் வழிந்தொழுகும் ஒப்பற்ற நூலாகவே திகழ்கின்றது.

திருப்புகழ்ச் சித்தர் மு. அருணகிரி அவர்கள் தனித்தனி முக்கனிப் பிழிந்து, சர்க்கரையும் கற்கண்டும் கலந்து, ஆவின் தீம்பாலும், தெங்கின் தனிப்பாலும் கலந்து, வடித்து ஒன்றாய்க் கூட்டித் தெள்ளி எடுத்த "மதுரங் கனிந்த திருப்புகழ்ப் பாமாலையை" நமக்கெல்லாம் இந்நூல் வழியாகப் பருகக் கொடுத்துள்ளார்.

சிவனார் சூடியுள்ள பிறைநிலவினை அருணகிரிநாத சுவாமிகள் "பூரணமதான திங்கள்" எனப் பாடியிருப்பது ஏன்? என்பதை நயம்பட விளக்கி இவர் "திருக்கோயில்" இதழில் எழுதியிருந்த கட்டுரை வாசகர்கள் பல்லோராலும் மிகப் பாராட்டிப் புகழப்பட்டது என்பதை நான் பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒரு வட்டவடிவமான சக்கரத்தில் ஒரு சிறிய மின்சாரப் பல்பைப் பொருத்தி எரியச் செய்து, அச்சக்கரத்தை மிக வேகமாகச் சுற்றினால் பார்ப்பவர்களுக்குச் சக்கரம் முழுவதும் ஒளிமயமாகத் தெரியும், அதைப்போன்று

சிவபெருமான் உமாதேவியார் காண மிகவேகமாகச் சுழன்று திருநடனம் புரியும்போது பிறைநிலவு பூரணநிலவாகத் தெரிகின்றது. இக்கயிலாய நடனக் காட்சியைத் தம் கற்பனையில் கண்டு இன்புற்று

"பூரண மதான திங்கள் சூடும் அரனார்கிடங்கொள்
பூவை யருளால் வளர்ந்த முருகோனீன"

என அருணகிரிநாத சுவாமிகள் பாடியுள்ளார். என நம் திருப்புகழ்ச் சித்தர் பாராட்டிய கருத்தை மெய்மறந்து பாராட்டாத திருக்கோயில் வாசகர்களே இல்லை என்று கூறலாம்.

இவர் திருக்கோயில் இதழில் வழங்கிய "கந்தர் அனுபூதி", "இமாலயச் செலவு", "செண்டைக் கண்டு கொண்டேன்" போன்ற கட்டுரைகள் இவர்தம் நுன்மாண் நுழைபுலத்தைத் தெளிவுபடுத்துவனவாகும். இவை போன்ற அருமையான – நயம்மிக்க திருப்புகழ்க் கட்டுரைகள் மிகப்பலவற்றை எங்கள் "திருக்கோயில்" இதழுக்கு வழங்கிய "திருப்புகழ்ச் சித்தர்" என் இனிய வேண்டுகோளை மனமுவந்து ஏற்று "மதுரங் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" நூலை வெளியிடுவது என்னைப் பெரிதும் மனம் மகிழச் செய்கின்றது.

திருப்பாற்கடலில் அமுதம் தோன்றியதைப் போல், திருப்புகழ்க் கடலில் அமுதம் தோற்றுவித்துள்ளார் திருப்புகழ்ச் சித்தர் மு. அருணகிரிநாதர் அவர்கள்.

இந்நூல் அமுதம் மெய்யன்பர்களுக்குத் திகட்டாத தெள்ளமுதாக இனித்திடும் என்பதில் ஐயமில்லை.

"மதுரங் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" முருகனடியார்கள் ஒவ்வொருவரும் பயிலவேண்டிய பஞ்சாமிர்த – தேவாமிர்த அருள்நூல். அனைவரும் பயின்று அறுமுகப் பரமன் பேரருள் பெற்று இன்புறுமாறு அன்பினில் வேண்டுகின்றேன்.

"மதுரங் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" நூல் பவளவிழா விரைவில் காணவுள்ள "திருப்புகழ்ச் சித்தர்" மு. அருணகிரி அவர்களுக்குப் பற்பல விருதுகளும், சிறப்புக்களும் பெற்றுத் தரும் என்பதில் ஐயமில்லை.

அறுமுகன் திருப்புகழ், அவனியெலாம் தழைக்கச் செய்து "திருப்புகழ்ச் சித்தர்" மு. அருணகிரி அவர்களை "இன்னம் ஒரு நூற்றாண்டு இரும்" என மனமார வாழ்த்துகின்றேன்.

அன்புள்ள,

**த. அமிர்தலிங்கம்**

**B. BALASUBRAHMANIYAN**
Adjunct Instructor
Music Department
Wesleyan University
Middletown, CT 06459 USA
☎ : (001) 860-685-2577 (Off.)

Date : 16-08-2004

Anbulla Arunagiri Ayya Avargalukku,

We are fine here. Hope you are doing well. I was so impressed by your articles on Tiruppugazh and other saint composers. I am not fit enough to talk or write about your writings. I am enjoying your writings, especially your Tamil Language flow, it is incredible. But I also have to fullfil your wishes, so that I will send a small write-up for your publication. Still I feel uncomfortable to write this, since the great scholars are going to contribute their valuable contents. Your articles about Thiruppugazh are wonderful. It is so informative. I did't know this much informative about Thiruppugazh. Your mind is so analytical. I would like to research Thiruppugazh deeply with your full co-operation. No doubt the book "Mathuran Kanintha Thiruppugazh Pamalai" will be guide line to the devotees.

With Regards,
BALU

# முகவுரை

அடியேன் பள்ளியில் பயிலும் பருவத்திலிருந்தே, என் பெற்றோர்களின் அன்புக்குக் கட்டுப்பட்டு வள்ளிமலை திருப்புகழ் மகானைக் குருவாக ஏற்கும் பாக்கியம் பெற்றேன். வள்ளிமலையிலேயே குருகுலவாசத்தின்போது, திருப்புகழ்ப் பாடல்களை, குருநாதரால் பாடிக் காட்டிய இசையிலேயே பாடவும் பாக்கியம் பெற்றேன்.

பள்ளி மாணாக்கனாக இருந்தபோதே, திருப்புகழில் ஆர்வம் இருந்ததைக் கண்ட, குருநாதர், "உமக்குத் திருப்புகழே நிரந்தர பொக்கிஷம்" என ஆசீர்வதித்ததின் உட்கருத்தைப் பின்னாளில் இல்வாழ்க்கையின் போது உணர முடிந்தது.

திருப்புகழ் சம்பந்தமான கவிகளுக்கு என் தந்தையார், தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்களிடம் பாடம் கேட்டு வரும் நாளில் அடியேனும் உடனிருப்பது வழக்கம். இத்தொடர்பே திருப்புகழ்பால் இருந்த ஆர்வம் தளிர் விட்டு மலர ஆரம்பித்தது. இத்தனைக்கும் மூலபுருஷராக விளங்கிய தணிகைமணி, வ.சு.செ. பிள்ளை அவர்களைச் சிரம் தாழ்த்தி நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியேன், திருப்புகழில் வரும் ஓர் அடியை முத்திரையாகக் கொண்டே அனைத்து ஆன்மீகக் கட்டுரைகளையும் எழுதி வரலானேன்.

ஏன் பல ஞானிகளின் பாடல்களையே தலைப்புக் கொடுத்துக் கட்டுரை எழுதினால் என்ன, என நண்பர்கள் கேட்டுள்ளனர். அதில் பிழையொன்றுமில்லை. மறைந்த ஏனைய பெரியோர்களிடத்தில் அன்பு சிறிதும் குன்றாது வணக்கம் தெரிவித்தபோதிலும், என் பெற்றோர்களுக்கு, அடியேன்தானே திவசம் (திதி) கொடுக்க இயலும் எனக் காரணம் காட்டினேன்.

இதனைக் கருத்தில் கொண்டே திருப்புகழையே கருவூலமாகக் கொண்டு, அனைத்து அருளாளர்களால் கூறப்பட்ட ஆன்மீகக் கருத்துக்களைப் பாகுபாடின்றி எழுதி வர ஆர்வம் உண்டாயிற்று. கணவன் பொருட்டன்றி ஏனையோர்களை நேர்முகமாக வணங்கா பத்தினிப் பெண்டிரைப்போன்று, அருணகிரியார் தாம் பாடிய கவிகளனைத்திலும், எல்லா மூர்த்தங்களையும் புகழ்ந்து பாடுவதில் வித்தியாசம் பாராட்டாது கடைசியில் முருகனோடு பொருத்திப் பாடல்களை முடிப்பதைக் காணலாம்.

அடியேனது கட்டுரைகள் அனைத்தையும், "அம்மன் தரிசனம்", "கலைமகள்", "சப்தகிரி", "திருக்கோயில்" போன்ற மாத இதழ்களில் வெளியிட உதவிய அனைத்து ஆசிரியப் பெருமக்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

"திருக்கோயில்" இதழ் ஆசிரியர் திரு. த. அமிர்தலிங்கம், M.A.. Ph.D., அவர்கள் அடியேனது திருப்புகழ் சம்பந்தமான கட்டுரைகளை ரசித்து, "திருக்கோயில்" மாத இதழில் வெளியிட்டதோடு, அடியேனை, திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்குக் கடிதம் எழுதி புத்தகமாக வெளிவர வழிகாட்டிய மூலபுருஷராவார்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் அடியேனது "மதுரங் கனிந்தத் திருப்புகழ்ப் பாமாலை"யைப் புத்தகமாக வெளியிட அனுமதி அளித்ததோடு, அச்சிடும் செலவினையும் ஏற்றுக்கொண்டனர். குசேலருக்கு, கிருஷ்ணனே சகல செல்வமிக்க வாழ்வை அனுக்கிரகித்தது போன்று அடியேனுக்கும் அருட் செல்வத்தை வழங்க வெங்கடாசலபதியே திருவுள்ளம் கொண்டான் போலும் எனக் கருதுவதில் பிழை என்ன இருக்கப் போகிறது.

இப்புத்தகத்திற்கு அணிந்துரை வழங்கிய, குஜராத் மாநில தலைமை நீதிபதி (ஓய்வு) திரு. P.R. கோகுலகிருஷ்ணன், தமிழ்வளர்ச்சித் துறை சிறப்புக்காரியதரிசி திரு. D. சந்திரசேகரன், I.A.S., தலைமைச் செயலகம், திரு. தென்கச்சி கோ. சுவாமிநாதன், கீழாம்பூர் - கலைமகள் ஆசிரியர், முனைவர் த. அமிர்தலிங்கம், ஆசிரியர் - திருக்கோயில், திரு. B. பாலசுப்ரமணியம், இசைக்கல்லூரி பேராசிரியர், அமெரிக்கா, போன்றோர்களுக்கும் அடியேன் சிரம் தாழ்த்திக் கரம் கூப்பி நன்றி தெரிவிக்கிறேன்.

"மதுரங் கனிந்த திருப்புகழ்ப்பாமாலை" எனும் நூலில் வந்துள்ள அனைத்து ஆன்மீகக் கட்டுரைகளையும் சிறிதும் மனம் தளராது, பிழைகளைத் திருத்தி (எவ்வித பிரதிபலனையும் எதிர்பாராது) உதவிய திரு. M.R. சொக்கலிங்கம், M.Sc. கூடுதல் இயக்குனர் (ஓய்வு), தடய அறிவியல் துறை, அவர்களுக்கு மிக்க நன்றி. மேலும், அனைத்து கட்டுகரைகளையும் சீர்படுத்தி யாவராலும் பெரிதும் பாராட்டும் வகையில், சிறப்பான முறையில் அச்சிட்டுத்தந்த மூவேந்தர் அச்சகத்தின் உரிமையாளர் திரு. கவியரசு முத்து அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

என்றென்றும் என்வாழ்நாளில் மறக்க இயலாத தொண்டாகவே கருதுகிறேன். உரிய நேரத்தில், சீரிய முறையில் அச்சிட்டுள்ளது யாவராலும் போற்றப்படுவதோடன்றி, அன்னாரது நிறுவனமும் மென்மேலும் சிறப்போடு பல அரிய கருத்துக்களடங்கிய நூல்களை வெளியிட இறைவனிடம் இறைஞ்சுகிறேன்.

நன்றி!

இப்படிக்கு,

திருப்புகழ் மாமணி மு. அருணகிரி

(ஸ்ரீ வள்ளிமலை குருநாதரின் சீடர்)

# பொருளடக்கம்

# 1. பட்சணம் எனக்கொள் ஒரு விக்கின சமர்த்தன்

விநாயகப் பெருமானை முழு முதற் கடவுளாகப் போற்றி வணங்கி வருவது இந்து மதம், தொல்காப்பியம் காலம் தொட்டு எல்லாக் காவியங்களும், சங்க நூல்களும் விநாயகரது துதியைக் கொண்டே பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. முதன் முதலாக வரும் எந்த ஒரு விழாவோ சடங்குகளோ தொடங்குவதற்கு முன்னம், எந்த விக்னமும் நேரிடாதிருக்க, முதற் கடவுளான விநாயகப் பெருமானைப் போற்றித்தான் பிறகு ஏனைய இஷ்ட தெய்வங்களுக்குப் பூசைகளைச் செய்வது வழக்கம்.



கணேசரை நம் நாட்டில் மட்டுமல்ல, உலகம் பூராவுமே கொண்டாடி வந்துள்ளனர். கணேசரை நாம் 'கணேஷ்' என அழைப்பது போன்று கிரேக்கர்களும் ரோமானியர்களும் ஐரோப்பாவில் 'ஜேனஷ்' என்ற தெய்வத்தை முதல் முதலில் வணங்கி விட்டு, பிறகு ஏனைய சடங்குகளை நிகழ்த்தி வந்துள்ளனர். இந்த கணேஷ்தான் அங்குள்ளவர்களால் ஜேனஷ் என்பதாக அழைக்கப்பட்டு வந்ததாகச் செய்திகள் தெரிவிக்கின்றன. அண்மையில் கம்போடியா விலும் இதனைக் கண்டுபிடித்துள்ளதைப் பத்திரிகை களிலும் வெளிவந்துள்ளன. ஜேனஷ் என்ற தெய்வத்தின் அடிப்படையில் தான், ஆங்கிலேயர்கள் வருடத்திற்கு 12 மாதம் என ஏற்படுத்தி முதல் மாதத்தை ஜேனஷ் என்ற தெய்வத்தின் பெயரால் அமைக்க எண்ணி, ஜனவரி எனப் பெயர் வைத்தனர். ஜேனஷ்தான் பிற்காலத்தில் ஜனவரி எனக் கூறப்பட்டதாக வரலாறு அறிவிக்கிறது. இதனால் ஏனைய தெய்வங்களுக்கு இல்லாத தனிச் சிறப்பு விநாயகப் பெருமானுக்கு ஏற்பட்டது.

எல்லாத் தெய்வங்களுக்கும் விழாக்கள் பல இருந்தாலும் விநாயகருக்கு மட்டும் வருடத்தில் ஒரே ஒரு நாள் சதுர்த்தி விழா கொண்டாடிப் பெருமை சேர்த்தனர் ஆன்றோர்கள்.

எல்லாத் தெய்வங்களையும் பொதுவாக ஒரே பாணியில் வணங்கும் விதத்தினை ஏற்படுத்திக் கொண்டபோதிலும், விநாயகருடைய சந்நிதானத்தில் மட்டும் வணங்க இரு கரங்களாலும் செவிகளைப் பற்றிக்கொண்டு சிரத்தில் குட்டிக் கொண்டும், தோப்புக்கரணம் போடும் பாங்கினையும் நம் முன்னோர்கள் அறிவித்துள்ளனர். இதனால் விநாயகர் மற்ற தெய்வங்களைப்போல் இல்லாமல் தனிப்பட்ட வணங்கும் விதத்தினைக் கொண்டவராவார்.

ஏனைய தெய்வங்கள் அனைத்துக்கும் பொருந்தும் விதத்தில் பொதுவாகப் படைக்கும் நிவேதன பிரசாதங்கள்போல் அல்லாது, விநாயகருக்கு மட்டும் தனிப்பட்ட வகையில் நிவேதன

வகைகளில அவ்வையார் தமது பாடலில், ''பாலும், தெளிதேனும், பாகும், பருப்பும்' இவை நான்கினை மட்டும் கூறியுள்ளபோதிலும் அதனையும் மிஞ்சிவிட்டார் அருணிகிரியார்.

பொதுவாகவே எந்த அருளாளர்களும் தாங்கள் இயற்றிய கவிகளுக்குத் தாங்களே தலைப்பு வைத்துக் கொண்டோ, அல்லது ஆன்மிகப் பெரியோர்களால் இவர்களது பாடல்களுக்குத் தலைப்பு தந்தோ வழங்கி வருவதுதான் இயல்பு. இதற்கு மாறாக, வயலூர் பொல்லாப் பிள்ளையாரே இவரது கவிகளுக்குத் ''திருப்புகழ்'' எனத் தலைப்பு தந்தது ஒரு தனிச் சிறப்பாகும். இதனைக் கருத்தில் கொண்டு அருணகிரியார் தாம் பாடிய ''பக்கரைவிசித்ரமணி'' என்னும் பாடலில் வயலூர் பொல்லாப் பிள்ளையாருக்குத் தன் பாடலில் வயலூர் பொல்லாப் பிள்ளையாருக்குத் தன்னுடைய நன்றியைச் சமர்ப்பிக்கும் விதத்தில் 21 வகை நிவேதனப் பொருள்களின் பட்டியலை இப்பாடலின் பின் நான்கு அடிகளில் கூறியுள்ளார். இவர்க்கு முன்பும் சரி, பின்பும் சரி எவரும் இது போன்று பட்டியலை விநாயகருக்கு அமைத்துப் பாடியதாக எங்கும் குறிப்புகள் காணவில்லை. இனி பின் பகுதி நான்கு அடிகளையும், அதன் பொருளையும் பார்ப்போம்.

பாடலின் பின் 4 அடிகள் கீழே தரப்பட்டுள்ளன.

*இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப் பருப்புடனெய்*
*எட்பொரி அவல் துவரை இளநீர்வண்*
*டெச்சில் பய றுஅப்ப வகை பச்சரிசி பிட்டுவெள*
*ரிப்பழம் இடிப்பல்வகை தனிமூலம்*
*மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெ னக்கொளொரு*
*விக்கிறச மர்த்தனெனும் அருளாழி;*

1. இக்கு – கரும்பு
2. அவரை – அவரை
3. நற்கனிகள் – நல்ல பழங்கள்

4. சர்க்கரை – சர்க்கரை
5. பருப்புடன் – பருப்பு
6. நெய் – நெய்
7. எள் – எள்
8. பொரி – பொரி
9. அவல் –அவல்
10. இளநீர் – இளநீர்
11. வண்டு எச்சில் – வண்டின் எச்சில் எனப்படும் தேன்
12. பயறு – பயறு
13. அப்பவகை – அப்ப வகைகள்
14. பச்சரிசி – பச்சரிசி
15. பிட்டு – பிட்டு (அரிசி மாவினால் செய்யப்பட்டது)
16. வெளரிப்பழம் – வெள்ளரிப்பழம்
17. இடிப்பல்வகை – அரிசியை இடித்துச் செய்கின்ற மோதகம் கொழுக்கட்டை.
18. தனிமூலம் – ஒப்பற்ற கிழங்குகள்
19. மிக்க அடிசில் – சிறந்த உணவு வகைளான சித்தாரன்னம்
20. கடலை – கடலை
21. துவரை – துவரை

'பக்ஷணம் எனக்கொள் ஒரு விக்கின சமர்த்தன்' என்னும் அருளாழி – பக்ஷணமாகக் கொள்ளும் ஒப்பற்ற விக்ன சமர்த்தர் எனும் அருட் கடலே.

இதனை மேலும் விரிக்கின், கட்டுரை நீளும் எனக் கருதியே இத்துடன் நிறைவு செய்கிறேன்.

# 2. திருப்புகழை
# ஓலைச் சுவட்டில் கண்டவர்!

நன்னெறியைக் கடைபிடித்துக் கரையேறிய பெரியோர்களின் வரலாறுகள் எத்தன்மையன எனத் தெரிந்து கொள்ளுதல், வாழ்க்கைக்கு மிகவும் பலன் தரக் கூடியவையாகும்.

அமரர் வ.த. சுப்பிரமணியப் பிள்ளை என்பவர் தொண்டை நன்னாட்டில் செங்கல்பட்டு அடுத்த வடக்குப்பட்டு எனும் கிராமத்தில், அமரர் திரு தணிகாசலம் என்பவருக்கும், இலக்குமி அம்மாளுக்கும், சீர்கருணிகர் குலத்தில், 1846–ஆம் ஆண்டு, டிசம்பர் 11–ம் தேதி, வெள்ளிக்கிழமை, கௌதம மகரிஷி கோத்திரத்தில் பிறந்தவராவர். ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த இவர், தணிகைப் பெருமானுக்கு வழி வழி அடிமை பூண்டவராவார்.

வ.த.சுப்பிரமணியப் பிள்ளை தமது சிறு வயதிலிருந்தே, நல்லாரோடிணங்கி, முன்னோர்களது நல்வழியே பற்றி வாழக் கருதினார். குடும்ப வறுமை நிலையை உணர்ந்து, உயர் கல்வி கற்க வாய்ப்பின்றி, 1863–ஆம் ஆண்டு, ஜூலை முதல் தேதியன்று எட்டு ரூபாய் சம்பளத்தில், ஆசிரியர் பணியில் சேர்ந்தார். இருந்தும், அருணகிரியார் தாம்பாடிய திருப்புகழில், ''தீயின் மேல் கிடந்து நெறியுநீள் புழுவாயினேற் கிரங்கி – அருள்வாயே'' எனும் கருத்துக்கு ஏற்ப, தணிகேசனை ''மிடிதீர – அருள்வாயே'' எனத்


வ. த. சுப்பரமணிய் பிள்ளை

துதித்து வந்தார். 1867–ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் மில்லர்துரை மூலமாக வேறிடத்தில் அதிக ஊதியம் பெற வாய்ப்பிருந்தும், தமது ரட்சகராகிய மில்லர் துரையிடமே நன்றி விசுவாசமுடன் பணி புரிந்தார். இவர், காலையில் சிவபுராணம் படிக்கும் வழக்கத்தைப் பின்பற்றி, தமது இறுதி காலம் வரை விடாது துதி செய்து வந்தார்.

இவர், மஞ்சகுப்பம் டிஸ்டிரிக் கோர்ட்டுக்கு விண்ணப் பத்தின்பேரில், 1870 ஆண்டு பிப்ரவரி முதல் தேதி மஞ்சகுப்பம் கோர்ட்டில், குமாஸ்தா வேலையில் சேர்ந்தார். இவர், கடலூர் கோர்ட்டில் குமாஸ்தா வேலையிலிருந்தபோது, 1871–ஆம் ஆண்டு சிதம்பர தீட்சதர்களுக்கும், ஆலய நிர்வாகிகளுக்கும் நிகழ்ந்த வாதத்தில் தீட்சதர்கள் தங்களுக்குள்ள ஆலய உரிமையை உறுதிப்படுத்த, மேற்கோளாகப் பல நூல்களிலிருந்தும் பாடல்களை மேற்கேளாக எடுத்துக்காட்டிய தோடு, சிதம்பரம் திருப்புகழ் பாடல் ஒன்றில், 7வது அடியில்,

*" வேதநூன்முறை வழுவா மேதினம்*
*வேள்வி யாலெழில் புனைமூவாயிர*
*மேன்மை வேதியர் மிகவே பூசனை – புரிகோவே"*

என வரும், "தாது மாமலராலே" எனும் முதலடியைக் கொண்ட பாடலையும் எடுத்துக்காட்டியிருந்ததாகவும், அப்பாடலின் தேனொழுகும் இனிமை இவர் தம் மனதை மிகவும் கவர்ந்து, திருப்புகழில் ஆசையை உண்டுபண்ணவே, தில்லைக் கூத்தன் திருவருள் எண்ணி எண்ணி உருகினார். நம்பியாண்டார்

நம்பியின் துணை தேவாரத்தை உலகுக்கு வெளிவரச் செய்தருளிய நடனசபாபதியே, மேலை வாயிலில் வீற்றிருக்கும் முருகப் பெருமானே, ஓலைச்சுட்டில உள்ள திருப்புகழையும் புத்தக வடிவில் உலகில் பரவ, வ.த. சுப்பரமணியம் பிள்ளையை, காரணப் புருஷராகத் தோற்றுவித்தான் போலும் என நினைக்கத் தோன்றுகிறது. இதனால் தில்லையின் சிறப்பு நன்கு விளங்குகிறது. அதோடன்றி சிதம்பரத்தைச் சேர்ந்த வீரநாராயணபுரத்தில் பிறந்த நாத முனிகளால் நாலாயிரத் திவ்வியபிரபந்தம், நம்மாழ்வார் அனுக்ரகத்தால், அவரது பரம்பரையைச் சேர்ந்தவர்களின் உதவியைக் கொண்டு, ஆழ்வார்கள் பாடல்களை ஒன்று சேர்த்து, 1866–ஆம் ஆண்டு, புத்தக வாயிலாக மக்களுக்குக் கிடைத்தது. இவ்வாறு தேவாரமும், திருப்புகழும், நாலாயிரத் திவ்ய பிரபந்தமும் தோன்ற சிதம்பரம் எனும் தலமே துணையாயிருந்தது.

1871–ஆம் ஆண்டு முதல், திருப்புகழாகிய ஓலைச்சுவடி களைச் சேர்க்க ஆரம்பித்தார். 1876–ஆம் ஆண்டு, ஆறுமுக நாவலர் மூலம் இயற்றப்பட்ட புத்தகத்தில், 6 திருப்புகழ் பாடல்கள் கிடைத்தன. 1876–ம் ஆண்டு ஏப்ரல் மாதம், ''புனித வெள்ளி'' முதல் கிடைத்த ஓலைச் சுவடிகளில் உள்ள திருப்புகழ் பாடல் களைப் புத்தகத்தில் எழுத ஆரம்பித்தார். இவர்தம் வாழ் நாளில் குறைந்தது 1000–பாடல்களையாவது அச்சிட்டு வழங்க வேண்டும் என்று திருத்தணி கேசனைப் பிரார்த் தித்து வருவாரானார். 1878ம் ஆண்டு, ஜூன் 28–ம் தேதியன்று, காஞ்சி, புத்தேரித் தெருவில் வசித்து வந்த அண்ணாமலைப் பிள்ளை என்பவரால் 750 பாடல்கள் கொண்ட திருப்புகழ் ஓலைச்சுவடிகள் கிடைத்தன. செப்டம்பர் 30–ம் தேதி, சிதம்பரத்துக்கு அடுத்த பின்னத்தூர் சீனிவாஸ பிள்ளை மூலம் 400 பாடல்கள் உள்ள ஓலைச் சுவடியும், இவைகளுக்கு முன்னரே, 120 பாடல்கள் அடங்கியஓலைச் சுவடிகள் கிடைத்ததாகவும் தெரியவருகிறது.

1897–ல், நவம்பர் 19–ம் தேதி,மதுரை வந்தடைந்ததும், அதியற்புதமாக ராகத்துடன் திருப்புகழ் பாடும் திறமை வாய்ந்த, பேறையூர் ஜமீன்தார் நாகையாசாமி தும்மிச்சி நாயகர்

அவர்களுடைய நட்பு கிடைத்தது. அவர் பாடும் பாடலைக் கேட்டு ரசித்தார். தக்க தமிழ்ப் புலவர்களைக் கொண்டு, கிடைத்த எல்லாப் பாக்களையும், உரிய முறையில் தொகுத்து, 1895–ஆம் ஆண்டு முருகனுக்குரிய 6 திருப்பதிகளையும் கொண்ட பாடல்களை முதல் பாகமாகவும், பஞ்சபூதத் தலங்கள், ஏனைய தலங்களின் பாடல்களைச் சேர்த்து, 1902–ஆம் ஆண்டு, இரண்டாம் பாகமாகவும், பொதுப் பாடல்கள், திருவகுப்பு கந்தரலங்காரம், கந்தரந்தாதி, அனுபூதி போன்ற பாடல்களை 1906–ஆம் ஆண்டு, மூன்றாம் பாகமாகவும் வெளிவரச் செய்தார். 1909–ஆம் ஆண்டு, உடல் நலிவுற்று, அதிகாலை தணிகேசனை நினைத்துக் கண்ணைச் சிறிது திறந்ததும், முருகப்பெருமானே இவருக்கு மோட்ச வாயில் கதவைத் திறந்து காட்சி கொடுத்து, ‘பெற்றலும் பிறந்தேன், இனி பிறவாத தன்மை வந்தெய்தினேன்'' எனும் தேவாரப் பாடலுக்கு ஏற்ப, இறைவன் திருவடி நிழலை அடைந்தார். இவர்தம் வாழ் நாளில் திருப்புகழ் ஓலைச்சுவடிகளைக் சேகரித்து, அவைகளை ஒழுங்குபடுத்தி அச்சிட்டுத் தந்ததன் பயனே, இன்று நாம் போற்றியும், பாடியும் வரும் பாக்கியத்தைப் பெற்றோம்.

வ.த. சுப்பிரமணிய பிள்ளையின் ஆத்மா இறைவன் அடிசேர்ந்து, மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார் எனப் போற்றிச் செய்வோமாக. அன்னாரது குடும்பத்தினரோடு நாமும், அன்னாரின் இழப்புக்கு ஆழ்ந்த அனுதாபத்தைப் பகிர்ந்து கொள்வோம். தம் தந்தையாரின் மறைவைக் குறித்து அன்னாரின் மகனார், தணிகை மணி வ.சு. செங்கல்வராய பிள்ளை, அவர்களால் பாடப்பட்ட பாடல் பின்வருமாறு :

*'' தில்லை மூவாயிரவர் தம்பெருமை சொல்லும் திருப்புகழின்*
*அழகதனைக் கண்டுளி கொண்டே*
*எல்லையி லாப்பேரின்பத்தோடு ஏடு தேடி எந்தை திருப்புகழதனில்*
*பதின்மூன்று நூறிங்கு*
*ஒல்லை அச்சிட்டுலகினர்க் கிங்குதவிய பேராளர் உயர்குண*
*சுப்ரமணிய நிறைதவத்துச் சீலர்*
*நல்லாரவர் சீர்பாதம் நாளும் நினைந்தேத்தி நாடி வரும்*
*வினைகளை ஓடிடவெல்லோமே. ''*

# 3. திருப்புகழைக் கேட்டவர் வரலாறு

கொங்கு நாட்டின்கண், பவானி எனும் சிவஸ்தலத்துக்கு அருகில், 'பூநாச்சி' என்ற கிராமத்தில், சிதம்பர ஜோஸ்யருக்கும், இலட்சுமி அம்மாளுக்கும், 21–11–1870ல் அர்த்தநாரி என்பவர் பிறந்தார். இவர்தான் பிற்காலத்தில் வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள் என அழைக்கப்பட்டவராவார். இளமையிலிருந்தே படிப்பில் நாட்டமில்லாது, வாழ்ந்துவரும் காலத்தில், பெற்றோர்கள் திருமணம் இளமையிலேயே செய்து விட்டனர். தனது முதல் மனைவியும், குழந்தைகளும் இறந்து போகவே, வாழ்க்கையில் ஒரு வெறுப்பும் துக்கமும் உண்டாகி, மேலும் குன்மநோய் பீடிக்கப்பட்டு, பல வைத்தியங்கள் செய்தும் குணமடையாது போகவே, கொத்தனார் ஒருவர், இவரைப் பழநிக்குச் சென்று அபிஷேக தீர்த்தத்தை ஒரு மண்டலம் சாப்பிட்டு வந்தால் குணமடையும் எனக் கூறியதைக் கேட்டு, பழநிக்குச் சென்று திருமஞ்சனம் நீர் சுவாமிக்குக் கொண்டு வந்ததும், அபிஷேக தீர்த்தத்தை உட்கொண்டும் வரும் காலத்தில், நோய் சிறிது குணமடைந்ததை அறிந்தார்.

அந்தத் தருணத்தில், பழநியில் முருகன் திருத்தேரில் பவனி வரும்போது, மதுரை தேவதாஸி ஒருத்தி ''சிங்கார ரூபமயில் வாகன நமோ'' எனும் பின்சீரை, அலசி அலசிப் பாடி வந்ததைக்

கேட்ட, அர்த்தநாரிக்கு அப்பாடலில் மனம் ஈர்க்கப்பட்டு, கண்ணீர் மல்க மெய்மறந்து அனுபவித்தார். (திரு.பாடல் – வங்கார மார்பிலணி) 1908ம் ஆண்டு முதல் 1912–ஆம் ஆண்டு வரை புழநியில் இருந்த காலத்தில், தேவதாஸியினால் பாடின திருப்புகழ் பாடல்தான், இறைவனது கருணையினால் நோய் குணமடைந்து, திருப்புகழ் கற்க மனம் தூண்டியது.

இப்புத்தகம், தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்களிடம் கிடைக்கும் என்பதைக் கேட்டறிந்து புத்தகங்களை வாங்கி, பிறர் உதவியால் படித்து வரலானார். சுவாமிகள் இளமையிலேயே படிப்பில் நாட்டமில்லாது வாழ்ந்தாலும் தன் வாழ்நாளில் பெரும் பகுதியை மைசூர் சமஸ்தானத்தில் பணி செய்த போது கன்னடம் மட்டும் பேசத் தெரிந்ததாலும், தமிழில் படிக்க ஆர்வமில்லாது போயிற்று. தேவதாசியினால் பாடப்பட்ட திருப்புகழ் பாடலினால் ஈர்க்கப்பட்டது, பழநியாண்டவரது கருணைபோலும், தமிழைச் சிறிதும் படிக்கத் தெரியாத அர்த்தனாரி மனத்தால் ஈர்க்கப்பட்டது அதிசயம், இவர் தங்கி இருந்த தலமோ ''அதிசயம் அனேகமுற்ற பழநி மலை மீதுதித்த அழக'' என்று அருணகிரியாரால் புகழப்பட்ட தலமாகையால், இறைவன், உலகில் இவரைத் திருப்புகழ் பரப்பவே தோற்றுவித்தான் போலும் என நினைக்கத் தோன்றுகிறது.

பக்தி நாட்டத்திற்கு ஒரு மொழி பிரச்சனையாகத் தோன்றாது– எங்கெல்லாம் சமய உணர்வும், ஒழுக்கமும் விஞ்சிய இடத்தில் ஜாதிமத பேதங்களோ, மொழிகளோ நிற்காது, அர்த்தநாரிக்கு, குருவின் மார்க்கமாய்த் தீட்சைபெற்று, இறைபணியில் தொண்டாற்ற நினைத்து, 1912–ஆம் ஆண்டு திருவண்ணாமலைக்கு வந்து, ரமணரைக் குருவாக ஏற்க நினைத்து, அவரிடம் சென்ற போதிலும், கை கூடாமைக் கண்டு, மறுபடியும் வடநாடு யாத்திரை மேற்கொண்டு, மறுபடியும் 1914–ஆம் ஆண்டு திருவண்ணாமலையில் ரமணரைத் தரிசித்தபோது, இவரைக் கீழே சென்று சேஷாத்ரி சுவாமிகளைத் தரிசிக்கச் சொன்னார்.

அவ்வாறே சொல்லும் தருணத்தில், சேஷாத்ரி முனிவரே எதிர்பட்டு, ''வா, முருகா, உன் மந்திரம் திருப்புகழ் அல்லவா அர்த்தநாரி'' என்று சொன்னதும், அர்த்தநாரி புளகாங்கிதம் அடைந்து, அவரது பாதத்தில் வீழ்ந்து வணங்கினார். சேஷாத்ரி முனிவர் இவரை வள்ளிமலை சென்று திருப்புகழ் பரப்புவாயாக என்று உத்தரவிட, அர்த்தநாரி, குருநாதரை, உங்களது தரிசனம் மறுபடியும் அடியேனுக்கு எப்போது கிடைக்கும் எனக் கேட்டதற்கு நான், உமக்கு வள்ளிமலையிலேயே தரிசனம் தருவேன் என அருளிச் செய்ததை மனத்தில் கொண்டு, வள்ளிமலையில் 12 வருடம் தவமியற்றி, குறக்குலப் பெண்முதல் குருக்குலத்தோர் வரை திருப்புகழ் பாடம் சொல்லி வந்தார். வள்ளியின் அனுக்ரகத்தால் பாடலுக்கு ஏற்ற ராகமும் அமைத்துக் கற்றுத் தந்தார்.

4–12–1929ல் சேஷாத்ரி சுவாமிகள் மகாசமாதி அடைந்தபோது, திருவண்ணாமலை வந்து, சமாதி காரியங்களில் கலந்து கொண்டார். ஒரு சமயம், திருவண்ணாமலைசுடுகாட்டில் இருந்த வெட்டியான், கன வில், தாம் வள்ளிமலையில் உள்ள தாய்ச் சொன்ன தாகவும், அவன் நேரே வள்ளிமலை திருப்புகழ் ஆஸ்ரமத்திற்கு வந்தபோது, ஒரு பாறை இடுக்கில் கீரிப்பிள்ளை அவதாரத்தில் அவனுக்குக் காட்சி தந்ததைக் கண்ட, திருப்புகழ் சுவாமிகள் அன்றிலிருந்து, தினமும் சாதத்தில் வெல்லத்தை பிசைந்து, அவருக்கு வைக்கச் சொன்னார். அப்பொழுது அடியேன் 14 வயது இருக்கும். சுவாமிகளிடத்தில் திருப்புகழ் பாடம் கேட்க எனது தந்தையார் வள்ளிமலை அனுப்பி வைப்பார். அதுசமயம் அடியேனும், கீரி பிள்ளைக்கு வெல்ல சாதம்


ஸ்வாமி சச்சிதானந்தா

வைப்பது வழக்கம். இதனுடைய அருட்சக்திதான் எங்கள் குடும்பம் திருப்புகழில் ஈடுபாடு கொள்ளச் செய்தது. வள்ளிமலை சுவாமிகள், 1921ல் வருடம் திருப்புகழ் அடியார்களுடன், திருத்தணித் திருப்புகழ் திருவிழாவினைத் துவங்கி வைத்த மூல புருஷராவார். அந்நாளில், மைசூர் சுவாமிகள் என்றும், முருகப்ரமம் என்றும், திருப்புகழ் சுவாமிகள் எனவும் இவரை வழங்கினார். திருப்புகழ் சுவாமிகள், அடியார்கள் இல்லங்களில் தோன்றாக் காட்சியாக விளங்கியும் வந்தார்.

22-11-1950 தம் தேகத்தை உதறிவிட்டு கைவல்ய சமாதி அடைந்தார்.

வள்ளிமலையில் எந்தக் குகையில் அவர் 12 வருடம் தவமியற்றி, திருப்புகழ் பாடி காலம் கழித்தாரோ அதே குகையில் அவரது திருமேனி மகா சமாதி செய்யப்பட்டு, அவரது சீடர்களால் வருடா வருடம் கார்த்திகை அஸ்வினி நட்சத்திரத்தன்று குருபூஜை சிறப்பாக நடத்தி வரப்படுகிறது. சுவாமிகள் தன் வாழ்நாளில், திருப்புகழ் பாடல்களிலிருந்து, தொகுத்தளித்த நூல்கள் :

1. திருப்புகழ் பாராயணத் தவநெறித் திருமுறை
2. வேல் மாறல் (வேல் வகுப்பை அடிப்படையாகக் கொண்டது)
3. மெய்க்காவல்
4. கோபூஜை
5. அனுஷ்டானத் திருப்புகழ்
6. மனதுக்கும் அறிவுக்கும் தர்க்கம்
7. பாராயணக் குண்டு (இரண்டாம் யுத்தம் நேரிட்டபோது)
8. வள்ளிக் கல்யாணம்
9. மார்கழி மாத பாராயணத் திருமுறை போன்றவைகளாகும்.

*“ சின்னமாம் ஏகதாரை திருக்கையிலேந்தி இந்த*
*சென்னை மாகாணமெல்லாம் திருப்புகழ் எனும்தேனை*
*சொன்னமாம் மாரிபோல சுவையமுது ஒழுகச் சொல்லும்*
*தன்னை நேரில்லா சச்சிதானந்தர் பதங்கள் போற்றி”*

# 4. நன்னெறிக்கு அருணகிரி!

நினைத்த மாத்திரம் முக்தியளிக்கும் திருவண்ணா மலையில், இன்றைக்கு ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய , ஸ்ரீ அருணகிரிநாதர், எவ்வாறு ஞானசம்பந்தர், உமா தேவி கொடுத்த ஞானப்பால் அருந்தியதும், அம்மையும் அப்பனையும் நேரில் கண்ட பிறகே, திருக்கடைக் காப்பு (தேவாரம்) பாடத் தொடங்கி னாரோ, அதுபோன்றே முதன் முதலாகத் திருவண்ணாமலை கோபுரத்தில் முருகப் பெரு மானை கண்குளிரத் தரிசித்து, ருவடி – தீட்சைப் பெற்ற பிறகே, அவன் அருளால் திருப்புகழ் போன்ற கவிகளைப் பாடிய அடியாராவார்.


ஸ்ரீ அருணகிரிநாதர்

ஏனைய அருளாளர்கள் தாங்கள் இயற்றிய பாடல்களுக்குத், தாங்களோ, அல்லது ஆன்மீகப் பெரியோர்களோ தலைப்பு வைத்துக் கொண்ட போதிலும், அருணகிரியார் தாம் பாடிய பாடல்களுக்கு, வயலூர்ப் பிள்ளையாரே, ''செய்ப்பதியும்

வைத்து உயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு'' எனத் தலைப்பு தந்தருளியதால், இவரது பாடல்களுக்கு ஏற்றமும் தோற்றமும் உண்டாயிற்று. இவரால் பாடப்பெற்ற பாடல்களை ஆராயும்போது தனக்கென ஒரு தனிப்பாணியை அமைத்துக் கொண்டதாக அறிய முடிகிறது. ''தன் நாயகன் பொருட்டன்றி, பிறரை வணங்காப் பத்தினிப் பெண்டிர்போல, முருகன் பொருட்டன்றி, ஏனைய மூர்த்திகளை நேர்முகமாக வழிபடா கொள்கை உடையவர் என்பது, இவரது பாடல்களிலிருந்தே அறிய முடிகிறது.

தாம் பாடிய திருப்புகழ் பாடல்களில், முற்பகுதி 4 அடிகளில், விண்ணப்பமாகவும், பின் 4 சீர்களில் விளியாகவும் பாடியுள்ளார். முற்பகுதி 4 அடிகளிலும், வறுமைகளைப்பற்றியும், நோய்களின் துன்பங்களைப்பற்றிக் கூறி, மக்கள் அவதியுறும் நிலையைக் கண்டு, அவைகளைத் தாமே ஏற்று இறைவனிடம் பாடியதாகத்தான் கருதுதல் வேண்டும்.

அவ்வாறன்றி, தாமோ தன் வாழ் நாளில் மேலே கூறப்பட்ட குறைபாடுகளை அனுபவித்துத்தான் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருதுவோர்க்கு அவரால் விவரிக்கப்பட்ட நோய்களைப் பற்றி பாடிய பாடல் ஒன்றைக் கவனிப்போம்.

*"இருமலு ரோக முயலகன் வாதம்*
*எரிகுண நாசி – விடமே நீர்*
*இழிவு விடாத தலைவலி சோகை*
*எழுகளமாலை – இவையோடே*
*பெருவயிறீளை எரிகுலை சூலை*
*பெருவலிவேறும் – உளநோய்கள்*
*பிறவிகள்தோறும் எனை நலியாதபடி*
*உனதாள்கள் – அருள்வாயே!"*
***(தணிமலை மேவு – பெருமாளே)***

எனத் திருத்தணித்தலப் பாடலில் பாடியுள்ளதைக் கவனித்தால், இப்பாடலில் பட்டியலிடப்பட்டு, தனக்கெனப் பாடி இருந்தால்

இத்தனை வியாதிகளையும் ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அனுபவித்திருக்க இயலுமா? சற்றே சிந்தித்தல் வேண்டும்.

உலக மக்கள் பலவித நோய்களால் வேதனைப்படுவதைப் பார்த்துத்தான் பாடியிருத்தல் வேண்டும்.

உதாரணத்திற்கு, நோய்களைப்பற்றி நன்று கற்றுத் தேர்ந்த மருத்துவர்கள் எல்லோரும், வியாதியஸ்தர்களைச் சோதித்து மருத்துவம் செய்த போதிலும், அதுபோன்ற வியாதிகளை, இவர்கள் முன்னரே அனுபவித்து விட்டுத்தான், நோய்க்கு ஏற்ற மருந்தைத் தருகிறார்கள் எனக் கருதுவது எவ்வாறு பொருந்தாதோ, அதுபோன்றுதான் மக்களிடத்தில் தோன்றும் பலவித நோய்களையும், தமக்கு வந்ததுபோல் பாவித்து, பரிகாரமாக இறைவனிடத்தில் முறையிடும் வகையினை அறிவித்துள்ளார்.

இனி, இவர் எத்தகைய பண்பாளர் என்பதை அறிய, இவரது பாடலிலிருந்தே அறிய முடிகிறது. ''அனிச் சங்கார்'' எனத் துவங்கும் பாடலில் ''விடக்கு அன்பாய் நுகர் பாழனை'' விடக்கு என்றால் மாமிசம். பொதுவாக இப்பாடலின் பொருளைக் கவனித்தால், (நேர்மையான) ஒரு பொருளைச் சொல்லாமல் மாமிசம் விரும்பி உண்ணும் பாழனை எனக்கருத வேண்டும். அதனால் இவர் அசைவர் எனக் கருத நேரிடும், இவரால் பாடப்பெற்ற கந்தர் அந்தாதி செய்யுள் 31வது பாடலில், ''செந்தீ தாவு அசவு அநியாயம் செய் வேதியரே'' என்று நேர்மாறாக, இந்திர போகத்தை விரும்பி, ஜீவகாருண்யம் சிறிதுமின்றி, தாங்கள் வளர்க்கும் யாகத்தில், ஆட்டை உயிரோடு வதைக்கின்ற வேதியர்களே என்று கண்டித்துள்ளதைக் கவனித்தால், இவர் சைவராகத்தான் இருந்திருக்க வேண்டும்.

சிலர், இவரால் பாடப்பெற்ற பாடல்களில், வேசியர்களின் சிற்றின்ப வர்ணனைகள் பலவித கோணங்களில் பாடியுள்ளதைக் கொண்டு, இவர் அவ்வாறெல்லாம் அனுபவித்துத்தான்

பாடியிருத்தல் வேண்டும் எனக் கருதுவர். இது யாவர்க்கும் இயல்பு. அதே ஆசிரியர், கற்புடைய மனையாளைப்பற்றியும், மக்களையும்பற்றி ஒப்புயர்வற்ற நிலையில் வைத்துப் பாடிய பாடல்களையும் சிறிது பார்க்க வேண்டும். மேலும், வேசியர்களின் வர்ணனை சிறிதும் கூறாது பாடிய கந்தர் அந்தாதியில் (பாடல் : 4) என் உறவினர்களும், மக்களும் சூழ்ந்து அழும்படி என்னை எமன் தன் லோகத்தில் அழைத்துச் செல்லாவண்ணம், நகரத்தினின்று காத்திடல் வேண்டும் என்று, கற்புடைய மனைவியையும், மக்களையும் குறித்துப் பாடியது எவ்வளவு உயர்ந்த பண்பின் அடிப்படையில், கந்தர் அந்தாதிப் பாடலில் முக்கியத்துவம் கொடுத்துள்ளதைச் சிறிது சிந்தித்தல் வேண்டும். உதாரணத்திற்கு, மூவேந்தர்களாலும், சிற்றரசர்களாலும், ஞானிகளாலும் இறைவனுக்கு ஆலயம் அமைக்க முற்படும்போது, முதலில் உயர்ந்த கோபுரங்களையும், அழகிய மண்டபங்களையும், சிறந்த சிற்பிகளைக் கொண்டு, பல உருவ வேலைப்பாடுகளைக் கொண்டு அமைக்கக் கருதி கலைஞனையும், சிற்பக் கலையையும் போற்றி வளர்த்துள்ளனர். அவர்களால் அமைக்கப்பட்ட உருவ வேலைப்பாடுகளைக் கவனித்தால் அதில் காம விளையாடல்களின் காட்சிகளைக் கூட கற்றுளியால் செதுக்கி, கலைத்திறனைப் புலப்படுத்தியுள்ளனர்.

காஞ்சியில் உள்ள ஏகாம்பரநாதர் ஆலய கோபுரத்திற்கு முன்பு கற்றூண்களால் கட்டப்பட்ட மண்டபங்களில், ஒரு தூணில், நிர்வாணக் கோலத்தில் ஒரு பெண் அணங்கை சிற்றுளியால் செதுக்கியுள்ளதைக் கவனிக்கலாம். மதுரை ஆலய கோபுரத்தில் பல உருவங்களை வடித்திருப்பது காணலாம். ஒரு பக்கம் குரங்காட்டியின் சிற்பம், மற்றொரு பக்கத்தில் குறவன் குறத்தி உருவங்களையும், காமனும் ரதியும் எதிரெதிரே நிற்கும் பாணியில் இன்னொரு பக்கம், முற்றும் துறந்த முனிவர்கள் பெண் அணங்கைக் கண்டு காமுற்று, தவம் குலைந்த நிலையில் இருப்பதை ஒரு பக்கம் கற்பக விருட்சம், காமதேனும் ஒரு பக்கம், ஏனைய

பரிவாரத் தெய்வங்களின் திருவிளையாடல்களை ஒரு பக்கம், பொறித்திருப்பதைக் காணலாம். திருவாரூர் கோயிலிலும் இது போன்ற சிற்பங்களை இன்றும் காணலாம். மேலே கூறியவைகளை அக்கால மக்கள் ஆலய கோபுரங்களிலும், மண்டபங்களிலும் பொறித்துள்ளதை மறுத்திருந்தால் அவைகளை அழித்திருப்பதோடு, எதிர்ப்பும் தெரிவித்திருப்பர். மேலும் இது போன்று ஆலய கோபுரங்களில் நிகழாவண்ணம் தடுத்திருப்பர்.

அதுபோன்ற சிற்பக் கலைகள் எவ்வாறு இன்று வரை மக்களால் புறக்கணிக்காது போற்றி வருகின்றனவோ, அவ்வாறே அருணகிரியாரால் பாடப்பட்ட பலவித வர்ணனைகளையும் நாளது வரை, ஏன் எக்காலத்தும், பக்தர்களால் புறக்கணிக்காது பாடியும், தொழுதும் வருவதைக் காணலாம். சிற்றின்ப வர்ணனைகளைப்பற்றியே கூர்ந்து கவனிக்கும் மக்கள், அவரால் உயர்ந்த நிலையில் கற்புடைய மாதர்களைப்பற்றிய பாடல் களையும் கவனித்தல் அவசியம். அவரால் பாடப் பெற்ற அத்தனைக் குறைபாடுகளையும் மக்களிடம் கண்டதை, தாமே ஏற்று இறைவனிடம் பாடப்பட்டதாகவே கருதுதல் சிறப்பு.

பெரியோர்கள், ''நீர் தப்பு செய்தீர்'' எனச் சொல்ல மாட்டார்கள். பதிலாக, அடியேன் செய்த தப்புக்கு இந்தப் பரிகாரம் வேண்டும் எனச் சொல்லி மனச் சாந்தியடைவர். ஒருவர் செய்த குற்றத்தைச் சுட்டிக் காட்டினால், அவர்களுக்குக் கோபம்தான் வரும். கோபம் போன்ற வெகுளியை எல்லாம் அறுத்தெறிய வேண்டும் என்று நினைக்கும் பெரியோர்கள், அப்படிச் சொல்லிக்கூட கோபத்தை வருவிக்க மாட்டார்கள். இதையே 'நச்சியானந்தம்' எனக் கூறுவர். இதைப்பற்றி ''சினத்தை நிந்தனை செயுமுநிவரர் தொழ மகிழ்வோனே'' என ஒரு பாடலில் அருணகிரியார் பாடியுள்ளார்.

இதன் அடிப்படையிலேதான், நாயன்மார்களும், ஆழ்வார் களும், ஞானிகளும் தங்களது பாடலில் மக்களின் பொருட்டுப்

பாடியுள்ளார்கள். மாணிக்கவாசகர், தாம் பாடிய, ''ஆசைப்பத்து, அதிசயப்பத்து, அச்சோப்பதிகம்'' போன்ற பாடல்களில், பெண்களின் வர்ணனைபற்றி வந்துள்ளதைக் கவனிக்கலாம். அதனால் மணிவாசகர், பெண்கள் மயக்கத்தில் உழன்றார் எனக் கொள்ளுதல் எந்தவிதத்திலும் பொருந்தாதோ, அவ்வாறு அருணகிரி பாடலையும் கொள்ளல் வேண்டும். திருநாவுக்கரசர், திருப்புகலூர் பதிகத்தில் ''இலவினார் மாதர் பாலே இசைந்து நானிருந்து பின்னும்'' என்பதாகப் பாடியுள்ளதைக் கொண்டு, அப்பரும் பெண் மயக்கத்தில் அவதியுற்றிருப்பார் என்பதைச் சைவ சமுதாயம் ஏற்காது.

எம்பெருமான் கருணையினால் முதிர்ச்சி பெற்று, வேறு பிரபஞ்ச மாயையிலும் மனம் செல்லாது, சைவ மக்களால் அன்னாருடைய பாடல்களைச் சைவத் திருமறைகளில் சேர்க்கப் பெற்ற சிறந்த அடியார் ஒருவர் இயற்றிய செய்யுளைப் பார்ப்போம்.

*'' நினையாது ஒழுதிகண்டாய், நெஞ்சே இங்கோர் தஞ்சமென்று*
*மனையாளையும் மக்கள் தம்மையும் தேறி — ஓர் ஆறுபுக்கு*
*நனையா சடைமுடிநம்பன், நம் தாதை, நொந்தா செந்தீ*
*அணையான், அமரர்பிரான், அண்ட வாணன் அடித்தலமே. ''*

இப்பாடலின் பொருளைக் கவனித்தால், பாடியவருக்கு, மனைவியும், மகளும் இருந்ததாகவே கொள்ள வேண்டும். ஒரு வேளை மக்கள் இருந்திருக்க வாய்ப்பிருப்பினும், மனையாள் இருந்திருக்க வாய்ப்பு இருக்காது. காரணம் இப்பாடலை இயற்றியவர், பெண்பால் இனத்தைச் சேர்ந்த 'காரைக்கால் அம்மையார்' ஆவார்.

அருணகிரி, மக்கள் குறைபாடுகளைத் தாமே ஏற்று முருகனிடம் விண்ணப்பித்ததோடு நிற்காது, மக்களுக்கும், இறைவனுக்கும் ஓர் இணைப்புப் பாலமாக இருந்து, தாம்பெற்ற பேரின்பத்தையும் கூறி, யாவரும் நற்கதி அடையும் பொருட்டே,

அளவற்ற கவிகளை, அவரவர் குறைபாடுகளுக்கு ஏற்ற விதத்தில் பொருத்தும்படி பாடியுள்ளார். இதுதான் சமரச நோக்கு. எல்லோரும் ஏற்றுக் கொள்ளும்விதத்தில் ஒன்றை மக்களுக்கு உரைப்பதுதான் உயர்ந்த உரையாகும். சான்றோர், அறிவுள்ளோர், புலமையுள்ளோர் கூறும் மொழிகளில் இத்தகைய பொது வாசகத்தைப் பார்க்கக் காணலாம்.

அருணகிரியார் இயற்றிய அனைத்துப் பாடல்களிலும் கூறியிருக்கும் குற்றங்கள் அனைத்தையும், சிற்றின்ப வர்ணனை களையும்பற்றி, ஒரு பட்டியல் தயாரித்தால், அத்தகைய இழிவான செயல்கள் அனைத்தையும் சேர்த்து, ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அனுபவித்திருக்க இயலாது. இன்று கிடைத்துள்ள 1340 பாடல்களிலே இவ்வளவு குறைபாடுகள் கிடைத்திருக்குமானால், தாம் பாடியதாக 16,000 திருப்புகழ் பாடல்களும் கிடைத்திருந்தால் எவ்வளவு ஒரு பட்டியலாக இருக்கும் என்பதைச் சற்றே சிந்திக்க வேண்டும்.

அன்னாரால் பாடப்பற்ற ''கந்தரனுபூதி''யைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். இக்கவியை மானுட தேகத்தில் இருக்கும்போதே பாடியிருத்தல் வேண்டும். ஆராய்ச்சியின் மூலம், மானுட தேகத்திலிருக்கும் போதே பாடிய கந்தர் அனுபூதியில் ''பேசா அனுபூதி பிறந்ததுவே'' எனும் நிலை அடைந்தவுடன், இயற்றினது ''திருவகுப்பு என்றும், திருப்புகழ் பாடி, முருகன் திருவருள் பெரிதும் ஊறியூறி பேரானந்தம் முதிர்ந்து, ததும்பின நிலையில் பாடினது ''கந்தர் அலங்காரம்'' எனக் கொள்ளுதற்கு இடமளிக்கிறது.

கந்தர் அனுபூதி என்றும் மந்திர மாலை போன்றது. தான் கிளியாக மாறியதும், முருகனது திருக்கரத்தில் இருந்து பாடியதாக, அன்னாரது பாடல்களில் எங்கும் குறிப்புகள் காணவில்லை. கிளியாயிருந்து கந்தரனுபூதி பாடியிருக்க வேண்டும் எனக் கருதுவோர்க்கு, அப்பாடல்களில் சிற்றின்ப வர்ணனை களைக்

குறித்து, முருகனது திருக்கரத்தில் இருந்து பாடி இருக்க வேண்டிய அவசியமிருக்காது. பக்திமார்கள் உள்ளத்தில் அழுத்தமாகப் பதியவே, முருகனது திருக்கரத்திலேயிருந்து, அவன் சொன்னதைச் சொல்லும் கிளியே அருணகிரியாவார் எனச் சொல்லி, மனதை ஒருநிலைப்படுத்தவே, ஆராய்ச்சியாளர்கள் கற்பனை செய்து, அல்லது மனதில் தோன்றியதைக் கூறியும் இருக்கலாம் அல்லவா? மானுடத் தேகத்திலிருக்கும் போதே, அருணகிரியார் முருகனிடம், தான் மானிடப் பிறவியை மறுபடியும் எய்தாது, அவனது திருக்கரத்தில் கிளியாக இருந்தே பாடும் பணியை முறையீட்டுக் கொண்டதைப்பற்றி, தாம் பாடிய பல பாடல்களிலும் ''சுக சொரூபம்'' '(சுகம் – கிளி) அருளும்படி முறையிட்டுள்ளதைக் காணலாம். இதனைப் பூர்த்தி செய்யவே, எவ்வாறு அப்பரடிகளுக்கு தூங்கானை மாடத்தில் சிவகணங் களால் சூலமும், இடபக்குறியும் பொறித்தருளினாரோ, அதே போன்று, அருணகிரியாருக்கும், அவரது வேண்டுதலைப் பூர்த்தி செய்யவே, திருத்துருத்தி (குற்றாலம்) எனும் தலத்தில், முத்தியதாம் அனுபூதி என் அருட் திருப்புகழ் ஓதுவாயாக என அருளிச் செய்து, வேல்மயில் பொறித்தருளியதை ஒரு பாடலில்,

*''அடைக்கலப் பொருளாம் நாயெனை அழைத்து*
*முத்தியதாம் அனுபூதி என் அருட்திருப்புகழ் ஓதுக வேல்மயில் –*
*அருள்வோனே''*

எனப் பாடியதிலிருந்து அறிய முடிகிறது.

கிளியாயிருந்து திருவகுப்பு பாட ஆசைப்பட்டார் என்பதற்குத் திருப்புகழிலேயே,

*'' நெஞ்சுருகி நெக்குநெக்கு நின்று தொழும்*
*நிர்க்குணத்தர் நிந்தனையில் பத்தர் வெட்சி மலர்தூவும்*
*நின்பதயுகப்ர சித்தி என்பன வகுத்துரைக்க*
*நின் பனிதமிழ்த்ரயத்தை – அருள்வாயே''*

எனப் பாடியதிலிருந்து, கிளியாக இருந்து சீர்வாத வகுப்பு பாடவே ஆசைப்பட்டார் என அறிய முடிகிறது. திருவகுப்பில் மட்டும்

தான், உலக பாசங்களைச் சிறிதும் கலவாது, பேரின்ப நிலைக்கு உதவுதான வேதத்தின் சாரத்தைப் பற்றியே பாடியுள்ளதையும் கவனிக்கலாம். மேலும், திருவகுப்பு பாடும்போது, தனது முற்பிறப்பைப் பற்றிய சிந்தனை இல்லாது, வேடிச்சி காவலன் திருவகுப்பில் ஒரு சீரில்,

*" உரைபெற வகுத்து அருணை நகரி னொரு பத்தனிடும்*
*ஒளி வளர் திருப்புகழ் மதாணிக் கிருபாகரனும் "*

என்று படர்க்கை வினையில் பாடியுள்ளதைக் கவனிப்பது அவசியம்.

அருணகிரியார் வாழ்ந்த காலத்தில், அரசர்களும், போர் வீரர்களும், குடி மக்களும், பகைவர்களது போரின்றிச் சுக வாழ்வு வாழ்ந்தனர். மதுபானம் அருந்துவதிலும், சிற்றின்ப கேளிக்கைகளிலும் வாழ்நாளைக் கழித்து, பக்தியில் மனம் செலுத்தாது, வாழ்நாளை வீணாகக் கழிப்பதைக் கண்டு, மக்களிடம் தோன்றும் துன்பங்களைக், களையும் பொருட்டே, பாடல்களில் முற்பகுதி 4 அடிகளிலும் இறைவனிடம் முறையிட்டுக் கொண்டும், பிற்பகுதி 4 அடிகளிலும், முருகனுடைய பெருமையும் விளியாக அமைத்துப் பாடிய பெருமை இவரையே சாரும்.

பொதுவாக, மருத்துவர்கள் தங்கள் பகுதியில் வாழும் மக்களுடைய நோய்களைத் தனித்தனியே பரிசோதித்து, மருந்துகள் கொடுத்து வந்த போதிலும், அப்பகுதியிலேயே வாழும் மக்களுக்கு வயிற்றுப் போக்கோ, விஷக் காய்ச்சலோ வந்து விட்டால், ஒவ்வொருவரையும் தனித்தனியே சோதித்து மருந்து கொடுப்பது முடியாதாகையால் விசாரித்தறிந்தவுடனே, பெரிய சீசாவில் மருந்தை மொத்தமாகக் கலந்து வைத்து, அவரவர் களுக்குக் கொடுத்து அனுப்புவதுதான் முறை. அதே முறையில் அருணகிரியாரும், அவதியுறும் மக்களின் பலவிதமான துன்பங் களைக் கண்டு, அவர்கள் குறைகளுக்கு ஏற்றவண்ணம் முருகனிடம் துதி செய்யும் வகையில் பாடியுள்ளார்.

ஆனால் இக்காலத்தில் மட்டும் அத்தகைய சிற்றின்ப நோய்கள் குறைந்துள்ளதா என்ன? கலையின் பெயரால், சிற்றின்பக் கலை தலை தூக்கி நிற்பதை, திரைப்படங்கள் மூலமாகவும், வானொலி மூலமாகவும், போதாதற்குத் தொலைக்காட்சி மூலமாகவும், சுவரொட்டிகள் மூலமாகவும், மக்களின் மனதைத் திசை திருப்பும் நோக்கத்துடன் செயல்பட்டு வருவது வருந்தத் தக்கதொன்றாகும். 500 ஆண்டுகளுக்கு முன்னரே இவர் பாடிய பாடல்களில் உள்ள ஆழ்ந்த கருத்துகளை நோக்கின், அக்காலத்துக்கு மட்டுமின்றி, எதிர்காலத்துக்கும் ஏற்ற வகையில் பாடின அருணகிரியாரை எவ்வாறு புகழ்வதென்று தெரியவில்லை. அதனால் இவரை, ''நன்னெறிக்கு அருணகிரி'' எனப் புகழ்வதில் என்ன தவறு இருக்கப் போகிறது?

இதுகாறும் அறிவிக்கப்பட்ட கருத்துகளில், குறைகள் இருக்கலாம். அதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. என்னுடைய கருத்துகளினால் உண்டான பலனைப் போற்றுவதனால் அதுவே எனக்கு மனச்சாந்தி அளிக்கும்.

*"உருவாய், அருவாய் உளதாய் இலதாய்,*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்,*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்,*
*குருவாய் வருவாய் அருள்வாய் – குகனே."*

# 5. வள்ளிமலை வரலாறும், திருப்புகழ் ஞானியின் சிறப்பும் !

ஸ்ரீ கச்சியப்ப சிவாச்சாரியார் இயற்றியருளிய கந்த புராணத்தில் வள்ளியின் வரலாற்று அடிப்படையிலே உளக்கண் கொண்டு, வள்ளிமலை என்னும் தலத்தினை நோக்கின், நம் எல்லோருக்கும் உள்ளம் புல்லரிக்கச் செய்யும் ஒரு புனிதத் தலம் என்பதில் ஐயமில்லை. ஏறத்தாழ 600 ஆண்டுகளுக்கு முன்னரே, தீர்க்க தரிசினியாக விளங்கிய அருணிகிரிநாதர், தாம் பாடிய வள்ளிமலை தலத் திருப்புகழில்,

***"உள்ளக் கண் நோக்கும்–அறிவூறி***
***உள்ளத்தை நோக்க – அருள்வாயே!"***

எனப் பாடியுள்ளார்.

யார் ஒருவர், தான், தனது எனும் ஆணவத்தை விட்டு விட்டு, தன்னை முருகனிடத்தில் அர்ப்பணித்துக் கொள்கிறார்களோ, அவர்களை முருகன் தானே வலியச் சென்று ஆட்கொள்ளும் தெய்வம் என்பதனை உலகிற்கு உணர்த்திக் காட்டவே, விஷ்ணுவாகிய சிவமுனிவன்பால் இலட்சுமியாகிய மானினால் வள்ளிமலையில் வள்ளிக்கிழங்கு தோண்டி எடுக்கும் குழியில் கண்டு எடுக்கப்பட்டவளே வள்ளியாவாள். இவள் சதாகாலமும் முருகனையே துதித்தும், தான், தனது எனும்

ஆணவத்தை விட்டு, வழிபட்டும் முருகனால் தானே வலிய வந்து ஆட்கொள்ளும் விதத்தில் வாழ்ந்தவளாவாள். வள்ளிமலையில் வள்ளி தோன்றிய அவ்விடம் சுருமான் ஓடை எனச் செவி வழிச்செய்தியாகக் கூறப்படுகிறது. வள்ளி ஆயலோட்டிய பரண்கள் பலவற்றையும் இன்றும் காணலாம்.

தேனும், தினை மாவும் வள்ளியால் கிழவேடம் பூண்டு வந்த முருகனுக்குக் கொடுக்கப்பட, அதனால் விக்கல் எடுத்து சூரிய ஒளி படாத தீர்த்தம்தான் வேண்டும் என்று சொல்ல, மலைமேல் உள்ள சுனை நீரைத் தந்ததற்கு ஏற்ப ஆசிரமத்தின் மேற்பாகத்தில் சூரியன் காணாச் சுனை ஒன்று இயற்கை எழிலோடு அன்றும், இன்றும் இனி எக்காலத்தும் விளங்குவதைக் காணலாம். சுனையில் உள்ள நீரானது தெள்ளத் தெளிவாகக் குளிர்ச்சியோடு முருகனுக்கு வள்ளியின் மேல் இருந்த தாகத்தைத் தீர்க்கும் புனித வரப் பிரசாதமாக விளங்குகிறது. அங்கு வரும் அன்பர்கள் யாவரும் மனம் குளிரத் துதித்துத் தீர்த்தத்தைச் சிறிது பருகியும், சிரசில் தெளித்துக் கொண்டும் செல்வதைக் கண்கூடாகக் காணலாம். அவ்விடத்தை விட்டுச் சிறிது கீழே இறங்கி வள்ளியை ஆட்கொள்ள வந்த குறிஞ்சிக் கிழவனுக்குத் தக்க தருணத்தில் விநாயகப் பெருமான் யானையாக வந்து உதவிய கணேச கிரி என்று யானை வடிவத்தில் இயற்கையாய் அமைந்துள்ள ஒரு குன்றினையும் காணலாம்.

*"அத்துயரது கொடு சுப்பிரமணிபடு*
*அப்புனம் தனிடை – யிபமாகி*
*அக்குறமகளுடன் அச்சிறு முருகனை*
*அக்கணமணமருள் – பெருமாளே"*

அருணகிரியார் பாடிய திருப்புகழ் பாடல் இதனை உறுதி செய்கிறது.

பூநாச்சியில் வாழ்ந்து வந்த திரு. சிதம்பர ஜோஸியர் என்பவருக்கும், லட்சுமி அம்மாளுக்கும், திருச்செங்கோட்டு

வேலவர் அருளால், நாகபூஜை செய்து அதனால் வரப்பிரசாதமாக அர்த்தநாரி என்ற திருநாமத்தோடு தோன்றிய திருப்புகழ் ஞானி பழநி ஆண்டவனால் தம் குன்ம நோய் தீர்க்கப்பட்டு, மதுரையில் ஒரு நாள் முருகன், தேரில் ஆரோகணித்து வருங்கால், "சிங்கார ரூபமயில் வாகனனே நமோ நமென!" என வரும் திருப்புகழ்ப் பாடலின் பின் பகுதியைக் கண்ணீர் மல்கி ஒருவர் பாடி வந்ததைக் கேட்ட மாத்திரத்தில், தம் மனதை ஈர்த்த அப்பாடலின் விவரத்தைக் கேட்டு, அன்று முதல் திருப்புகழிலேயே மனதைச் செலுத்தி, திருப்புகழ் பாக்களை ஓலைச்சுவடியிலிருந்ததைப் பரப்புவதே தொண்டாகக் கொண்டு திருவண்ணாமலை சென்று ஸ்ரீ ரமண பகவானால், திருப்புகழைக் குருநாதர் பாடியதைக் கேட்டு, ஆசீர்வதித்து, ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளைக் காணச் சொன்னதை ஏற்று, முதலில் ரமணரைக் குருவாகவும், பிறகு ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளைப் பரம குருவாகவும் ஏற்று, அன்னாரது அன்புக் கட்டளையின்பேரில், நேராக வள்ளி மலைக்கு வந்து 12 வருடங்கள் தவமிருந்து, குறக்குலத்தோர் முதல் ஏனைய அனை வரையும் திருப்புகழ் பாடல்களுக்கு, வள்ளியின் அனுக்கிரகத்தால், ராகத்தையும் அமைத்துப் பாடும் பயிற்சியினை அளித்து வந்தார்.

அத்திருப்புகழ் ஆசிரமத்தில் வள்ளிமலை சுவாமிகள் பாடும் திருப்புகழை, பாம்பாகவும், பறவையாகவும், கீரிப்பிள்ளை யாகவும், சிறுத்தையாகவும், வடிவம் தாங்கி அங்கு தவம் கிடக்கும் சித்தர்கள், இவரது பாடலை ரசிப்பதை நடு இரவில் அங்கு குழுமியுள்ள அடியார்கள்கண்டு பக்திப் பரவசமடைவர். இக்காட்சிகளைக் கண்ட அடியார்கள் அகக் கண் வழியாக உணர்ந்த உணர்ச்சியை, புறக் கண் வழியால் கண்ணீர் ததும்ப உடம்பு நனைந்து அவ்விடத்தை விட்டு நீங்கவே மனம் இல்லாது, இறை உணர்வை அனுபவிக்கும் வாய்ப்பினை அளித்த திருப்புகழ் சுவாமிகளின் பாத கமலங்களை, நெஞ்சுக் கனகல்லும் நெகிழ்ந்து உருக வணங்கி, பிரியா விடை பெற்றுச் செல்வார்கள். ஆஸ்ரமத்திற்கு எதிரில் உள்ள குன்றில் மேல் பாகத்தில்

பர்வதராஜன் குன்று என்னும் இடத்திற்குச் சென்றால், அங்கு பரண் ஒன்றும், அதனருகில் சுனையும் காணலாம். இவ்விடத்தில் வள்ளியும் தோழிகளும் நீராடும்போது மஞ்சள் அரைத்த இடம் இயற்கையாகவே வெகு வழவழப்பாகவும், யாவரது கண்ணுக்கும் தென்படாமலிருக்க ஒரு சிறு மறைப்பு இடமாகவும் இயற்கையிலேயே அமைந்துள்ளதைக் காணலாம். ஆயலோட்டும் தருணத்தில், தன் நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்து உருக, ஷண்முகனையே குறித்துப் பாடி, தன் மேனியில் உள்ள மஞ்சளானது வியர்வை நீரில் கலந்து தெளிக்கப்பட்ட இடங்களாகச் சுற்றியுள்ள பாறைகளில் இன்னும் காணலாம். திருப்புகழ் ஆஸ்ரமத்திற்கும், பர்வதராஜன் குன்றினுக்கும் இடையே கந்தபுராணத்தில் விவரிக்கப்பட்ட முருகன் வேங்கை மரமாய் நின்ற இடமும், ஒரு சுனையும் இருக்கக் காணலாம்.

இத்தகைய விளையாட்டினை முருகன் வள்ளி எம்பிராட்டியிடம் நிகழ்த்தியதன் மூலக் கருத்தைச் சிறிது ஆராய்வோமாயின் ஜீவாத்மாவான வள்ளியும், பரமாத்மாவான முருகனும் ஐக்கியமாதல் என்பதனை அடியார்கள் உணரும் பொருட்டே, வேடர்களின் கூட்டத்தை ஐம்புலன்கள் என்றும், தினைப்புனத்தில் தோன்றிய பயிர்களை ஞானப் பயிர்கள் என்றும், இத்தகைய நிகழ்ச்சிகளுக்கெல்லாம், நாரதர் தவக்கோலாகவும், மக்களுக்கு உணர்த்திய தத்துவம்தான் வள்ளி சரிதத்தில், புதைந்து கிடக்கிற உண்மை என்பது புலனாகும்.

திருப்புகழ் சுவாமிகள் பர்வதராஜ குன்றின் கீழ்பாகத்தில் திருப்புகழ் ஆஸ்ரமம் அமைத்து, தம் தவநிலைக்கு ஏற்ற ஓர் இடத்தைத் தேர்ந்து எடுத்து, அங்கு தோண்டியபோது முதலில் மணலாக இருந்ததாகவும், மேலும் ஆழமாகத் தோண்டியபோது அவ்விடத்தில் மனிதக் கூடுகள் தவம் செய்யும் பாணியில் கண்டதாகவும், அத்தபசிகளின் உடற்கூடுகளை ஒன்று சேர்த்து ஒரு மண்பாண்டத்தில் வைத்து, அவற்றினை வேறு குழியில் புதைத்து

அங்கு வில்வமும், அரசும், வேம்பும் நிறுவியுள்ள காட்சிகளையும் காணலாம். மேலும், திருப்புகழ் சுவாமிகளால் சதாகாலமும் போற்றி வந்த வள்ளியானவள், ''பொங்கி'' என்னும் பெயரோடு தோற்றமளித்து, ''விரகற நோக்கியும்'' என்னும் பாடலை மோகன ராகத்தில் உருக்கமாகப் பாடிய பாடலினால் கண்களில் தாரைத் தாரையாக நீர் வழிய பாடல் முடிந்தவுடன், அந்த இடத்தைப் பார்த்ததில், ஒரு சிறு பாறை உருவத்தில் தோற்றம் அளித்ததாகவும், அதனையே அன்றும், இன்றும் அடியார்களால் அபிஷேகம், பூஜை முதலியன பயபக்தியோடு செய்யப்பட்டு, அடியார்களின் குறைகளை எல்லாம் போக்க வல்ல சக்தி தெய்வமாகவே போற்றப்பட்டு வருகிறது.

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளால் மலைக்கோயிலில் உள்ள முருகனுக்கு, திருப்படிகள் போடும் தருணத்தில் ஆங்காங்கே சற்று இளைப்பாற மண்டபம் கட்டியும், ஓர் இடத்தில் அதுபோன்று ஏற்கனவே இருந்த மண்டபத்தைப் புதுப்பிக்க, பாறைகளைத் தோண்டிய காலத்தில், சாம்பிராணி வாசனையும், புகையும் தோன்றி, வேலை செய்து வந்த கல்தச்சர்களை மயக்கமடையச் செய்ததை முன்னிட்டு, திருவாரியார் சுவாமிகளால், அந்த இடத்தில் ஒரு மகான் தபசு செய்து கொண்டிருப்பதாகவும், அவ்விடத்தை ஒன்றும் மாற்றியமைக்காது, மேலும் படிகள் போடச் சொன்னார். இன்றைக்கும் மலைக் கோயிலுக்குச் செல்லும் அடியார்கள், ஓர் எட்டுக்கால் மண்டபம் மட்டும் பழைய நிலையிலேயே உள்ளதைக் காணலாம்.

திருப்புகழ் ஞானி, திருப்புகழ் யோகி என்றெல்லாம் புகழப்பட்ட, சுவாமிகள் அடியார்களின் நன்மையைக் கருதி, ''திருப்புகழ் பாராயணத் தவ நெறித் திருமுறை'' என்னும் புத்தகத்தையும், வேல் வகுப்பினையே அடிப்படையாகக் கொண்டு ''வேல் மாறல்'' என்னும் மந்திர நூலையும், 2வது உலக மகாயுத்தத்தில் நாட்டிற்கு, ஜப்பான், ஜெர்மன் நாடுகளால் ஆபத்து

வராதிருக்க ''திருப்புகழ் பாராயணக் குண்டு'' என்ற சிறு புத்தகத்தையும், பசுவைக் காமதேனுவாகப் பாவித்து, ''கோபூஜை'' என்ற சிறு புத்தகத்தையும், திருப்புகழிலிருந்து தொகுத்தளித்த பெரியார் ஆனார்.

திருப்புகழையே மகா மந்திரமாகக் கொண்டும், ஸ்ரீ வள்ளியெம்பிராட்டியிடம் ஆத்யந்த பக்தி பூண்டவரான, திருப்புகழ் சுவாமிகள், 1950–ஆம் வருடம் கார்த்திகை மாதம் அஸ்வினி நட்சத்திரத்தில், ஒரு பூதரும் அறியா தனி வீடாகிய, அந்தம் நடு ஆதி ஒன்றுமிலதான அந்த ஒரு வீட்டை அடைய எண்ணிப் பூத உடலை விட்டு, இறுகும் வகை பரமசுகமதனை அருள வேண்டி இசைபயில் சடாச்சரம் அதாலே பரத்தை அடைந்தார். அன்னாருடைய சமாதி வள்ளிமலை ஆஸ்ரமத்தில் உள்ள குகையில் உள்ளது. குருநாதரின் சீடர்களால் அன்று தொட்டு அந்நாள் குருபூஜையாகக் கொண்டாடி வரப்படுகிறது.

திருப்புகழ் ஆஸ்ரமத்திற்குத் தெற்கே ஏறத்தாழ 6 பர்லாங் தொலைவு சென்றால் குடைவரைக் கோயிலைக் காணலாம். இவ்வாலயம் 6 கட்டுகளுடன் அமைந்துள்ளது. முதல் கட்டில் யாகசாலை, மடப் பள்ளி, வள்ளி, விநாயகர், அருணகிரிநாதர் முதலிய சந்நிதிகளும், இரண்டாவது கட்டில் இருபக்கம் துவார பாலர்களும், காசி விஸ்வநாதர், கணேசர் உருவச் சிலைகளும் காட்சியளிக்கின்றன. இதை அடுத்து முன்றாம் கட்டுக்குச் சென்றால் கர்ப்பகிரகத்தை அடையலாம். முதலாவது கட்டில் நுழை வாயிலுக்கு இடது பக்கம் வள்ளி ஆயலோட்டும் நிலை ஒரு கற்பாறையிலேயே 6 அடி உயரத்தில் செதுக்கப்பட்டு இருப்பதைக் காணலாம். இது அக்காலச் சிற்பக்கலையின் ஓர் ஒப்பற்ற படைப்பு எனத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ளார்கள். இக்கலை அழகை, ஸ்ரீ அருணகிரிநாதர் திருப்புகழில் வர்ணித்துப் பாடியுள்ளார்? இவ்வள்ளிப் பிராட்டியின் வலக்கையில் ஆயலோட்டும் கவணும், இடக்கையில் கவண் கல்லும், ஏந்தி

நிற்கும் பாங்கானது, காண்போருக்கு வள்ளியே நேரடியாக வந்து காட்சி கொடுக்கும் உயிரோவியம்போல் உள்ளத்தை உருகச் செய்கிறது.

மூன்றாவது கட்டில் கர்ப்பகிரகத்தின் மேல் விதானத்தை விளக்கின் ஒளியில் ஊன்றிக் கவனித்தால், சமணர்களின் வழிபடு தெய்வமாகிய அருகர் பத்மாசனத்தில் இருப்பது விளங்கும், சரித்திர ஆராய்ச்சியின் வாயிலாக இக்குகைக்கோயில் 7–ம் நூற்றாண்டில் பல்லவர்களால் உண்டாகி இருக்கலாம் என அறியக் கிடக்கிறது. இக்கோயில் திராவிட முறையில் அமைக்கப் பட்டதாகும் என ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள். பல்லவ மன்னர்கள் சமண சமயத்தை ஆதரித்து, அத்துறவிகளுக்கு அங்கு தங்கி நோன்புகள் இயற்றும் பொருட்டு நிறுவப்பட்டிருத்தல் கூடும் எனச் சரித்திர நிபுணர்களால் கூறப்படுகிறது. சமண சமயம் குன்றிய பிற்காலத்தில் அதே குகைக்கோயிலில் முருகரை ஸ்தாபித்து, அவருக்கு ஆலயம் எழுப்பியதாகத் தோன்றுகிறது.

வலப்புறச் சுவற்றில் சுமார் 18 அங்குல சதுர வடிவில் ஒரு துவாரம் தென்படும். இதன் வழியாகத்தான் முருகன் வள்ளியைச் சிறை எடுத்து, திருத்தணி சென்றதாகவும், இங்கிருந்து திருத்தணிக்குச் சுரங்கப்பாதை உள்ளதாகவும் செவி வழிச் செய்தியாகக் கூறப்படுகிறது. இம்மலைக்கோயிலுக்கு ஆறுமுக சுவாமி ஆலயத்தில் இருந்து, சிறந்த முறையில் படிக்கட்டு களையும், மின் விளக்குகளைப் பொருத்தியும் பெருமை சேர்த்த திரு. வாரியார் சுவாமிகளுக்குத் தமிழ் மக்கள் என்றென்றும் நன்றி உள்ளவர்கள் ஆவார்கள்.

இப்புனிதத் தலத்தில் மாசி மாதத்தில் நடக்கும் பிரம்மோத்சவத்தில் முருகன் தேரில் ஆரோகணித்து பிரபஞ்ச மாயை மறந்து, ஜீவாத்மா பக்தியாகிய சக்தியைக் கொண்டு, அருளாளர்களின் பாமாலையைக் கயிறாகக் கொண்டு, இப்புனித ஞான மலையை வலம் வரும் காட்சி சொல்லொணா பரமானந்த

மனோலயத்தில் திளைத்து ஜீவாணமாகவாகிய வள்ளி பரமாத்மாவோடு இரண்டறக் கலக்கும் பாங்கினை, தேர்நிலைக்கு வந்து சேரும் தத்தவத்தின் அடிப்படையாகும்.

கடைசி நாளன்று வேடர் பரி உற்சவமும், வேடுவர்கள் வள்ளியை முருகனுக்குத் திருமணம் செய்விக்கும் காட்சியும் சொல்லற்கரியது. மலைமேல் இருக்கும் ஆலயம் ஒரே கல்லினால் குடைந்து அமைக்கப்பட்ட கோயிலாகும். இது போன்ற முருகன் ஆலயம் காண்பதரிது. மேலும் காணப்படுவது ஒன்றாகும். வள்ளிமலையைக் கிரிவலம் வருவது மிகவும் விசேடம், இதன் தூரம் குறைந்து 3 மைல் இருக்கலாம். வசதியாகப் பாதையும் உள்ளது.

இத்தலம் சென்னையிலிருந்து சித்தூர் வழியாக பெங்களூருக்குச் செல்லும் மார்க்கத்தில் 120 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள திருவலம் என்னும் ஊருக்கு நேர் வடக்குமுகமாக 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருவலத்திலிருந்தும், ஆற்காட்டிலிருந்தும், வேலூரிலிருந்தும், திருத்தணியிலிருந்தும் பேருந்து மூலமாகச் செல்ல வசதியுள்ளது. சென்னையிலிருந்து மாலை 5 மணிக்குப் பொன்னை செல்லும் பேருந்து மூலமாகவும் வள்ளிமலை அடிவாரத்தை நேரடியாகச் சென்றடையலாம்.

***" வேலன் வாய்த்த திருப்புகழ்***
***கற்றவர் சீலமேத்திய சித்தப்ரசித்தரே!"***

# 6. வள்ளிமலை வரலாறு

. க்கட்டுரையை அடியேன் எழுத முற்படும்போது, என் தந்தை வாயிலாகக் கேட்டறிந்த செய்தி ஞாபகத்தில் வந்தது. என் தந்தையாரின் நெருங்கிய ஆன்மீக நண்பர், ஒரு சமயம் பூனா சென்றிருந்தபோது, அந்நகரத்துக்குப் பக்கத்திலேயே உள்ள பார்வதி மலையில் கோயில் கொண்டுள்ள மூர்த்தங்களைக் காணும். வாய்ப்புக் கிட்டியதின்பேரில், ஏறக்குறைய திருத்தணி மலை உயரமே இருக்கும் அம்மலை, விசாலமான படிக்கட்டுகள் கொண்டதாய் இருந்தது. காரணம், அக்காலத்தில் படிக்கட்டுகள் நிறுவிய மராத்திய மன்னர்கள் குதிரை மேல் ஏறிக் கொண்டே, மலை மீதுள்ள ஆலயத்துக்குச் செல்வது வழக்கமாம். அங்கே கார்த்திகேயன் என்னும் திருநாமத்தோடு விளங்கும் முருகனைத் தரிசிக்கச் சென்றபோது, கோயில் வாசலிலேயே, ''இங்கு பெண்கள் அனுமதிக்க மாட்டார்கள்'' எனும் அறிவிப்பைக் கண்டதும், காரணம் தெரியாமல், தன்னுடன் வந்த தமிழ் அன்பர்களை விசாரித்தும் பதில் கிடைக்கவில்லை. அன்று மாலை அங்கு பூனாத் தமிழ் அன்பர்கள் நடத்தும் கலைக் கழக விழாவில் பேச வாய்ப்பு கிடைத்தது. அங்கு திரளாக ஆண்களும், மராத்தியப் பெண்களும் கூடி இருந்தார்கள். அதைக் கண்டதும், காரணம் ஒருவிதமாக அறிவுக்குப் புலப்பட்டது. தமிழ் நாட்டுக் குறமகளாகிய நம்பிராஜன் புத்திர வள்ளியின் அழகைக் கண்டு மயங்கி, அவள் காதலைப் பெற

எவ்வளவோ தகிடு தத்தங்கள் செய்து, அந்த அழகியை மணம் புரிந்தவன், இங்குள்ள ஸ்திரீகள் முக்காடிட்ட தலையோடும், வளையங்கள் அணிந்த மூக்கோடும் வரும் பெண்களைக் காணச் சகிப்பானா? இதை வெளிப்படையாகச் சொல்ல முடியாமல்தான், சும்மா பிரம்மச்சாரி வேடம் பூண்டு, அங்குள்ளவர்களை எல்லாம் ஏமாற்றியிருக்கிறான். ஆம் அவன் கலை பயில் புலவன் கார்த்திகேயன் அல்லவா? ஏமாற்றுவதையே ஒரு கலையாகக் கற்றிருக்கிறான் எனத் தனக்குத் தோன்றியதாக விளக்கமளித்தார்.

வள்ளியை வேலன் மணந்த விதத்தினைப்பற்றி, காலம் காலமாகக், காவியமாகவும், கதா காலட்சேபம் செய்தும், நாடக மேடைகளிலும், திரைப்படங்கள் மூலமாகவும் கேட்டும், பார்த்தும் அலுத்துப் போன ஒன்றாகும். வள்ளி வாழ்ந்த இடத்தைப்பற்றிப் பல செய்திகள் கூறப்படுகிறது. வள்ளி வாழ்ந்த இடம் திருநெல்வேலி அடுத்து வள்ளியூர் என்பதாகவும், திருச்செந்தூரில் வள்ளி ஓடி ஒளிந்த குகை ஒன்று உள்ளதால் அங்குதான் வாழ்ந்திருக்கக் கூடும் என்றெல்லாம் கூறுவதை ஏற்றுக் கொள்ள ஆதாரங்கள் இல்லை. ஆனால் கச்சியப்பர் இயற்றிய கந்த புராணத்தில், மேல் பாடியை எனும் ஊரை அடுத்த வள்ளி மலையில், விஷ்ணுவாகிய சிவ முனிவன்பால், இலட்சுமியாகிய மானினால், வள்ளிக் கிழங்கு தோண்டி எடுக்கும் குழியில், நம்பிராஜனால் கண்டெடுக்கப்பட்டு, அக் குழந்தைக்கு வள்ளி எனும் பெயரைச் சூட்டி வளர்த்ததாகவும், நம்பிராஜன் கோட்டையும் மலைக்கு மேற்குப் புறத்தில் இன்றும் உள்ளதைக் கொண்டு, இங்குதான் வள்ளி சரிதம் நிகழ்ந்திருக்கக் கூடும் என ஊர்ஜிதம் செய்ய வாய்ப்புள்ளது. சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த அருணகிரியார், தாம் பாடிய "வதன சரோருக" எனும் பாடலில் முதல் இரண்டு அடிகளில் தெள்ளத் தெளிவாக வரைபடம் போட்டு காண்பிப்பது போன்று பாடியுள்ளார். அன்று அவரால் பாடப்பட்ட அந்தப் பாடலில் குறிக்கப்பட்ட இடைவெளி, (அதாவது திருத்தணிக்கும், வள்ளி மலைக்கும் உள்ள தூரம்) 25

மையல் என்பது இன்றும் யாவரும் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் அமைந்துள்ளது.

திருப்பரங்குன்றத்தில் தேவசேனையை மணந்தபின், திருத்தணி வந்து, சில காலம் தனித்து இருக்க விரும்பிய சசீதரனிடம், நாரதர் மூலமாக, அண்மையில் உள்ள வள்ளி மலையில் வாழும் வள்ளியின் அழகையும், தேனென இனிக்கும் அவளது வனத்தைப் பற்றி புகழ்ந்து கூறியதைக் கேட்டு, உடனே முருகன் தன் வாகனமாகிய மயிலையும் விட்டு விட்டு, கால் கடுக்க நடந்தே சென்றார் என்பதை, அருணகிரியார் தாம் பாடிய ''பாரநறுங்குழல்'' எனும் பாடலின் பிற்பகுதி நான்கு அடிகளில் நம் மனக்கண் முன்னே படம் பிடித்துக் காட்டுவதுபோல் கூறியுள்ளார். மேலும் கந்தர் அலங்காரப் பாடல், ''கின்னங் குறித்தடியேன்'' எனத் தொடங்கும் பாடலில், கடைசி அடியில், ''முன்னம் குறிச்சியில் சென்று கல்யாணம் முயன்றவனே'', என்பதில், சென்று என்று கூறிய வார்த்தையை நோக்கின், யார் ஒருவர், தான், எனது எனும் அகங்காரத்தை விட்டு, முருகனிடம் பக்தி செலுத்துகின்றனரோ அவர்களை முருகனே தானே வலிய வந்து ஆட்கொள்வான் என்பதன் சிறப்பு, சென்று என்ற வார்த்தையினால் அறியப்படுகிறது. மேலும் மணிவாசகரும் பாடிய பாடல் ஒன்றில்,

*" நானேயோ தவம் செய்தேன்.... சிவாயநம எனப் பெற்றேன்*
*தேனாய் இன்னமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்*
***தானே வந்துஎனது உள்ளம்புகுந்து அடியேற்கு அருள் செய்தான்.***

என்று கண்ணீர் மல்க பாடியுள்ளதையும் கவனிக்கலாம்.

மேலும், வள்ளியின்மேல் மையல் கொண்டு, அவளுடைய தந்தை தமையன் முதலியோரைக் கண்டு ஓடி ஒளிந்தவன் முருகனே தவிர, முருகனைக் கண்டு வள்ளி ஓடி ஒளிந்ததாக எங்கும் வரலாறு காணப்படவில்லை. வேட்டுவப் பெண்ணை மணக்க விரும்பிய முருகன் வேடனாகவே உருமாறிச் சென்று, வேட்டையாடி வந்த

மானைத் தேடி வரும் வில்லனாக (வில்லை ஏந்தியவனாக) தினைப்புனம் சென்றதைக் குறித்து, அருணகிரியார் திருப்புகழ் பாடல்களில் பரக்கக் கூறியுள்ளார்.

வள்ளி ஆயலோட்டிய பரண்கள் பலவற்றினை வள்ளி மலையில் காணலாம். கந்தபுராணத்தில் கூறப்பட்ட லீலைகளுக் கேற்ப, கிழவனாய் வேடம் பூண்டு வந்த முருகன், தேனும், தினைமாவும் வள்ளியினால் கொடுக்கப்பட்டு, அதனால் விக்கலெடுத்து, சூரிய ஒளி படாத தீர்த்தம்தான் வேண்டும் என்று கேட்க, திருப்புகழ் ஆஸ்ரமத்திற்கு மேல் பாகத்தில் உள்ள சுனையும் மிக எழிலோடு அன்றும் இன்றும், இனி எக்காலத்தும் தெள்ளத் தெளிவாகக் குளிர்ச்சியோடு, முருகனுக்கு வள்ளியின் மேல் இருந்த தாகத்தைத் தீர்க்கும் புனித வரப்பிரசாதமாக விளங்கவே, முருகன் இத்தகைய விளையாட்டினை நிகழ்த்தி உள்ளார்போலும் என நினைக்கத் தோன்றுகிறது. காணவரும் அடியார்கள் சுனையிலுள்ள தீர்த்தத்தைப் பருகியும், சிரசில் தெளித்துக் கொண்டும், திருப்புகழ் மனஉருகப்பாடி செல்வதை இன்றும் காணலாம். மலைமேல் உள்ள திருப்புகழ் ஆஸ்ரமத்திற்குப் பக்கத்திலேயே, குறிஞ்சிக் கிழவனுக்கு, தக்க தருணத்தில் விநாயகப் பெருமான், தன் தம்பிக்காக யானையாக வந்து உதவியதை அடியார்கள் உணரும் பொருட்டு, யானை வடிவத்தில் இயற்கையாய் அமைந்துள்ள குன்றினையும் தரிசிக்கலாம். இந்தக் குன்றை கணேசகிரி என்பதாக, அண்மையில் வாழ்ந்த வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள் திருநாமமிட்டு, வணங்கி வரும்படி திருப்புகழடியார்கள் யாவரையும் கேட்டுக் கொண்டார். மிகவும் சக்தி வாய்ந்த விநாயகப் பெருமான் ஆவார். திருப்புகழில்,

*"அத்துயரது கொடு சுப்ரமணிபடு*
*அப்புன மதனிடை – யிபமாகி*
*அக்குறமகளுடன் அச்சிறு முருகனை*
*அக்கணமணமருள் – பெருமாள்"*

எனப் பாடியுள்ளதை நாம் யாவரும் ஆடிப் பாடித் தொழுது வருதல் நல்லது. திருப்புகழ் ஆசிரமத்திற்கு எதிரில் உள்ள குன்றின் மேல் பாகத்தில் பர்வத ராஜன் குன்று என அழைக்கப்படும் இடத்திற்குச் சென்றால், அங்கு பரண் ஒன்றும் அதனருகில் சுனையும் காணலாம். இவ்விடத்தில் வள்ளியும் தோழிகளும் நீராடும்போது மஞ்சள் அரைத்த இடம் இயற்கையாகவே, வெகு வழவழப் பாகவும், யாவரது கண்ணுக்கும் தென்படாமலிருக்க ஒரு சிறு மறைப்பு இடமாக, கல்லினால் இயற்கையிலேயே அமைந்துள்ளதையும் காணலாம்.

ஆயலோட்டும் தருணத்தில் தன் நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருக, சண்முகனையே குறித்துப் பாடி, தன் மேனியில் உள்ள மஞ்சளானது வியர்வை நீரில் கலந்து தெளிக்கப்பட்ட இடங்களாகச் சுற்றியுள்ள குன்றுகளில் இன்றும் காணலாம். திருப்புகழ் ஆஸ்ரமத்திற்கும், பர்வதராஜன் குன்றினுக்கும் இடையே, கந்த புராணத்தில் விவரிக்கப்பட்ட முருகன், வேங்கை மரமாய் நின்ற இடமும், ஒரு சுனையும் இருப்பதைக் காணலாம்.

இத்தகைய விளையாட்டில் முருகன் வள்ளியெம்பி ராட்டியிடம் நிகழ்த்தியதின் மூலக் கருத்தைச் சிறிது ஆராய்வோ மாயின் ஜீவாத்மாவான வள்ளியும், பரமாத்மாவான முருகனும் ஐக்கியமாதல் என்பதனை அடியார்கள் உணரும் பொருட்டே, வேடர்களின் கூட்டத்தை ஐம்புலன்கள் என்றும் , தினைப்புனத்தில் தோன்றிய பயிர்களை, ஞானப்பயிர்கள் என்றும், இத்தகைய நிகழ்ச்சிகளுக்கெல்லாம், நாரதர் தவக்கோலாகவும், மக்களுக்கு உணர்த்திய தத்துவம்தான், வள்ளி சரிதத்தில் புதைந்து கிடக்கிற உண்மைத் தத்துவம் என்பது புலனாகும்.

1977–ஆம் ஆண்டில், திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள், அண்ணாமலை வைத்தியர் என்பவரது ஒத்துழைப் போடு, மலைமேல் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானுக்கு, அடிவாரத்தில் உள்ள ஆறுமுக சுவாமி ஆலயத்தில்

இருந்து, திருப்படிகள் நிறுவி வரும் தருணத்தில், ஆங்காங்கே சற்று இளைப்பாற, மண்டபம் கட்டியும், ஓர் இடத்தில் அதுபோன்று ஏற்கெனவே இருந்த பழைய எட்டுக்கால் மண்டபத்தைப் புதுப்பிக்க, அங்கு கற்பாறைகளைத் தோண்டிய போது, சாம்பிராணி வாசனையும், புகையும் தோன்றி வேலை செய்யும் கல்தச்சர்களை மயக்கமடைந்ததைக் கண்டு, வாரியார் சுவாமிகள், அந்த இடத்தில் ஒரு மகான் தபசு செய்து கொண்டிருப்பதாகவும், அவ்விடத்தை மேலும் புதுப்பிக்காது, அப்படியே இருந்த நிலையிலேயே விட்டு விட்டு, மேற்கொண்டு படிகளை நிறுவச் செய்தார். இந்தப் பழைய மண்டபத்தை இன்றும் யாவரும் காணலாம். ஏனைய மண்டபங்கள் புதுப்பித்து இருந்த போதிலும், இந்த ஒரு மண்டபம் மட்டும் பழைய நிலையிலேயே இருக்கிறது. இவ்வரலாறு புராணத்தில் கூறப்பட்டவை அல்ல. சரித்திர வாயிலாக, யாவரும் காண நிகழ்ந்த நிகழ்ச்சியாகும். இன்றும் யோகிகளும், சித்தர்களும், ஞானிகளும் பல இடங்களில் இம்மலையில் தவம் புரிந்து கொண்டிருப்பதாகத் திரு. வாரியார் சுவாமிகள் கூறக் கேட்டதுண்டு.

மலை மேலுள்ள ஆலயம், திருப்புகழ் ஆசிரமத்திற்குத் தெற்கே ஏறத்தாழ, 6 பர்லாங்கு தூரத்தில் அமைந்துள்ளது. இக்கோயில் ஒரு குடைவரைக் கோயிலாகும். மலை மேல் இருக்கும் இவ்வாலயம், ஒரே கல்லினால் குடைந்து அமைக்கப் பட்ட கோயிலாகும். இதுபோன்று முருகன் ஆலயம் காண்பதரிது. மேலும், அவசியம் காணப்படுவது ஒன்றாகும்.

இவ்வாலயம் 3 களங்களுடன் அமைந்துள்ளது. முதல் களத்டில் யாகசாலை, மடப்பள்ளி, வள்ளி, வினாயகர், அருணகிரிநாதர் முதலியோர் சந்நிதிகளும், இரண்டாவது கட்டில், இரு பக்கம் துவார பாலகர்களும், காசி விஸ்வநாதர், கணேசர் உருவச் சிலைகளும் காட்சியளிக்கின்றனர். இதையும் கடந்து மூன்றாம் களத்திக்குச் சென்றால், கர்ப்ப கிரகத்தை அடையலாம். கர்ப்பகிரகத்தின் மேல் விதானத்தில், விளக்கின் ஒளியால் ஊன்றிக்

கவனித்தால், சமணர்களின் வழிபடு தெய்வமாகிய அருகர் பத்மாசனத்தில் இருப்பது விளங்கும். உருத்திராட்சத்தால் வேயப்பட்ட பந்தலையும் பார்க்கலாம். முதலாவது களத்தில் நுழைவாயிலுக்கு இடது பக்கம், வள்ளி ஆயலோட்டும் நிலை, ஒரு கற்பாறையிலேயே சுமார் 6 அடி உயரத்தில் செதுக்கப்பட்ட உருவம் இருப்பதைக் காணலாம். இது அக்காலச் சிற்பக் கலையின் ஓர் ஒப்பற்ற படைப்பு எனத் தொல் பொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ளார்கள். இக்கலை அழகை, ஸ்ரீ அருணகிரிநாதர் பாடிய, ''வாடையில் மதனை' எனும் பாடலில், பின் பகுதியில் வெகு அழகாகப் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். கற்பாறையில் செதுக்கப்பட்ட வள்ளியின் வலக்கையில் ஆயலோட்டும் கவணும், இடக்கையில் கவண் கல்லும் ஏந்தி நிற்கும் பாங்கானது, காண்போருக்கு வள்ளியே நேரடியாக வந்து காட்சி கொடுக்கும். உயிரோவியம்போல் உள்ளதை உருகச் செய்கிறது. இவ்வுருவத்தின் காட்சியைப் படத்தில் காணலாம்.

சரித்திர ஆராய்ச்சியின் வாயிலாக, இக்குகைக்கோவில் 7–ஆம் நூற்றாண்டில் பல்லவர்களால், உண்டாக்கப்பட்டு இருக்கலாம் என அறியக் கிடக்கிறது. இக்கோயில் திராவிட முறையில் அமைக்கப்பட்டதாகும் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். பல்லவ மன்னர்கள் சமண சமயத்தை அதரித்து, அத்துறவிகளுக்கு அங்கு தங்கி நோன்புகள் இயற்றும்பொருட்டு நிறுவப்பட்டிருத்தல் கூடும் எனச் சரித்திர நிபுணர்களால் கூறப்படுகிறது. சமண சமயம் குன்றி, பிற்காலத்தில் அதே குகையில் முருகரை ஸ்தாபித்து, அவருக்கு ஆலயம் எழுப்பியதாகத் தோன்றுகிறது.

மூன்றாவது கட்டில் வலப்புறச் சுவற்றில், சுமார் 18 அங்குல சதுர வடிவில் ஒரு துவாரம் இருந்தது. இதன் வழியாய்த்தான் முருகன் வள்ளியைச் சிறை எடுத்து, இங்கிருந்து சுரங்கப் பாதை வழியாகத் திருத்தணிக்குச் சென்றதாகவும் செவி வழியாகக் கூறப்படுகிறது. அண்மையில் இத்துவாரத்தை அடைத்து மூடி

விட்டுள்ளனர். மலை மேலுள்ள முருகனைத் தரிசிக்க வசதியான படிகளையும் மின் விளக்குகளையும் பொருத்தித் தந்த பெருமை திருமுருக கிருபானந்தவாரி சுவாமிகளையே சாரும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இப்புனித தலத்தில், மாசி மாதத்தில் நிகழும் பிரம்மோத்ஸவத்தில், முருகன் தேரில் ஆரோகணித்து, பிரபஞ்ச மாயை களைந்து, ஜீவாத்மா பக்தியாகிய சக்தியைக் கொண்டு, அருளாளர்களின் ஜீவனுள்ள பாமாலையைக் கயிராகக் கொண்டு, இப்புனிதமான ஞான மலையை வலம் வரும் காட்சி, சொல்லொணா மனோலயத்தில் திளைத்து, ஜீவாத்மாகிய வள்ளி, பரமாத்மாவோடு ஒன்றறக் கலக்கும் பாங்கினை தேர் நிலைக்கு வந்து சேரும் தத்துவத்தின் அடிப்படையாகும். வள்ளிமலை கிரிவலம் வர வசதியாகப் பாதைகள் அமைக்கப்பட்டுள்ளன. தூரம் சுமார் 3 மைல் இருக்கும். கிரி வலம் வரும்போது, வள்ளி மலைக்குப் பின்புறம் நம்பிராஜன் கோட்டையைக் காணலாம்.

இனி வள்ளிமலையில் பன்னிரு வருடம் தவம் இயற்றி, வள்ளியின் அனுக்ரகத்தால் பாடலுக்கு ஏற்ற ராகமும் அமைத்து, ஊர் மக்கள் யாவர்க்கும் திருப்புகழ் பாடம் கற்பித்த திருப்புகழ் ஞானியின் வரலாற்றினைப் பார்ப்போம்.

கொங்கு நாட்டின்கண் பூநாச்சி கிராமத்தில், சிதம்பர ஜோஸ்யர் என்பவருக்கும், இலட்சுமி அம்மாளுக்கும் பிறந்தவராவார். இவர், குன்ம நோயினால் வருந்திய காலத்து, இவரைப் பழநிக்குச் சென்று ஒரு மண்டலம், பழநி ஆண்டவனின் அபிஷேக தீர்த்தத்தைச் சாப்பிட்டு வந்தால் குணமாகும் எனப் பலர் சொல்லக் கேட்டு, பழநிக்கு வந்து அபிஷேகப் பாலையும், தீர்த்தத்தையும் சாப்பிட்டுக் கொண்டு வரும் காலையில், ஒரு நாள் மதுரைத் தேவதாஸியால், முருகன் தங்கத் தேரில் பவனி வருங்கால், ''வங்காரமார்'' எனத் துவங்கும் திருப்புகழ் பாடலின் பின் நான்கு சீரைக் கண்களில் நீர்பெருகப் பாடியும் ஆடியும் வந்ததைக் கண்டு, திருப்புகழ் பாடலால் மனம் ஈர்க்கப்பட்டு, சென்னை வந்து, தணிகை மணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை


கற்பாறையில் செதுக்கப்பட்ட வள்ளி ஆயலோட்டும் உருவச் சிலை

மூலம் திருப்புகழ் புத்தகங்களைப் பெற்று, குரு மூலமாகத் தீட்சைப் பெற்று வர நினைத்தபோது, திருவண்ணாமலையில் உள்ள சேஷாத்ரி முனிவரால் ஆட்கொள்ளப்பட்டு, ''திருப்புகழே உனக்கு மகாமந்திரம்'' என ஆசீர்வதித்து வள்ளிமலைக்குச் சென்று திருப்புகழ் பரப்பி வருவாயாக எனக் கூறிய அன்புக் கட்டளையின் பேரில், வள்ளி மலைக்குத் தனக்கென ஓர் ஆசிரமம் அமைக்க எண்ணி, தரையைச் சமமாகச் செய்ய, அங்கிருந்த கற்களையும், மண்ணையும் தோண்டி எடுக்குங் காலையில், அவ்விடத்தில் மூன்று மனிதக் கூடுகள் தவம் செய்யும் பாணியில் கண்டதாகவும், அத்தபசிகளின் உடற்கூடுகளை ஒன்று சேர்த்து, ஒரு மண் பாண்டத்தில் வைத்து, அவற்றினை வேறொரு குழியில் புதைத்து, அங்க வில்வம், அரசு, வேம்பு மூன்றும் வைத்து வளர்த்து வந்தார். இவற்றை வள்ளிமலையில் உள்ள திருப்புகழ் ஆசிரமத்தில் காணலாம். மேலும், இவரால் சதாகாலமும் போற்றி வந்த வள்ளியானவள், ''பொங்கி'' எனும் பெயரோடு தோற்றமளித்து, ''விரகறநோக்கியும்'' எனும் திருப்புகழ் பாடலை மோகன ராகத்தில் உருக்கமாகப் பாடியதில், இவர் மெய்மறந்து, பாட்டை ரசித்து விட்டு, பிறகு அப்பெண் சிறுமியைப் பார்க்க முயன்றபோது, சிறுமியைக் காணாது, அந்த இடத்தில் ஒரு சிறு பாறை உருவத்தில் தோற்றம் அளித்ததாகவும், அதனையே அன்று முதற்கொண்டு தினமும் அபிஷேகமும், பூஜை முதலியன பயபக்தியோடு செய்யப்பட்டு வந்தது. அடியார்களின் குறைகளெல்லாம் போக்கவல்ல சக்தி தெய்வமாகவே போற்றப்பட்டு வருகிறது. இம்மகான் பகலென்றும் இரவென்றும் பாராது

திருப்புகழைச் சதா பாடிக் கொண்டேயிருப்பார். இவர் குறக்குலத்தோர் முதல், குருக்குலத்தோர் வரை திருப்புகழ் பாடம் கற்றுத் தந்த ஞானியாவார். இரவில் திருப்புகழ் பாடி வருங்கால், பாம்பாகவும், கீரிப் பிள்ளையாகவும், சிறுத்தையாகவும், பறவைகளாகவும் வடிவம் தாங்கி அங்கு தவம் கிடக்கும். சித்தர்கள், இவரது பாடலை ரசிப்பதை, நடுநிசியில் அங்கு குழுமியுள்ள கிராம மக்கள் கண்டு, அகக் கண் வழியாகத் திருப்புகழ் பாடல்களை உணர்ந்த உணர்ச்சியை, புறக்கண் வழியால் கண்ணீர் வழிய, அதனால் உடம்பு நனைந்து நனைந்து அவ்விடத்தை விட்டு நீங்கவே மனமில்லாது இருக்கும் இறை உணர்வை அனுபவிக்கும் வாய்ப்பினை அளித்த திருப்புகழ் ஞானியின் பாத கமலத்தில் விழுந்து, வணங்கி, பிரியா விடை பெற்றுச் செல்வார்கள்.

வள்ளிமலை திருப்புகழ் ஞானி என்பவர், 1921–ஆம் ஆண்டு, தணிகை மணி வ. சு. செங்கல்வராய பிள்ளையின் குடும்பத்தோடு, முதன் முதலில், டிசம்பர் 31ஆம் தேதி அன்றும், ஜனவரி 1ஆம் தேதியன்றும், மக்கள் யாவரும் திருத்தணி கேசனைத் தரிசித்து அவர்களது வருங்காலம் சுபீட்சமாக அமைய வழி வகுத்தவராவார். அவரால் துவக்கிய திருத்தணித் திருப்புகழ் திருவிழா நாளது வரை வெகு சிறப்பாகக் கொண்டாடி வருவது, திருப்புகழ் ஞானியின் கீர்த்திக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். இது ஒன்றே அன்னாரைத் திருப்புகழ் ஞானி என்று அழைக்கப் படுவதற்குப் போதுமானதாகும். இவரால் திருப்புகழனின்றும் தொகுத்து அளிக்கப்பட்ட நூல்கள்:

1. திருப்புகழ் பாராயணத் தவநெறித் திருமுறை
2. வேல்மாறல் (வேல் வகுப்பை அடிப்படையாகக் கொண்டது)
3. திருப்புகழ் கோபூஜை
4. திருப்புகழ் பாராயணக் குண்டு (இரண்டாம் உலக யுத்தத்தின் போது வெளியிட்டது)



**வள்ளிமலை முருகன் மலைக் கோயில்**

5. அனுஷ்டானத் திருப்புகழ்
6. வள்ளிக் கல்யாணம் (திருப்புகழிலிருந்தே தொகுக்கப் பட்டது)
7. மனதுக்கும் அறிவுக்கும் சம்பாஷணை (திருப்புகழிலிருந்து)
8. மார்கழி மாத திருப்புகழ்.

திருப்புகழையே மகாமந்திரமாகக் கொண்டும், ஸ்ரீவள்ளியின் அத்யந்த பக்தி பூண்டவரான, திருப்புகழ் ஞானியானவர், 1950ஆம் வருடம் கார்த்திகை மாதம் அஸ்வினி நட்சத்திரத்தில், ஒரு பூதரும் அறியாத தனி வீடாகிய மோட்ச வீட்டை, தன் பூத உடலை உதறவிட்டு, இறைவனின் நிழலில் கலந்தார்.

மேற்கூறிய வள்ளிமலை எனும் தலம், சென்னையிலிருந்து சித்தூர் வழியாக பெங்களூருக்குச் செல்லும் மார்க்கத்தில், 120 கி.மீ. தூரத்தில் உள்ள திருவலம் எனும் தலத்திற்கு நேர் வடக்கு முகமாக 10 கி.மீ. தூரத்தில் உள்ளது.

# 7. திருமயிலைத் திருப்புகழில் நயங்கள்

திருவருணையில் முருகப் பெருமானால் தடுத்தாட் கொள்ளப்பட்டு, பாத தீட்சை பெற்றதன் பயனே, அருணிகிரியார் திருப்புகழ் போன்ற கவிதைகளைப் பாடி அருளினார். இவர் பாடிய பாடலுக்கு, வயலூர் பொல்லாப் பிள்ளையாரே ''செய்ப்பதியும் வைத்து உயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு'' எனத் தலைப்பு தந்து அருளியதால், இவரது பாடல்களுக்கு ஏற்றமும் தோற்றமும் உண்டாயிற்று. இவரால் பாடப்பெற்ற திருப்புகழ் பாக்கள் 16,000 என்பதனை, அந்தகக் கவி வீரராகவ முதலியார், ஒருபாடலில், ''எம் அருணகிரிநாதர் ஓதுபதினாயிரம் திருப்புகழ் அமுதுமோ'' எனக் குறிப்பிட்டிருக்கிறார். ஞானசம்பந்தர்பால் மிகுந்த பற்றுக்கொண்ட அருணகிரியார், சம்பந்தரைப்போன்றே 16,000 பதிகங்கள் பாட விரும்பினார். பாடியும் உள்ளார் அத்தனைப் பாடல்களும் நமக்குக் கிடைக்காது போனாலும், அமரர், வ.த. சுப்ரமணிய பிள்ளை அவர்களின் கடும் உழைப்பால், 1304 பாடல்களே புத்தக வாயிலாகக் கிடைத்துள்ளன.

சம்பந்தர் காலத்தில், கபாலீச்சுரம் ஆலயம் சாந்தோம் கடற்கரையில் இருந்ததாக ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக் கின்றனர். அருணகிரியார் காலத்தும் சாந்தோம் பகுதியில்தான் இருந்ததாக, இவரது பாடல்கள் வாயிலாக அறியமுடிகிறது.

மயிலையைக் குறித்து இவர் பாடிய பாடல்களில் 10 பாடல்களே இன்று நமக்குக் கிடைத்துள்ளன. இத்தலம் கடற் கரையில் இருந்ததால், மயிலைப் பாடலில், ''கடல் திரை அருகே சூழ் மயிலைப் பதி'' என்பதாகப் பாடியுள்ளதிலிருந்து அறிய முடிகிறது.

மயிலையைக் குறித்துப் பாடிய திருப்புகழ் பாடல்கள், அதன் வளத்தையும், நிலவளம், நீர்வளம் பொருந்தி விளங்கிய தோடு, இயற்றமிழின் இயல்பு நிரம்பியிருந்ததாம். இதனைக் குறித்து, ''இயலின் இயல் மயிலை'' எனப் பாடியுள்ளார்.

இங்கே புலவர் பலர் வாழ்கின்றனர் என்பதை உணர்ந்து, ''புலமையும் மகிமையும் வளமும் உறை திருமயிலை'' எனப் புகழ்ந்துள்ளார். மேலும் மயிலையில் மறையோதுபவர்களும் மிகுதி. வேதமும் வேள்வியும் ஒன்றோ டொன்று தொடர்புடைய தைக் கண்ட அருணகிரியார், ''வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு'' என்று மணிவாசகப் பெருமான் பாடியதற்கேற்ப, ''சுருதிமறை வேள்வி மிக்க மயிலை நகர்'' என்று 'களபமணி' எனத் துவங்கும் மயிலைப்பதிபாடலில் பாடியுள்ளதையும் கவனிக் கலாம்.

மயிலையில் பலா மரங்கள் வானளாவி உயர்ந்தும், தாமரை பூத்தவாவிகளும், வயல் வளமும் சிறப்புற்று விளங்கியதோடு, மயிலையில் மாணிக்கம் அழுத்தப் பெற்ற மாடமாளிகைகளில், மாடங்களின் சிகரங்களையும் எழிலோடு அமைந்திருந்ததைக் கண்ட அருணகிரியார்,

*'' வடிவுலாவி ஆகாச மிளிர் பலாவின் நீள் சோலை*
*வனசவாவிபூ ஓடைவய லோடே;*
*மணிசெய் மடமாமேடை சிகரமோடு*
*வாகான மயிலை ''*

என்பதாக வர்ணித்துப் பாடியதிலிருந்து அறிய முடிகிறது.

இப்பதியில், ஞானசம்பந்தர் இறந்துபோன பூம்பாவை எனும் பெண்ணின் எலும்புகளை நோக்கித், திருப்பதிகம் பாடி, உயிரோடு எழுப்பச் செய்த அற்பதச் செயலைக் குறித்து,

*"அளகை வணிகோர் குலத்தில் வனிதைஉயிர் மீளழைப்ப*
*அருள்பரவு பாடல்சொற்ற – குமரேச"*

என அருணகிரியார் புகழ்ந்து பாடியுள்ளதைக் கவனிக் கலாம். பொதுவாக, சிலர் தமிழ் செய்த கீர்த்தி எனக் கருதிய போதிலும், அருணகிரியார்; அவ்வாறு கூறாது, தமிழ்ப்பாடல் செய்த அற்புதமேயாகும் எனக் கூறியிருத்தல் ஒரு சிறப்பாகும். சம்பந்தர், ஏனைய நாயன்மார்களைப்போல் அல்லாது, பெண்ணை உயிர்ப்பிக்க, முழுமுதற் கடவுளாகிய சிவனிடம் முறையிடாது மாண்ட பெண்ணின் அஸ்திகளை நோக்கியே பாடியுள்ளது மிகவும் சைவர்களின் சிந்தனைக்குரியது.

முருகனே, ஞானசம்பந்தராக அவதாரம் செய்தார் எனும் கருத்துடையவர் அருணகிரியார். இதனை உறுதி செய்ய அகக்கண் கொண்டு இவரது பாடல்களைக் கவனித்தால் விளங்கும், ஞானசம்பந்தர் செய்த அற்புதச் செயலை முருகனது செயலாகவே கூறுகிறார்.

அருணகிரியார் மாதர் மயலில் சிக்குண்டு துன்புற்றிருப்பார் என அவரது பாடல்களை அகச் சான்றுகளாகக் கொண்டு கருது வோரும் இருக்கலாம். அவரால் கூறப்பட்ட துன்பங்கள் யாவும் தொகுத்து வைத்துப் பார்த்தால், ஒரு மனிதன் தன் பிறவியில் அத்தனை விதமான துன்பங்களை அனுபவிக்க இயலாது எனவே தோன்றும். பிறரது குறைகளைத் தம்முடையவைபோல் வைத்துப் பாடுவது அருளாளர்கள் இயல்பு. இதனை 'நைச்சியாநு சந்தானம்' எனச் சொல்லுவர்.

மயிலைத் திருப்புகழில் பரத்தையர் மயலில் உழன்றதாக வரும் இடங்களைப் பார்ப்போம்.

(மயிலைப் பாடலில், முற்பகுதியில்)

''அயிலொத்தெழுமிகு – விழியாலே
அமுதொத்திடு மரு – மொழியாலே
சயிலத்தெழு துணை – முலையாலே
தடியுற்றடியனு – மடிவேனோ''

என்பதில், அவர் தம் செயலாகக் கூறுவனற்றை நம் பொருட்டுப் பாடியது என்றே கொள்ள வேண்டும். அவ்விதம் நாம் பாடி விண்ணப்பித்துக் கொள்ளும்படி பாடல் அமைந்திருக்கிறது.

மற்றுமொரு பாடலில்,

*"அறமிலா அதிபாதக வஞ்சத் – தொழிலாலே*
*அயனேன் மெலிவாகி மனஞ்சற் – றிளையாதே"*

எனப் பாடியுள்ளதும் அத்தகையதேயாகும்.

இதுபோன்று மிகுதியாக மாதர்கமயலைப்பற்றி அருணகிரியார் செல்வதற்கு ஏதேனும் தக்க காரணம் இருக்க வேண்டும் அல்லவா?

அருணகிரியார் வாழ்ந்த காலத்தில் குறுநில மன்னர்களே மிகுதியும் ஆண்டுள்ளனர். நிலக்கிழார்களும், ஜமீன்களும், பெரும் தனவந்தர்களும் இருந்தனர். நாட்டில் போர் நேர்ந்திராதலால், மக்கள் சுவையான உணவுண்டும், மது அருந்தியும், விலைமாதர்களின் மோகத்தில் வாழ்நாளைப் போக்கியும் வாழ்பவர்களாகவே இருந்தார்கள்.

நாட்டில் வாந்தி பேதி, விஷச்சுரம் போன்றவை நேரிட்டால் வைத்தியர்கள், நோயாளி ஒவ்வொருவரையும் தனித்தனியே பரிசோதித்து அறிவதை விட்டு, பெரிய சீசாவில் வாந்தி பேதிக்கு மருந்தைக் கலக்கி வைத்து, ஒவ்வொருவருக்கும் கொடுப்பது போன்றே, மாதர்மயலாகிய நோய் மிகுந்து இருந்த காலமாதலால்

அண்டா அண்டாவாக மருந்தைக் கலந்து வைத்திருப்பதுபோன்று, அருணகிரியார் தமது பாடலில் பெரும் பகுதியாக பரத்தையர் களைப்பற்றி பாடியுள்ளார். இத்தகைய பெருந்தகையார், தன்னைப் பற்றி எவ்வாறெல்லாம் இழித்துக் கூறியுள்ளதை, மயிலைப் பாடலில்,

*" இசையும் உனதிருபத மலர்தனை மனம் இசைய*
*நினைகிலி, இதமுற உனதருள் இவரவுருகிலி*
*அயர்கிலி, தொழுகிலி, – உமைபாகர் மகிழும்*
*மகவென அறைகிலி, நிறைகிலி, மடமை –*

*குறைகிலி, மதியுணர்வறிகிலி, வசனம் அறவுறு மவுனமொடுறைகிலி"*

இவ்வாறு 9 முறை தம்மை இழித்துக் கொள்வதைக் காணலாம்.

திருமயிலைப் பாடலில், சிவனை, "கயிலைப்பதி அரன்" எனவும் புகழ்கிறார். எம்பெருமான் நடனமிடுவதை அநுகரண வோசையோடு வர்ணிக்கிறதை, "வருமயிலொத்த" எனத் துவங்கும் பாடலில் பார்ப்போம்.

*திரிரிரி தித்தித் தீத் தீத்தீ*
*தொகுதொகு தொத்தொகு தோதோதிகு*
*திமிதிமி தித்திமி ஜேஜே தீதிமி – தொதிதீதோ*
*தெனவரி மத்துளம் மீதார் தேமுழ*
*திருவென மிக்கியல் வேதாவேதொழு*
*திருநடம் இட்டவர்"*
என்பதைக் காண்கவும்.

முருகன் ஊர்ந்து வரும் மயிலும் நடனம் ஆடுகிறது. அதனை வர்ணிக்க, "அமருமமரரினி" எனத் துவங்கும் மயிலைப் பாடலில் :

*"தகுாத தகுர் ததிகு திகுர்த திகுர்ததிகு*
*தரர ரரரரிரி – தகுர்தாத*

*எமர நடனவித மயிலின் முதுகில் வரும்*
*இமையமகள் குமர"*

என நடன ஒலியோடு அமைத்துப் பாடியுள்ளதையும் காணலாம். உமாதேவியின் புதல்வன் எனக் கூறவந்தபோது, "தேவியின் பெருமையைக் குறித்துப் பாடுவார். "அபிராமி" எனவும், "மலையரையன் மாது" எனவும், பல திருநாமங்களை அடுக்கி வைத்தும் பாடுவார், பரை, அபிநவை, சிவை, சாம்பவீ, உமை, அகிலமும் அருள் அருள் ஏய்ந்த கோமளி, பயிரவி, திரிபுரை ஆய்ந்த நூல் மறை– சதகோடி ; பகவதி, இருசுடர் ஏந்து காரணி, மலைமகள், கவுரி, விதார்ந்த மோகினி, படர்சடையவனிடம் நீங்குறாதவள்– என்பதில் 14 நாமங்களால் புகழ்வதைப் பார்க்கலாம்.

பின்னும் – "வருமயிலொத்த " என வரும் மயிலைப் பாடலில்,

*"......நாரணி*
*உமையவள், உத்தரபூர்வா காரணி*
*உறுஜக ரட்க்ஷிணி, நீராவாரணி"*
*என 5 திருநாமங்களாலும் புகழ்வதைப் பார்க்கலாம்.*

முருகன், வள்ளியின்பால் பெருங்காதல் உடையவன். வள்ளியைப்பற்றிய செய்திகளை மயிலைப் பாடலில் அங்கங்கே இணைக்கத் தவறியதில்லை.

"மறவர் வாள் நுதல் வேடை கொளும்பொற் புயவீரா" என்பதில் வள்ளி, முருகனுடைய தோளைக் கண்டு வேட்கையுறுவதைச் சொல்கிறார். முருகனே வள்ளியிடம் இனிய மொழிகளைக் கூறி மகிழ்விக்கிறானாம். அதனைக் குறித்துப் பாடிய பாடல் : "இகல வருதிரை" எனத் துவங்கும் மயிலைப் பாடலில் :

*" சிகர தனகிரி குறமகள் இனிதுற*
*சிலத நலமுறுசில பல வசனமு*
*அறைபயில் அறுமுக '*

எனப் பாடியுள்ளார்.

அருணகிரியார், முருகனிடம், ''நினது பதம் தர வருவாயே'' என ஒரு வேண்டுகோளை விடுக்கிறார்.

*''அறமிலா அதிபாதக''*

எனும் பாடலில்,

*''திறல் குலாவிய சேவடி வந்தித் – தருள் கூடத்*
*தினமுமே மிக வாழ்வுறும் இன்பைத் – தருவாயே''*

என, அடியவருடன் கூடிமகிழ வேண்டும என்கிறார்.

*''இகலவருதிரை''*

எனும் பாடலில்,

*''இனிமை தரும் உனதடியவர் உடனுற*
*மருவ அருள் திருகிருபையின் மலிகுவது– ஒருநாளே''*

எனவும்

*''கடிய வேகமாறாத''*

எனத் துவங்கும் பாடலில் –

*''கொடியன் ஏதும் ஓராது விரகசாலமேமூடு*
*குடிலின் மேவியே நாளும் – மடியாதே*
*குலவுதோகை மீதூறு முகமும் வேலும் ஈராறு*
*குவளைவாகும் நேர் காண – வருவாயே''*

என்பதாகவும் பாடியுள்ளார்.

**இப்பாடலின் கருத்து :** இந்த விரகசாலம் மூடிய குடிலாகிய உடம்பை எடுத்து மடியாமல், உன்னுடைய திவ்ய தரிசனத்தைத் தர வேண்டும் எனப் பிரார்த்திக்கிறார்.

முருகனிடம் காதல் கொண்ட தலைவிக்கு அருள வேண்டும் என்று தோழி கூறும் கூற்றாக, அருணகிரியார் ஒரு பாடலைப் புனைந்திருக்கிறார். அந்தப் பெண் கலகமதவேள் தொடுக்கும் கணையால் வருந்துகிறாள். ஏனைய பெண்கள் கூறும் வசையினால் துன்புறுகிறாள். சந்திரனுடைய குளிர்ச்சி பொருந்திய ஒளி நெருப்பைப்போல் சுடுகிறது. இந்தத் துயரங்கள் எல்லாம் நீங்க,

*"வளமை அணிநீடு புஷ்பசயன அணைமீது ருக்கி*
*வனிதை மடல் நாடி நித்தம் – நலியாதே*
*வரியளி உலாவு துற்ற இருபுயம் அளாவி வெற்றி*
*மலரணையில் நீ அணைக்க – வரவேணும்"*

என்று தோழி கூறுவதாகப் பாடியுள்ளார். முருகனுடைய வீரச் சிறப்பைப் பற்பல விதமாக இவரது பாடல்களில் பாடியுள்ளதையும் கவனிக்கலாம்.

படிக்கப் படிக்க, பாடப் பாட அன்பு ஊறும் படி அமைந்த பாடல்கள் இவை.

(மேற்கோளாக வரும் பாடல்கள் அனைத்தும் மயிலைத் திருப்புகழ் பாடல்களிலிருந்தே கையாளப்பட்டுள்ளது.)

# 8. திருப்புகழில் மாருதி

உலகிலே எங்கும் எப்போதும் எதைச் செய்தாலும், தன் சுய நலத்துக்காக அன்றி பிறர்க்காகவே வாழ்நாளைத் தியாகம் செய்பவர்களே, எல்லோராலும் வணங்கத்தக்க உத்தமர்கள் ஆவார்கள். அத்தகைய மரபிலே வாழ்ந்து காட்டியவரே, குறிப்பில் குறிகாணும் மாருதி, மாருதியின் அனைத்துச் செயலும் ஆராய்வோமானால், எந்தச் செயலும் அவருக்கான பலனைக் குறித்துச் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. இதனைப் புராணவாயிலாக அறிந்த போதிலும் சரித்திர வாயிலாக இந்த நூற்றாண்டில் வாழ்ந்து காட்டியவர்கள், மகாத்மா காந்தியடிகளும், அன்னை தெரஸாவும் ஆவர். பொருட் செல்வத்தால் அழியக் கூடியக் கீர்த்தி அருட் செல்வத்தால் என்றென்றும் புகழ்வோடு விளங்குவது தியாகத்தின் விளைவே என்பதை அறிதல் அவசியம்.



அனுமார் செய்த எல்லாத் தியாகங்களுமே, பிறரது துன்பத்தைக் களையவே வாழ்ந்து காட்டியுள்ளார். ஆபத்துகள் நிறைந்த இலங்கைப் பயணத்தை மேற்கொண்டதும், அது சமயம் நேர்ந்த பல இன்னல்களைத் துச்சமாக எண்ணியதும், சீதையைக் கண்டு மனம் மகிழ்ந்ததும், இராமபிரானுக்காகவேயன்றி, தன்னலத்திற்காக அல்ல என்பது யாவரும் ஏற்றுக் கொள்வதொன்றாகும். இராமனது துயரை நீக்கவே சிறிதும் சோர்வடையாது உழைத்தவர் என்பதில் சந்தேகமேயில்லை.

இராமபிரானது கீர்த்தியைப் பரப்பும் நோக்கத்துடன், விபூஷணன் இராமனைப் பரம்பொருள் எனக் கருதவே, இலங்கேஸ்வரனின் அரண்மனை ஏகினான். அனுமான் இராமனது போருக்கு உதவியதைப்பற்றி அருணகிரியார், **"தோலொடு மூடிய"** எனும் திருப்புகழில்,

*"பாலனமனான் முகசெம்பொற்*
*பாலனைமோத, பராதன பண்டப்*
*பாரியமாருதி தோள் மிசை கொண்டுற் — றமராடி*
*பாவிராவண்ணார்தலை சிந்திச் சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்*
*பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக் கினியோனே'*

எனப்பாடியுள்ளார். இதன் கருத்து, பால்நிறமுள்ள அன்னத்தின் மீது 4 முகங்களையும், செம்பொன் நிறத்தையும் கொண்ட பிரமனை மோதித் தண்டனை விதித்தவனே, முன்பு அந்தப் பெரிய அனுமாரின் தோள்மேலே வீற்றிருந்து போர் செய்து, பாவியாம் இராவணனுடைய தலைகள் சிதறவும், உத்தமராம் விபூஷணர் வாழ்வுறவும், மணந்த பாவையாம் சீதைப் பிராட்டியாரின் தோளைத் தழுவிய மாமனாம் திருமாலின் சிந்தைக்கு இனியவனே என்பதாகும்.

இராவணயுத்தத்தில் இராமபிரானைத் தன் தோளில் அமர்த்திச் சென்றது தன்னலம் கருதாது செய்த தொண்டல்லவா அது. பாடலில் வரும் கருத்தைக் கவனித்தால், மாருதி தன் சுய

நலத்துக்காகவா செய்தான்? மேலும் இராமகாதையே, அயோத்யா காண்டம் முதல் யுத்தகாண்டம் வரை திருப்புகழில் ''குனகியொரு மயில்'' எனத் துவங்கும் பாடலின் பின் 4 அடிகளில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்ததைப் பார்க்கலாம்.

*'' எனது மொழி வழுவாமல் நீயே குகான் மீதில்*
*எனவி ரகு குலையாத மாதாவும நேரோத*
*இசையுமொழி தவறாமலேயே கிமாமாதும் – இளையோனும்*
*இனிமையொடு வருமாயமாரீசன் மான் ஆவி*
*குலைய வருகர தூஷணா வீரர் வோர்மாள*
*இறுகி நெடு மரமேழு தூளாகவே வாலி– உயிர் சீறி*
*அனுமனொடு கவி கூடவாராக நீராழி*
*யடை செய்து அணைதனிலேறி மாபாவியூர்மேவி*
*அவுணர் கிளைகெட நூறியாலால மாகோப – நிருதேசன்*
*அருணமண் திகழ்பார வீராகராமோலி*
*யொருபது மொர்கணை வீழவேமோது போராளி*
*அடல்மருக, குமரேச மேலாய வானோர்கள் – பெருமாளே!''*

இதன் கருத்து, என் பேச்சுத் தவறாது நீ போவாயாக! காட்டுக்கு என் கைகேயியும், நேரே தம்மிடம் விஷயங்களை எடுத்து ஓத, சொன்ன சொல் தவறாமலே இலக்குமி அனைய மாது. சீதாதேவியும், தம்பி இலட்சுமணனும், காட்டுக்குப் போய், கண்ணுக்கினிய உருவத்துடன் வந்த மாயம் வல்லமாரீசனாம் மானின் உயிர் மாள எதிர்த்து வந்த கரதூஷணாராதிய வீரர்கள், போரில் மாள, நெருங்கி நீண்டிருந்த மராமரங்கள் ஏழும் பொடி பட்டழிய, வாலியினுடைய உயிரைக் கோபித் தழித்து அனுமானொடு பிற குரங்குகளும் கூடி வர, கடலாகிய நீராழியை அணையிட்டு, அதன் மீது ஏறிச் சென்று, மகாபாவியாகிய இராவணனுடைய இலங்கையை அடைந்து, அரக்கர்களுடைய கூட்டம் எலாம்மாளப் பொடிபட்டழிய ஆலகாலம் விஷம்போல மகாகோபத்துடன் வந்த அரக்கர் தலைவன் இராவணனுடைய சிவந்த ரத்தனங்கள் விங்குவனவும், வரத்துக்கு இருப்பிடமான துமான கிரீடம் ஒரு பத்தும், ஒரே அம்பால் அற்று விழும்படி

தாக்கின போர்வீரனான திருமாலின் வலிமை நிரமபிய மருமகனே மேம்பாடுடைய தேவர்களின் – பெருமாளே என்பதாகும்.

அசோகவனத்தில் இருந்த சானகியின் கண்ணீரைத் துடைத்து, சிறைமீட்கக் கருதியதை ''அலங்காரமுடி'' எனும் திருப்புகழ் பாடலில் 5–வது சீரில் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

*" இலங்கேசர் வனத்துள் வனக் குரங்கு ஏவி, அழற்புகை*
*யிட்டு, இளந்தாது மலர்த்திருவைச் – சிறைமீளும்*
*இளங்காள முகிற் கடுமைச் சரங்கோடு கரத்தில் எடுத்து*
*இடுங்கான நடக்கும் அவர்க்கு – இனியோனே. "*

**கருத்து :** ''இலங்கைத் தலைவனாகிய இராவணனுடைய அசோகவனத்தில், காட்டில் வாசம் செய்யும் அனுமனை அனுப்பி, அவரால் இலங்கையில் நெருப்பின் புகையை உண்டாக்கி வைத்து மென்மை வாய்ந்த பூந்தாதுகளைக் கொண்ட செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இலட்சுமியாம் சீதையின் சிறைமீட்ட, இளமை வாய்ந்தவரும், கரிய மேகம் நிறம் கொண்டவரும், கொடிதான அம்பையும் வளைந்த வில்லையும் கையில் கொண்டவரும், சொல்வழியே இருண்ட பெரிய காட்டில் நடந்து வனவாசம் செய்தவருமான ஸ்ரீ ராமருக்கு இனியவனே'' என்பதாகும்.

விபூஷணனைக் கொல்ல, இராவணனால் எறியப்பட்ட வேலைத் தன் மார்பில் வாங்க ஓடி, இராமனது அடைக்கலப் பொருளான விபூஷணன் அழிந்தான் என்ற அவலச் செயல் வரக் கூடாது என்ற நோக்கத்தில் வாழ்ந்து காட்டியவன் மாருதி அல்லவா?

போர்க் களத்தில் இலட்சுமணன் மயங்கி விழுந்ததும், இராமன் கலங்கிய தருணத்தில், சஞ்சீவி மலையைக் கொணர்ந்து, லட்சுமணனது மயங்கிய நிலையைத் தெளிய வைத்து, இராமனை சாந்தி அடையச் செய்யவே வாழ்ந்து காட்டினான் அனுமன் தன்னலம் கருதாது.

சுக்ரீவன், இராமன், சீதை, இலட்சுமணன், விபூஷணன், பரதன் போன்றோர்களுக்கு எப்பொழுதும் தன்னலம் கருதாது வாழ்ந்து காட்டின தியாகம், மாருதியையே சாரும். தனக்கென வாழ்ந்ததாக இராமாயணத்தில் ஒரு செய்திகூட கூறப்படவில்லை.

பொதுவாகவே சான்றோர்கள் சுயநலவாதிகளாகப் போனது சமூகத்தின் துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். இதற்கு அனுமான் ஒரு விதிவிலக்கு செல்வத்தாலும், அதி காரத்தாலும் வாழ்க்கை நடத்துகிறவர்கள், சுயநலத்தையே நாடி வாழ்வது இயல்பாகவே அமைந்து விடுகிறது. இவற்றிற்கெல்லாம் மாமருந்து ருத்ரற் சிறந்த அனுமான் ஆவான். யார் யார் எந்த உருவம் தாங்கி இராமாவதாரத்தில், இராமபிரானுக்கு உதவினார்கள் என்பதை அருணகிரியார், **"கருவடைந்து பத்து"** எனும் பாடலில் பின்வரும் சீரில் வெகு அழகாகக் கூறியுள்ளதைப் பார்ப்போம்.

*" இரவி இந்தரன் வெற்றிக்குரங்கின்*
*அரசரென்றும் ஒப்பற்ற உந்தி இறைவன்*
*என் கினக் கர்த்தனென்றும், நெடுநீலன்*
*எரியதென்றும், ருத்ராற்சிறந்த அனுமன் என்றும்*
*ஒப்பற்ற அண்டவர் எவரும் இந்த வர்க்கத்தில் வந்து – புனமேவ*
*அரியதன் படைக்கர்த்தரென்றும் அசுரர் தங்கிளைக்*
*கட்டவென்ற*
*அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் – மருகோனே!"*

**இதன் பொருள் :**

சூரியன் கூறான சுக்ரீவன், இந்திரன் கூறான வாலி இவர்களிலிருவரும் வெற்றிக் குரங்கு அரசர்களாகவும், ஒப்பில்லாத திருமால் உந்தியில் பிறந்த பிரமன் சாம்புவானாகவும், நெடிய நீலன் எரியின் கூறென்றும், ருத்ரன் கூறு அனுமன் என்றும், ஒப்பில்லாத தேவர்கள் யாவரும், இந்த வகையாக பூமியில் வந்து சேர, தன் படைகளுக்குத் தலைவராகக் கொண்டு, அசுரர்களுடைய

சுற்றமெனும் கூட்டத்தை வென்ற அரிமுகுந்தன் மெச்சுகின்ற குணம் வாய்ந்த மருகோனே என்பதாகும்.

ருத்ரரின் அம்சமான அனுமானின் தியாகத் தொண்டுகளை எவ்வாறு புகழ்வது? அனுமன் கூர்ந்த மதிநுட்பத்தையும், பார்த்த மாத்திரத்திலேயே ஒன்றை அறியும் திறனும், வீரமும் பெற்றவன், அனுமானின் மதி நுட்பத்தைப்பற்றி, அருணகிரியார், ''உடுக்கத் துகில்'' எனும் திருப்புகழில், மாருதி மதிநுட்பத்தைப் பற்றிக் கூறியுள்ளதைப் பார்ப்போம்.

*'' குடக்குச் சிலதூதர் தேடுக*
*வடக்குச் சிலதூதர் நாடுக*
*குணக்குச் சிலதூதர் தேடுக – என மேவிக்*
*குறிப்பிற் குறிகாணும் மாருதி*
*யினித் தெற்கு ஒருதூது போவது*
*குறிப்பில் குறிபோன போதிலும் – வரலாமோ.*
*அடிக்குத்திர காரராகிய*
*வரக்கர் கிளையாத தீரனு*
*மலைக்கப்புற மேவிய மாதுறு – வனமே சென்று*
*அருட்பொற்றிருவாழி மோதிரம்*
*அளித்து உற்றவர் மேல் மனோகரம்*
*அளித்துக் கதிர்காமமேவிய – பெருமாளே''*

**இதன் கருத்து :**

வடக்கு, கிழக்கு மேற்கு போன்ற திசைகளில் குரங்குகளை ரவி விட்டபிறகு குறிப்பினாலேயே குறித்த பொருளைக் காணவல்ல அனுமானைத் தெற்கே சென்று, சீதையின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்து, இராமபிரான் தந்தருளிய பொன்னாலான அழகிய மோதிரத்தைச் சீதைக்கு அளித்துற்ற வராகிய அனுமாருக்கு அன்புடன் அனுக்கிரகித்து, கதிர்காமத்தில் வீற்றிருக்கும் – பெருமாளே – என்பதாகும். இப்பாட்டில், அருணகிரியாரே, குறிப்பில் குறிகாணும் மாருதி எனப் புகழ்ந்து

கூறியுள்ளது சமரச நோக்கிற்கு ஓர் எடுத்துக்காட்டு.

அனுமானம் என்ற ஒரு சொல் வழக்கத்தில் உள்ளது. ஊகித்து அறியும் திறனைக் குறிக்கும் என்பதே பொருள். வேடிக்கையாகச் சொன்னால், அனுமானம் என்ற சொல்லே, உருவம் பெற்ற வந்ததுதான் அனுமானோ எனக் கூறத் தோன்றுகிறது.

இராமபிரானை முதன்முதலில் கண்ட மாத்திரத்திலேயே, இவர் ஏதோ ஒன்றைப் பறிகொடுத்தவர்போல், மாருதிக்குத் தோன்றியதாம். அதற்கு ஏற்றாற்போல், சீதையின் பிரிவால் வாடுகிறார் என்பதாக அறிந்து கொண்டாராம். இதனைப்பற்றி கம்பர்,

*"அருமருந்தனையது இடை அழிவு வந்துளது, அதை*
*இருமருங்கிலும் நெடிது துருவுகின்றனரால்"*

**– கூறியுள்ளார்.**

அதாவது, அருமருந்தாகிய சீதையை இழந்து விட்டு, இருமருங்கும் தேடுகின்றார் என்பதாக, அனுமானித்தார் மாருதி எனக் கூறியுள்ளார்.

அருமருந்து என்பது – அமிர்தம். பாடலில் மனைவி என்ற சொல்லே வருவதாகத் தெரியவில்லையே எனச் சிலர் கருதலாம்.

பொதுவாக யாவர்க்கும் அவரவர் மனைவிதான் அருமருந்து என்பது மாருதியின் அனுமானம் – அதே போன்று சுக்ரீவன் மனைவியாகிய உருமிளை என்பவளை, வாலி கொண்டு போனான், எனக் கூறவந்த அனுமான், ''உருமை என்று இவருக்குரிய தாரமாம் அருமருந்தையும் அவன் விரும்பினான்'' – என்பதிலிருந்து அருமருந்தை தாரமே என்று கருதுகிறார். அனுமான், சீதையை இலங்கையில் தேடச் சென்றபோது, அரண்மனையிலுள்ள இராவணனுடைய படுக்கையறைக்குச் சென்றதும், தசக்ரீவன் மஞ்சத்தில், இயற்கைக்கு மாறாக,

பெருமூச்சு விடு உறங்கும் நிலையைப் பார்த்ததும், விரகதாபத்தால் தசக்ரீவன் பெருமுச்சு விடுவதை, தன் கூர்ந்த அனுமானத்தால், இவன் விருப்பத்துக்குச் சீதை இன்றுவரை இணங்கவில்லை என்று எண்ணத் தோன்றியது. மாறாக, சீதை இவனது இச்சைக்கு இணங்கியிருந்தால், இதுபோன்ற பெருமூச்சு விட அவசியம் ஏற்பட்டிராது. எனவே, இராவணனது பெருமூச்சுக் கொண்டே, சீதையின் கற்புக்குப் பங்கம் ஏற்பட்டிருக்காது என அனுமானித்தார் மாருதி. இத்தகைய ஒப்பற்ற மதிநுட்பம் வாய்ந்ததால்தான் மாருதியை யாவராலும் போற்றுகின்றனர் போலும். இதனைக் குறித்து திருப்புகழில் ''மானை விடத்தை'' எனும் பாடலில்,

*''சானகி கற்புத் தனை சுடத்தன்*
*அசோகவனத்தில் சிறைபடுத்திய*
*தானையரக்கற் குலத் தரத்தனை – வருமாள''*

**இதன்பொருள்** : சானகி கற்பு தன்னைச் சுடத் தனது அசோகவனத்தில் சிறையில் வைத்த சேனைகள் கொணட இராவணனது குலத்தைச் சேர்ந்தவர்கள் அத்தனை பேரும் இறந்தொழிய என்பதாகும். சீதையின் கற்புத் தன்மையே, இராவணனால் தொடாமலிருக்கச் சுட்டது. இதனால் கற்பின் தன்மை நம் நாட்டில் எந்த அளவு உயர்வாக மதிக்கப்படடு வந்தது என அறியப்படுகிறது.

வீரம் என்பது வேறு, தீரம் என்பது வேறு. உடம்பில் பலம் கொண்டு போராடுவது வீரம். மனோதிடம் கொண்டு போராடுவது தீரம். இரண்டு வகையிலும் தேர்ச்சி பெற்றவர் அனுமன் என்பதில் சந்தேகமே இருக்காது. இன்று வீரர்கள் சிலர் இருந்தபோதிலும் ஆனால் தீரர்களாக இல்லாதது நாட்டுக்கு இழப்பு. வீரத்துக்குத்தான் ஆயுதங்கள் தேவை. தீரத்துடன் போராட மனோதிடம்தான் ஆயுதமாகும். இதனைச் செயலில் செய்து காட்டியவர்தான் மகாத்மா காந்தியடிகள். தனக்கென ஆயுதம் எதுவுமின்றி, மனோதிடத்துடன் போராடியவர் ஆவார்.

இக்கருத்தை ஆணித்தரமாக நமது நெஞ்சங்களில் பதித்து வைத்தது, வின்சன்ட் சர்ச்சில் ஆற்றிய விளக்கங்களேயாகும். ''மகாத்மா காந்தி துப்பாக்கியைக் கொண்டு போராடியிருந்தால், அதை நசுக்கப் போதுமான பீரங்கிகள் எங்கள் வசம் உண்டு. அவர் கப்பல் மூலமாகத் தாக்குதலைத் தொடர்ந்தால், அவற்றை அழிக்க போதுமான விமானங்கள் எம்மிடம் உண்டு. ஆனால் அவர், மனிதனை மனிதன் அடிமைப்படுத்தக் கூடாது. மனிதனுக்கு மனிதன் அடிமைப்படுத்தக் கூடாது. மனிதனுக்கு மனிதன் அடிமையாவது தர்மமில்லை என்ற உண்மை தத்துவத்தையே ஆயுதமாகக் கொண்டு எங்களோடு போராடுகிறார். அதை எதிர்க்கவோ அழிக்கவோ எந்த ஆயுதங்களை இதுவரை விஞ்ஞானத்தால் கண்டுபிடிக்க முடியவில்லை. மேலும், அவரது உண்மைக் கொள்கையை எதிர்க்க ஆயுதங்கள் இல்லை'' என்பதாகும்.

இராமபிரான் மீண்டும் தன்னை வந்து அழைத்துக் கொள்ளமாட்டார் என்று துக்கம் மேலிட, சீதை தற்கொலை செய்யத் துணிந்தாள். சீதையே நினைத்த மாத்திரத்திலேயே கற்பு எனும் கனலால் சுட்டு எரித்துவிட முடியும். அவ்வாறு நிகழ்ந்தால், தன் கணவரது வீரத்துக்கு மாசு ஏற்பட்டு விடும் என்று அஞ்சியே வெகுநாள், இராமரது வருகைக்குக் காத்திருந்தாள். சீதை கொண்ட முடிவைப்பற்றி, ''மான நேர்வழி'' எனும் திருப்புகழில்,

*'' சானகி துயரத்தில் அருஞ்சிறை*
*போனபோது தொகுத்த சின*
*தாபசோப மொழிப்ப இலங்கையும்– அழிவாக ''*

**கருத்து** : சானகி துன்பத்துடன் அரிய சிறையில் பட்டு இருந்தபோது உண்டான கோபத்துடன், துன்பத்தையும், துக்கத்தையும் நீக்குதற் பொருட்டு, இலங்கை அழியவும் என்பதாகும்.

தற்கொலைக்குத் துணிந்த சீதையைக் காப்பது, அந்த நேரத்தில் அவ்வளவு எளிதல்ல, மேலும் தற்கொலை செய்ய

வேண்டாம் என்று கெஞ்சினாலும், சீதை அத்தருணத்தில் செவிசாய்க்க மாட்டாள் எனத் தனது மதிநுட்பத்தால் அனுமானித்த போதிலும், அசோகவனத்தில் தான் இதுகாறும் கேட்டிராத இராமநாமமாகிய "**ஹரேராம்**" என்ற கோஷம் மாருதி எழுப்பியதும், சீதை அதிர்ச்சியடைந்து, மனம் தளர்ந்து தான் கொண்ட முடிவிலிருந்து மாறுபட்டு, இராமன் நாமம் கேட்டதும் சுற்றுமுற்றும் பார்க்கத் தொடங்கினாள்.

இதனால் இராமபிரானுக்கும் மானம் சேர்த்தது அச்சமயத்தில் அவ்வளவு எளிதான செயலா? அதே நேரத்தில் இராமன் நாமம் மரணத்தில் இருந்தும் ஒருவரை மீட்கும் என்று அதற்குப் பெருமை சேர்த்தவரும் அனுமான் தானே. அதுசமயம் சீதை மட்டும் மாண்டிருந்தால், இராமனது புகழுக்கும் பங்கம் விளைந்திருக்கும் அன்றோ? இராமன் புகழைச் செவிகளுக்குத் தேனாகத் தித்திக்க அளித்தவன் மாருதியேதான் என்பதில் சந்தேகமே இல்லை. இதைக் குறித்துக் கம்பர்.

*" செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும்*
*கவிக்கு நாயகன்."*

எனப் பாடியுள்ளார்.

கவிக்கு நாயகன் என்பதில் ஓர் அழகுண்டு. சிலேடையாகவும் கொள்ளலாம். கவி – என்றால் குரங்கு என்று பொருள் உண்டு. மற்றொரு பொருள் கவிஞர் எனவும் கொள்ளலாம். கவிஞன் என்றது சிறந்த அறிவாளி என்பது பொருள். எனவே ஒரு வார்த்தையிலேயே, குரங்கின் தலைவன், அறிவாளிகளின் தலைவன் என இருபொருள்பட கம்பர் பாடினார். இன்னொரு சிறப்பு முண்டு கம்பனுக்கு. 'கவிக்கு நாயகன்' எனும் ஒரு பட்டமும் உண்டு.

இராம காதையில் அனுமனைப் படைக்கிற கம்பன், தன்னை அதில் வெளிப்படுத்திக் கொள்கிறார் எனறும் கொள்ளலாம். உதாரணத்திற்குத் திரைப்படத் தயாரிப்பாளர்கள், இயக்குனர்கள், தங்களே ஒரு பாத்திரமாக வெளிப்படுத்துவதுண்டு. தாங்கள்

சொல்ல நினைப்பதை வெளிப்படுத்த ஒரு கதாபாத்திரத்தை உருவாக்கி, அவசியம் ஏற்படின், தாங்கள் அதே கதாபாத்திரத்தை ஏற்று நடிப்பதும் உண்டு. அதேபோன்று, கம்பராமாயணத்தைத் திரைப்படம் ஆக்கினால், கம்பன் ஏற்க விரும்பும் வேடம் **அனுமன்** தான். காரணம் இருவரும் கவிக்கு நாயகன் ஆவர்.

அனுமன் சீதையை மட்டும்தானா மரணத்தில் இருந்து மீட்டார், இல்லை, இலட்சுமணனை, பரதனை மரணத்தில் இருந்தும் மீட்டார் மாருதி அல்லவா. இவர்களில் யாராவது மாண்டிருந்தால், இராமர் நிச்சயம் துக்கம் தாளாது, மாளத் துணிந்திருப்பார். எனவே, சுற்றி வளைத்து, இராமனையே மரணத்திலிருந்து மீட்டார் எனவும் கொள்ளலாம். அவ்வாறு இராமனுக்கு ஒன்று நேர்ந்திருந்தால், அயோத்தி மக்கள் நிலை என்னவாகும்? அந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால், அனுமனது தியாகத் தொண்டு பல்லாயிர மக்களையும் மரணத்திலிருந்து மீட்டது என்றாலும் மிகையாகாது. இத்தகைய அனுமாரது தியாகத் தொண்டுக்கு என்ன பரிசு தர முடியும்? இதே தடுமாற்றம் காவியத் தலைவி சீதாப்பிராட்டிக்கும் ஏற்பட்டது.

இராமபிரான் போரில் வெற்றி அடைந்ததும், அனுமான் இலங்கைக்குத் தீவைத்ததுப் பற்றி, அருணகிரியார், நம்மனக் கண் காண்பது போல், தாம்பாடிய ''தலங்களில் வருங்கன'' பாடலில், தீ வைத்ததைப்பற்றி எவ்வவு துல்லியமாகப் பாடியுள்ளதைப் பார்ப்போம்.

*" இலங்கையிலங்கிய இலங்களுள் இலங்குருள்*
*இலங்கணும் இலங்கென — முறையோதி*
*இடுங்கனல் குரங்கொடு நெடுங்கடல் நடுங்கிட*
*எழுந்தருள் முகந்தனன்"*

**பொருள் :** இலங்கை நகரில் விளக்கமுற்றிருந்த வீடுகளுள் விளக்கமுற்ற அருள் இல்லாத எல்லா இடத்தும், அக்னியே பற்றி எரிவாயாக எனக் கட்டளையிட்டு, நெருப்பை வைத்த

குரங்கெனும் அனுமானோடு, பெரிய கடலும், நடுக்கம் கொள எழுந்தருளின இராமபிரானாகிய முகந்தன்'' என்பதாகும்.

இந்தச் சீர், ''வாக்கிற்கு அருணகிரி'' எனும் முதுரைக்கு எடுத்துக்காட்டு, இந்த ஒரே சீரே போதுமானது என்று கொள்ளலாம்.இக்கருத்து இராமாயணத்தில் இல்லாதது.

இராமபிரானது வெற்றிச் செய்தியை அறிவித்தும், அனுமானுக்கு என்ன பரிசு தருவது என்று சீதாதேவிக்குப் புலப்படவில்லை; உலகம் மூன்றினையும் கொடுக்கலாம் என்றால் அது நிலையில்லை, மேலும் விலையில்லை. கண்ணீரைத் தன் கரத்தால் துடைத்தபடி, ''அப்பா ஆஞ்சனேயா, என் தலையால் உன் கால்களில் தொழுது வணங்குவதைத் தவிர, எனக்கு வேறு கைம்மாறு இல்லை, என வெளிப்படுத்திவிட்டாள் ஜானகி.

எந்தவிதமான எதிர்பார்ப்பும் அற்ற தியாகத்திற்குக் கைம்மாறு இதைவிட வேறு எதுவுமில்லை. உலகமே எவரை அன்னை என்று தொழுகிறதோ, அந்த அன்னையே, ''அப்பா, உன் திருவடியில் என் தலைவைத்து வணங்குகிறேன்'' எனக் கூறியது, சீதை ஒப்புயர்வற்ற நாயகியாகக் காட்டும் இடம் இது. இதைப்பற்றி கம்பர் கூறியதைப் பார்ப்போம்.

''உலகம் மூன்றும் உதவற்கு ஒரு தனி விலை இலாமையும் நினைந்தனன், நின்னை யான் தலையினால் தொழவே தகும் தன்மையோய்'' எனப் பாடியுள்ளார்.

பொதுவாகவே, முனிவர்களையும், கணவனையும் தவிர அன்னிய ஆடவரைக் கற்புடையப் பெண்கள் வணங்கலாகாது என்பர் சான்றோர். கணவனே வணங்கும் கணவனின் தந்தையைப் பெண் வணங்குகிற மாதிரிதான் இது.

அனுமன் சஞ்சீவிமலையைக் கொணர்ந்து, மயக்க முற்றிருந்த இளையபிரானைத் தெளிவித்ததும், இராமன், மாருதியை நோக்கிச் சொன்னது, ''அனுமா, இது நாள்வரை

நாங்கள் தசரது புத்திரர்கள். ஆனால் இந்தப் போரில் நாங்கள் மாண்டு போனோம். நீ சஞ்சீவி மலையைக் கொணர்ந்து மீட்டதால், மீண்டும் வந்தோம். அதனால் இன்று முதல் நாங்கள் உன் புதல்வர்கள் ஆனோம்.'' என்று கூறியதனால், அனுமானைத் தந்தை என்ற முறையில் நினைத்து விட்டபடியால், மாருதியை சீதாப்பிராட்டி வணங்குவதில் என்ன தவறு. இதைக் குறித்து கம்பர்,

*" மன்னின் தோன்றினோம் முன்னம் மாண்டுளோம்*
*நின்னின் தோன்றினோம், நெறியில் தோன்றினாய் "*

என வருணித்துள்ளார்.

பட்டாபிஷேகம் முடித்து, பரிசளிப்பு, பதவி ஏற்பு நிகழும் சமயம், அனுமானுக்கு என்ன பரிசளிப்பது என்று எல்லோரும் எதிர் பார்க்கையில், சீதை உள்பட, இலக்குவன் உள்பட, இராமபிரான் மாருதியை அருகில் அழைத்து, தான் எழுந்து நின்று, ''அப்பா! ஆஞ்சனேயா, உன் தியாகத்துக்கும், தொண்டுக்கும் ஏற்ற பரிசு என்னிடம் ஏதுமில்லை. தாங்கள் எங்களுக்கு இதுகாறும் எத்தனையோ உதவி செய்துள்ளாய். எனக்கு உன்னால் இன்னும் ஓர் உதவி செய்திடல் வேண்டும்'' என்றார் பணிவுடன். மாருதியை தன் அருகில் அழைத்து, உன் வலிமைமிக்க தோளும், கையும் கொண்டு என்னை ஒருமுறை சபையோர் முன்னிலையில் இறுகத் தழுவி அரவணைக்க மாட்டாயா? யான் நின்னிடம் எதிர் பார்ப்பதும், வேண்டுவதும் அதுவே'' எனக் கூறியது இராமன் நயக்கத்தக்க நாகரீகத்தின் எல்லைக்கே சென்று விட்ட காட்சியை, அனுமன் தன் நெஞ்சில் வைத்து, கண்களில் நீர் பெருகப், போற்றுகின்றான். இராம காதையிலேயே இராமனை ஒப்புயர் வற்ற நாயகனாக காட்டும் இடமாகும்.

அதுசமயம் சீதை, இலட்சுமணன், பரதன் ஏனைய ஆன்றோர்கள் கண்களில் இருந்து ஆனந்த அருவி பாய்ந்தது, கங்கையே இமயத்திலிருந்து அருவியாக வந்ததுபோல் காட்சியளித்தது.

இங்கு அனுமானது தியாகத்தின் முன்பு, இராமர் தன்னைச் சிறுவனாக்கிக் கொள்ளத் தீர்மானித்தார். அதற்குமாறாக, இராமரே அனுமனைத் தழுவினால் அவ்வளவு சிறப்புடையதாகாது, ஏற்றதும் ஆகாது. ஆதலால் அனுமன்தான் தன்னைத் தழுவி ஆதரவளிக்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.

இதைக் குறித்துக் கம்பர், ''பேர் உதவிக்கு யான் செய் செயல் பிறிது இல்லை; பைம்பூண் போர் உதவிய திண்தோள்களால் பொருந்துறப் புல்லுதி'' என இராமர் கூறினதாகப் பாடியுள்ளார். இதனால் அனுமானுக்கு ஏற்றமும், தோற்றமும் உண்டாயிற்று. எத்தனையோ தியாகங்கள் செய்த அனுமன், இராமன் வேண்டுகோளின்படி, அவரைவிடத் தன்னைப் பெரியவனாக்கிக் கொள்ளும் தியாகத்துடன், இராமபிரான், தோள்களை, அதற்கு முன்பும் சரி, பின்பும் சரி, இதுபோன்ற பெருமைமிக்க கவியின் தியாக ஆரத்தை அணிந்தது இல்லை.

தழுவிய அனுமன் பெரியவர். தழுவப்பட்ட இராமர் சிறியவர். தன்னலமற்ற தியாகப் பெருமைக்கு அறிகுறியாகப் பதவி ஏற்கும் தலைவர்கள், தங்களை ஏனையோர் முன்னிலையில் சிறியவர்களாகக் கருதுவதேதான் நல்ல பண்பாக இருக்க முடியும். மக்களும் எதிர்பார்ப்பதும் அதுவே.

யாவரும் முன்னோக்கி வாழபின்னோக்கி இராமகாதை போன்ற வரலாறுகளை ஆய்ந்து படித்து, ஒரு மன உறுதியோடு தன்னலங் கருதாது, மக்கள் அனைவருக்கும் தொண்டு செய்து வாழ்வதே சிறப்பாகும்.

*" உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே. "*

# 9. ''பூரணமதான திங்கள்''

## பாடல் விளக்கம்

**வி**னா : ''வீரமதன'' எனத் துவங்கும் பழமுதிர்சோலை தலத்துத் திருப்புகழ் பாடலில் 7–வது அடியில்,

*'' பூரண மதானதிங்கள் சூடுமரனாரிடங்கொள்*
*பூவையருளால் வளர்ந்த – முருகோனே''*

எனப் பாடியுள்ளதில், சிவபெருமான் தன் சடாமுடியில் அணிந்து பிறைச்சந்திரன் என்று நாயன்மார்களும், அருளாளர்களும் பாடியிருந்த போதிலும், அருணகிரியார் மட்டும் பூரணமதான திங்கள் எனக் கூறியுள்ளது, பொருத்தம்தானா? விளக்கம் அளிக்க வேண்டும்.

**விளக்கம்** : இவ்வடிக்கு உரை எழுதினவர்கள், என்றும் தேயாது, வளராது ஒருதன்மையாயிருக்கும் திங்கள் – எனக் கூறியுள்ளனர். இதேபோன்று கழுகுமலைத் திருப்புகழிலும்.

*'' கலைமதியப்புத்தரித்த வேணிய*
*ருதவிய வெற்றித் திருக்கை வேலவ,*
*கழுகுமலைக்குள் சிறக்கமேவிய – பெருமாளே''*

எனவும் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

தக்கன் தனது 25 பெண்களையும் சந்திரனுக்குத் திருமணம் செய்வித்த பிறகு கார்த்திகை, ரோகிணி என்ற மாதர்களிடத்து சந்திரன் அதிகப் பிரியம் காட்டினதால், தக்கன் கோபமுற்று, ''உன் கலைகள் எல்லாம் தேயக் கடவது'' எனச் சாபமிட்டான். சந்திரனது கலைகள் அவ்வாறே தேய ஆரம்பித்து ஒரு கலை எஞ்சி நின்ற சமயத்தில், சிவனைத் துதி செய்ததால் திங்களைத் தமது சடையில் சூட்டிக் கொண்டு தக்கன் சாபம் நிறைவேறாது, அந்த ஒரு கலை மட்டும் தேயாது எஞ்சி நின்றது என்பதனை,

*'' எம்முடி சேர்த்திய சிறப்பால் அந்தமிலை இக்கலை ''*

எனக் (கந்தபுராணம் – சந்திரசாப – 44) பாடலில் பாடி யுள்ளது கவனிக்கத்தக்கது.

ஆனால் இதற்கு வினோதமான பொருளை, அடியேனது தந்தையார் திருப்புகழ் நூலுக்கு உரை கண்ட தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளையிடம் கூறியபோது, அவர் அடைந்த ஆனந்தத்தின் மேலீட்டால், என் தந்தையாரை இறுகத் தழுவிக் கொண்டு, உமக்கு மேலும் அருணகிரிப் பெருமானே, தாம் இயற்றிய செய்யுள்களுக்கு அவ்வப்போது பொருள் விளங்காத இடத்து, தோன்றாத் துணையாயிருந்து, உரிய கருத்தினை விளக்கும் அற்றலைத் தந்தருள, உளமாரப் பிரார்த்திக்கிறேன் என்று வாழ்த்தியதைக் குறித்து, என் தந்தையாரின் நாட்குறிப்புப் புத்தகத்தில் எழுதியுள்ளதை, அடியேன் படித்தபோது என் கண்களில் நீர் பெருக உளம் புளகாங்கிதம் அடைந்தேன். என் தந்தையாருக்குப் புலப்பட்ட உண்மைப் பொருள் விளக்கம் :

எம்பெருமான் கயிலையில் நடனமாடும் சமயம், மிகவும் உற்சாகமாக உடனிருந்து கவனித்த உமாதேவியார் வியக்க, வேகமாகப் பம்பரம்போல் சுழன்று ஆடியதைப் பார்த்ததும், சடையில் அணிந்திருந்த பிறைச்சந்திரனும், சுழன்று ஆடும் நேரத்தில், முழுச் சந்திரனாக, உமாதேவியார் கண்ணுக்குப்

புலப்பட்டதையே அருணகிரியார் மனக்கண்ணால் நோக்கி அனுபவித்த பேரின்பக் காட்சியை எவரும் இதுகாறும் சொல்லாத நூதன பாணியில் பாடியுள்ளார்.

உதாரணத்திற்கு, ஒரு வட்டவடிவமான சக்கரத்தில் ஓர் இடத்தில் மட்டும் ஒரு சிறிய மின்சார பல்பைப் பொருத்தி, எரியச் செய்து, அச்சக்கரத்தை வேகமாகச் சுற்றினால், பார்வையாளர்க்குச் சக்கரம் முழுதும் ஒளிமயமாகத் தோன்றுவதைக் காணலாம். அதுபோன்றே எம்பெருமான் வேகமாகச் சுழன்று ஆடுகையில் அந்தப் பிறைச்சந்திரன் முழுநிலாவாகத் தோன்றி இருத்தல் வேண்டும் என்பதனை, அருணகிரியார் மனக்கண்ணால் அனுபவித்துப் பாடியிருத்தல் கூடும் என்று பொருள் கொள்வது சிறப்பாக அமையும் எனக் கருதியே, தனது நாட்குறிப்புப் புத்தகத்தில் எழுதியுள்ளனர். அன்னாரின் மகனான அடியேன் இதனை வெளியிடுவதில் பெருமைப்படுகிறேன்.

# 10. ''பித்தா, பிறைசூடி பெருமானே''

பொதுவாகவே, மன்னவியைத் தவிர மற்ற மங்கையர்களை எந்த ஓர் ஆண்மகனும் சபல புத்தியோடு நோக்குவது தவறு. இதனை மக்களிடையே அறிவுறுத்த சுந்தரரையே சிவன் கருவூலமாகக் கொண்டு நடத்திய நாடகம் யாவரும் அறிந்த ஒன்றே.

தேவலோக அனிந்திதை, கமலினி என்ற இரு மாதரும் இறைவனால் பூலோகம் வரவும், சுந்தரரைக் காதல் திருமணம் செய்து கொள்ளவும் பணிக்கப்பட்டார்கள். கைலாயத்திலும் காதல் நோக்கோடு சந்தித்ததின் விளைவே, பூலோகத்திலும் காதல் நோக்கோடு திருமணம் செய்து கொள்ள இறைவனால் அளிக்கப்பட்டது.

காதல் திருமணம் நிறைவேறும் முன்னரே, பெற்றோர்கள், சுந்தரருக்குத் திருமணம் செய்விக்க முற்பட்டனர். அது சமயம் இத்திருமணம் சம்பிரதாயப்படி நடந்திருக்குமாயின், இறைவனது கட்டளை என்னவாகும்? இதனைக் கருத்தில் கொண்டே, இறைவனே, முனிசிரேஷ்டராக வந்து, திருமணத்தை நடைபெறாது தடுத்தாடக் கொண்டார். அப்பொழுது காளைப் பருவத்தில் முறுக்கேறிய சுந்தரர், அம்முனிவரை ''பித்தா'' என வைத்தது யாவர்க்கும் தெரிந்து ஒன்று.

திருவெண்ணெய்நல்லூர் சிவனே, சுந்தரரை ஆட் கொண்டு, பித்தா என முதலடி எடுத்துப் பாடுக என வானொலி வழியாய்க் கேட்டறிந்த சுந்தரனர், முதலில் எடுத்த முதல் "பாட்டிலேயே, முதல் பதமாக பித்தா எனப்" பாடத் துவங்கினார்."

இப்பாடலில் வரும் 'பித்தா' எனும் பதத்திற்கு, பித்தம் பிடித்தவன், சுவாதீனம் அற்றவன், பைத்தியக்காரன் என் றெல்லாம் பொதுவாக ஆன்றோர்கள் விளக்கம் கூறியிருப்பினும், அவ்வாறு இறைவரை அழைப்பது ஏன் என்பதற்குக் கருவூர்த் தேவர், திருவிசைப்பாவில் கூறியுள்ளது மிகவும் அருமையானது.

பாடல் :

*"தத்தையங்கனையார் தங்கள் மேல் வைத்த*
*தயாவை நூறயிரங் கூறிட்டு*
*அத்திலங்கு ஒரு கூறு உன்கண் வைத்தவருக்கு*
*அமருலகு அளிக்கும் நின்பெருமை*
*பித்தனென்று ஒரு கால்பேசுவர்"*

என வரும் பாடலின் கருத்து மாதர்கள் மேல் வைக்கும் இன்பத்தில், இலட்சத்தில் ஒரு பங்கு வைத்தாலும், தேவருலகு அருளி ஆட்கொள்ளும் எல்லையற்ற கருணைபற்றியே இறைவன் பித்தன் என அழைக்கப்படுகிறான் என்பதாகும். மற்றோர் திருவிசைப்பா பாடலில் : பித்தனென்று ஒரு கால் பேசுவரேனும் பிழைத்தவை பொறுத்தருள் செய்யும். கைத்தலம் சென்னிமேல் வைத்த கங்கை "கொண்ட கோளேச்சுரத்தானே" எனக் கூறியுள்ளதையும் கவனிக்கிற்பாலது.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திருச்சியிலிருந்து, திருவானைக்காவிற்குச் சென்று கொண்டிருந்த சமயம், அகிலாண்டேஸ்வரிமீது பாடிய ஒரு கவியில் கூறியுள்ள கருத்து மிகவும் போற்றத்தக்கது.

பாடலைப் பார்ப்போம் :

*" அளவறு பிழைகள் பொறுத்தருள் நின்னை*
*அணியுருப் பாதியில் வைத்துத்*
*தளர் பழைமூன்றே பொறுப்பவள் தன்னைச்*
*சடைமுடி வைத்தனன் – அதனால்*
*பிளவியல் மதியஞ் சூடிய பெருமான்*
*பித்தனென்றொரு பெயர் பெற்றான்*
*களமர் மொய் கழநிசூழ் திருவானைக்கா*
*அகிலாண்ட நாயகியே!"*

கருத்து : நீரில் மூழ்கிய ஒருவனை மூன்றே முறை தவணை கொடுத்து, பிறகு இறக்கச் செய்யும் கங்கையைத் தன்னுடைய சடைமுடியில் வைத்தார். என்றென்றும் அடியார்களது பிழை பொறுத்து இரட்சித்து அருளும் அன்னையை உடலின் பாதிப் பாகத்தில் வைத்தார். அதனால் இவர் பித்தன் என்ற பெயர் பெற்றார் போலும் எனப் பாடியுள்ளது மிகவும் பாராட்டத்தக்கது. மேலே கூறப்பட்ட சிறப்பான கருத்துகளோடு, பித்தன் என முதலடியில் பாடியதற்குச் சிறியேனது மனத்தில் தோன்றிய மற்றுமோர் விளக்கத்தையும் இங்கு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.

குடிசைவாழ் பகுதியில் வாழ்ந்து வந்த ஒரு தம்பதியர்க்கு, ஓர் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தையைத் தாயானவள் மிகவும் அன்போடு வளர்த்து வந்தாள். சில வருடங்கள் கழித்து, கணவன் நோய்வாய்ப்பட்டு இறக்கலானான். திக்கற்ற அவன் மனைவி, பிழைக்க வழியறியாது, அண்டைவீடுகளில், வீட்டு வேலைகள் செய்தும், தொழிலாளர்களுக்கு மதியம் சாப்பாடு கொண்டு போய் கொடுத்தும், அதனால் கிடைக்கும் சொற்ப வருவாய் மூலம் மகனைப் படிக்கவும் வைத்தாள். மகனோ பள்ளிக்குச் சரிவரச் செல்லாமலும், படிப்பில் நாட்டம் செலுத்தாமலும் வரலானான். கூடுவாரோடு கூடி தீயப் பழக்கங்களை எல்லாம் கடை பிடிக்கலானான். கடைசியில் மது அருந்தவும், சிற்றின்ப நாட்டத்திலும் தன் வாழ்நாளைக் கழிக்கலானான். சில சமயம் பணம் தேவைப்படும்போதும், நண்பர்களின் துர்போதனையில்,

அண்டை வீடுகளில் திருடலானான். அது சமயம் ஊரார் அவனைக் கையும் களவுமாகப் பிடித்து, செம்மையாக அடித்து உதைத்தனர். இதனைக் கண்ட தாயானவள், அங்கு சென்று, ''என் மகனை அடிக்காதீர்கள். அவன் உங்கள் அடிக்குத் தாங்க மாட்டான். அவன் ஏதும் அறியாத அப்பாவி. அதற்குப் பதில் என்னை வேண்டுமானால் அடித்துக் கொல்லுங்கள்'' எனப் பலவாறு அங்குள்ளோரிடம் புலம்பி அழுதாள்.

அக்கூட்டத்தில் ஒருவர் தன் நண்பரிடம், ''பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு'' எனும் பழமொழி எந்த அளவுக்கு இங்கே அனுபவத்தில் காணமுடிகின்றது எனக் கூறலானார்.

இங்கு பெத்த மனம் பித்து என்பதில், வெளிப்படையான அர்த்தம் கொள்ளாது, பாசம், அன்பு எனக் கருதுதலே சிறப்பாகும். ஒரு தாய்க்கு மகன் எந்த அளவு பொல்லாதவனாக இருந்த போதிலும், அவன் மேல் உள்ள பாசம், அன்பு என்றுதான் கொள்ள வேண்டும். அதே போன்று எம்பெருமானும், ஆலால சுந்தரன் மேல் வைத்த பாசத்தினாலேயே, நிகழ இரந்த திருமணத்தைத் தடுத்து ஆட்கொள்ள வந்து சிவமுனிவராய் வெண்ணெய்நல்லூருக்கு வலிய வந்து நாடகம் ஆடினார். இத்தகைய இறைவனுடைய தாயன்பைப் போற்றியே சுந்தர மூர்த்தி நாயனார் ''பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா'' எனப் பாடியுள்ளார் எனலாம்.

# 11. விபீஷணர் சோதரி

இறைவனை 'ஞானமே வடிவினன்' என்று மறைகள் பேசுகின்றன. அத்தகைய ஞானம் நான்கு வகைப்படும் என ஆன்றோர்கள் கூறுவர். சிவஞானம், அனுபவ ஞானம், கலை ஞானம், மெய்ஞானம் எனப்படும். இந்நான்கினுள் அனுபவ ஞானமே சிறந்தது. ஏனைய மூன்றும் இதற்குச் சார்புடைய வனவாகும். அத்தகு அனுபவ ஞானமே பிறப்பறுக்கும் தன்மையது என்ற கருத்தைச் சேழக்கிழார், ''பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்'' எனக் குறிப்பிட்டுள்ளார். இதன் அடிப்படையிலே விளங்குவதே அருணகிரிநாதரின் திருப்புகழாகிய கவிகள். மத மொழி பகரினும், ஏழைக்கிரங்கும் பெருமாள், இதமொழி பகரும் அருணகிரியாருக்கு அருள் புரிந்ததில் வியப்பென்ன இருக்கப் போகிறது?

அருணகிரியார் திருப்புகழ் பாடல்களில் பெரும்பகுதியில் திருமால் மருகன் எனப் புகழ்ந்து பாடுவதில் மிகவும் விருப்பமுடையவர் என்பது இவரது பாடல்களில் காணலாம். நாராயணன் சம்பந்தமான இராமாயணம், மகாபாரதக் குறிப்புகள் பலவற்றைத் திருப்புகழில் காணலாம். இராமாயண நிகழ்ச்சிகளை விவரிக்கும் தருணத்தில், அதில் பங்கேற்கும் பாத்திரங்களைப் பற்றிய பாடிய பாடல் ஒன்றைப் பார்ப்போம்.

*"இரவி யிந்திரன் வெற்றிக் குரங்கி*
*னரச ரென்றும் ஒப்பற்ற வுந்தி*
*இறைவன் எண்கினக் கர்த்தனென்றும் – நெடுநீலன்*
*எரிய தென்றும் ருத்ரற் சிறந்த*
*அநும னென்றும் ஒப்பற்ற அண்டர்*
*எவரும் இந்தவர்க் கத்தில் வந்து – புனமேவ"*

–என்பதாகக் "கருவடைந்து பத்து" எனத் தொடங்கும் பாடலில் பாடியுள்ளார்.

**இதன் கருத்து :** "சூரியன் கூறான சுக்ரீவன், இந்திரன் கூறான வாலி இவர்கள் இருவரும் வெற்றிக் குரங்கரசர்களாகவும், ஒப்பில்லாத திருமால் உந்தியில் பிறந்த பிரமன் சாம்புவானாகவும், நெடிய நீலன் எரியின் கூறென்றும், ருத்திரன் கூறு அனுமன் என்றும் ஒப்பிலாகத் தேவர்கள் யாவரும் இந்த வகையாகப் பூமியில் வந்து சேர" என்பதாகும்.

இவ்வாறாக அருணகிரியார் பரக்கப் பாடியிருந்த போதிலும், இராமாயணத்தில் ஒரு குறிப்பிட்ட பாத்திரத்தின் அறிமுகம், வழக்கமாக அனைவரும் அறிந்ததற்கு மாறாக, சூர்ப்பணகையைப்பற்றிக் கூறப்பட்டிருப்பது மிகுந்த சுவை தருவதோடன்றி, இவரது புலமையின் சாதுரியமும் மெச்சத் தகுவதாகும். இப்பாடல் ஒன்றே "வாக்கிற்கு அருணகிரி" என்னும் தலைப்புக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அருணகிரியாரின் படைப்பில் சூர்ப்பணகையைப்பற்றிய குறிப்பு, இதுகாறும் இராமாயணத்தில் கூறப்படாதவகையில் வர்ணித்துள்ளது, நம்மை ஆழமாகச் சிந்திக்க வைக்கும் இடமாகும். இனி இதன் சம்பந்தமான "தாக்கமருக்கொரு சாரையை" எனத் தொடங்கும் திருத்தணித் திருப்புகழைப் பார்ப்போம்.

*"மூக்கரை மட்டை மகாபல காரணி*
*சூர்ப்ப ணகைப்படு மூளியு தாசினி*
*மூர்க்க குலத்தி விபீஷணர் சோதரி, முழுமோடி"*

பொதுவாக சூர்ப்பணகையைப்பற்றிக் குறிப்பிடும் எல்லாக் கவிஞர்களும், சூர்ப்பணகையை இராவணன் தங்கை என்றே குறிப்பிட்ட போதிலும், அதற்குமாறாக அருணகிரியார் மட்டுமே மேலே கூறப்பட்ட பாடலில் 5 வது அடியில் ''விபீஷணர் சோதரி'' என்று கூறுகிறார். ஏனையோர்கள் கூறுவதுபோல், இராவணன் சோதரி என்று குறிப்பிட்டிருந்தால் அதில் அத்தகைய சிறப்பு இருந்திருக்காது. பொது வழக்கில் கூறவேண்டுமானால், இரண்டு கருத்துகளையும் ''ஒரே குட்டையில் ஊறிய மட்டை'' என்றே கொள்ள வேண்டி வரும். ஆனால் ''விபீஷணர் சோதரி'' எனக் குறிப்பிடுவதால், சூர்ப்பணகைப் பாத்திரம் தனித் தன்மை பெற்றுவிடுகிறதல்லவா.

சூர்ப்பணகையைப் பலவகைப் பெயர்களால் குறிப்பிட்ட போதிலும், ''விபீஷணர் சோதரி'' என்ற சொல் மட்டுமே சூர்ப்பணகையைப் பெருமைப்படுத்துவதாக உள்ளது. ஏனைய பிறசொற்கள் அனைத்தும் எல்லோராலும், சூர்ப்பணகையைப் பற்றிக் கொண்டுள்ள பண்பை உறுதிப்படுத்துவனவாகவே உள்ளன. இது போன்று சூர்ப்பணகையின் இயல்பான பண்பைக் குறிப்பதாகவே பல பெயர்களால் கூறி, முற்றிலும் மாறாக ''விபீஷணர் சோதரி'' என அருணகிரியார் குறிப்பிடுவது ஏன்? எனும் வினா அனைவருக்கும் மனதில் எழுவது இயல்பே.

அருணகிரியார் ''விபீஷணர் சோதரி'' என்ற ஒரு சொல்லால் மட்டும் சிறப்பிப்பதில் நமக்குக் கேள்விக்குறியாக அமையக் காரணம், சூர்ப்பணகையிடம் எந்த ஒரு நற்பண்பும் இல்லை என்பதை இராமாயணம் படித்தவர்கள், கேட்டவர்கள் யாவரும் அறிவர். மேலும் விவரிக்கப் புகுந்தால், இராவணனைக் கொல்ல அவனோடு உடன்பிறந்த நோய் சூர்ப்பணகை என்றே கம்பர் குறிப்பிடுகிறார்.

ஒவ்வொருவரும் ஏதோ ஒரு நோயினாலோ, ஆபத்துகளினாலோ சாகின்றனர். அதனால் நோயை, உடன்பிறந்தே

கொல்வது என்று கூறும் முதுமொழி உலக வழக்கத்தில் உள்ளது. இராவணனைப் படைத்த பிரம்மன் அவன் உடம்பில் நோயை வைக்க முடியவில்லை. காரணம், இராவணன் செய்த தவத்தால் ஒவ்வொரு உடல் உறுப்பும் தவத்தின் பலனைப் பெற்றிருந்தது. அவன் மார்பு வாரணம் பொருத மார்பு. அவன் தோளோ மலையினை அசைத்த தோள். அவனது நாக்கோ நாரத முனிவர்க்கேற்ப நயம்பட உரைத்த நாவாகும். அவன் இடுப்போ சங்கரன் கொடுத்த வாள் அணிந்திருக்கும் இடுப்பு. அதனால் அவனது உடம்பில் நோயை வைக்க முடியவில்லை. உடன் பிறந்தே கொல்லும் நோயை உடம்போடு பிறக்க வைக்க முடியவில்லை என்பதால், பிரம்மன் அந்த நோயை மட்டும் சூர்ப்பணகையாக உருவாக்கி, இராவணனுடன் பிடிக்க வைத்து விட்டான் எனக் கம்பர் நயமாகக் கூறிய பாடலைப் பார்ப்போம்.

*" நீலமா மணிநிற நிருத வேந்தனை*
*மூலநாசம் பெற முடிக்கும் மொய்ம்பினால்*
*வேலை நாள் உயிரொடும் பிறந்து, தான்விளை*
*காலம் ஓர்ந்து உடன்உறை கடியநோய் ஆனாள்!"*

அத்தகைய சூர்ப்பணகையை "விபீஷணர் சோதரி" என அருணகிரியார் கூறக் காரணம் தமிழகத்தில் சூர்ப் பணகையைப் பற்றி வழக்கத்தில் இருக்கும் ஒரு வரலாறே ஆகும்.

சுங்கமந்திரன் என்ற அரசனுக்கு, குணசீலன் எனும் மகன் இருந்தான். நல்லொழுக்கத்தோடு வாழும் தன்மையுடையவன். அரசன் தனது மகனை அவைக்கள குருவாகிய ஆனந்தகுரு எனும் முனிவரிடம் சகல கலைகளையும், சாஸ்திரங்களையும் கற்க, அவரது இல்லத்திற்கு அனுப்பி வைத்தான். குருவிற்குச் சுமதி எனும் ஒரு மகள் இருந்தாள். குணசீலன் தினம் குருவின் இருப்பிடம் சென்று கல்வி கற்பது வழக்கம். குருவின் மகள் சுமதி, அரச குமாரனைக் காதலித்து அதை வெளியிடக் காலம் எதிர்பார்த் திருந்தாள். ஒரு நாள் குணசீலன் குருவின் இல்லம் சென்று சில

சந்தேங்களைத் தீர்த்துக் கொள்ளச் சென்ற சமயம் குருவானவர் ஆசிரமத்தில் இல்லை. சுமதி இதுவே தக்க தருணம் என எண்ணி, குணசீலனிடம் தன் காதலைத் தெரிவித்தாள். குணசீலன் குருவின் மகள் சுமதியைத் தன் தங்கையாகப் பாவித்தலே சிறந்ததெனக் கூறி, அவளது எண்ணத்தை மறுத்துவிட்டு திரும்பி விட்டான். தந்தை ஆனந்த குரு வந்ததும், சுமதி நிகழ்ந்ததை மாற்றிவிட எண்ணி, தனித்திருக்கும் போது அரச குமாரன் தீங்கிழைக்க முற்பட்டான் என முறையிட்டாள். ஆனந்த குரு உடனே இந்தச் செய்தியை அரசனிடம் முறையிட்டார். மன்னன், சிறிதும் ஆராயாது குருவின் மகளைச் சகோதரியாகப் பாவிப்பதை விட்டுவிட்டு அவளை விரும்பினது குற்றம் எனக் கருதி ஏவலாளர்களிடம், அவன் உடல் உறுப்புக்கள் ஒவ்வொன்றுமம் வெட்டப்பட வேண்டும் என உத்திரவிட்டார்.

அதன்படி குணசீலனை நிலத்தில் கிடத்திக் கை,கால், மூக்கு என ஒவவொரு உறுப்பாக வெட்டினர். குணசீலன் துடிதுடித்து, பூமியில் கிடந்தபடியே, "ஆதிசேடனே, நீதான் இந்தப் பூமியைத் தாங்குவதாகப் புராணங்கள் கூறுகின்றன. மக்கள் தங்கள் குறைகளை நீக்கி மன்னனிடம் முறையிடுவது வழக்கம். மாறாக, மன்னனே நீதியறியாது தவறு செய்தால் யாரிடம் முறையிடுவது? ஆதிசேடனே! என் உண்மையான உள்ளத்தை நீயும் அறியாயோ?" எனப் புலம்பினான். அவன் இறக்கும் தருவாயில் அவனிடம் இரகசியமாக ஆதிசேடன், "குணசீலனே! உன் உண்மையான உள்ளத்தை நான் அறிவேன். குருவின் மகளை தங்கையாகவே நீ பாவித்தாய். சுமதியே பெருங்குற்றம் செய்தாள். இதற்குத் தண்டனையாக அடுத்த பிறப்பில் நீ விபீஷணனாகவும், உனக்கே இவள் தங்கையாகவும் பிறப்பாள். நானோ இலக்குவனாக அவதரித்து, நீ இப்போது உன்புலன்களை இழந்தது போல் அவள் புலன்களை அறுப்பேன்" என்றான். அதனால் மறுபிறப்பில் குணசீலன் விபீஷணனாகவும், சுமதி சூர்ப்பணகை யாகவும் பிறந்தனர். ஆதிசேடன் இலக்குவனாகப் பிறந்து,

சூர்ப்பணகையின் மூக்கு முதலிய உறுப்புகளை அறுத்தான். தமிழகத்தில் வழங்கும் இக்கதையை அருணகிரியார் முன்னரே அறிந்திருந்ததால் சூர்ப்பணகையைக் குறிக்க வந்தவர் ''விபீஷணர் சோதரி'' என்று குறிப்பிட்டார். இதனால் வினைப்பயனை விளக்கும் ஒரு குறிப்பை, சூர்ப்பணகைப் பாத்திரத்தில் பொருத்திக் காட்டியவர் அருணகிரியார் ஒருவரே என உறுதியோடு அறுதியிட்டுக் கூறலாம். ''விபீஷணர் சோதரி'' எனக் குறிப்பிடும் அருணகிரியாரின் இக்குறிப்பு, இராமாயண ஆராய்ச்சியாளர் களுக்கு ஒரு முக்கிய குறிப்பாகும்.

## 12. செண்டைக் கண்டு கொண்டேன்!

ஒரு சமயம்,

*"கனகந்திரள்கின்ற பெருங்கிரி*
*தனில் வந்து தகன் தகனென்றிடு*
*கதிர்மிஞ்சிய செண்டை எறிந்திடு*
*கதியோனே"*

எனும் திருப்பரங்குன்றத் திருப்புகழ் பாடலில் வருகின்ற பாடலில் 'செண்டை' எனும் பதத்துக்குப் பொருள் விளங்காது, எமது குருநாதராகிய வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளிடம் விளக்கம் கேட்க மனது உந்திய போதிலும், உள்ளூற அச்சம் தோன்றியதால், அறிஞர்கள் பலரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என நினைத்தேன்.

மேலே கூறிய அடியின் கருத்து:

''பொன் மலிந்த பெருங்கிரியான மேரு மலைக்கு வந்து தகன் தகனென்று ஒளி வீசும் செண்டை எறிந்த திறமை மிக்கவனே'' என்பதாகும்.

திருவிளையாடல் புராணத்தில் இதன் வரலாற்றினைப்பற்றி ஒரு பகுதியே உள்ளது. இதனையே அருணகிரிநாதர் தாம் பாடிய பாடலில், முதல் அடியிலேயே எவ்வளவு துல்லியமாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாணியில் விளக்கியுள்ளது இவரது கவித்திறனுக்கு இதைவிட வேறு எடுத்துக்காட்டுத் தேவையில்லை.

பொதுவாக யாவரும் செண்டு என்றால், பூச்செண்டு அல்லது பூப்பந்து என்றுதான் பொருள் கொள்வர். ஐயனார் திருக்கரத்தில் செண்டு இருக்கிறதென்றும், கரிகாற்சோழன் இமயமலையைச் செண்டால் அடித்துத் திரிந்தான் என்றும் சில செய்திகள் பண்டைய நூல்கள் மூலம்அறியப்படுகிறது. இச்செண்டு என்பது என்ன? பந்தா? அல்லது மலர்ச் செண்டு போன்ற ஆயுதமா? எல்லாம் சந்தேகமாகவே தோன்றின எனக்கு.

பல மாதங்களாகவே என் மனம் இதைப்பற்றி உறுத்திக் கொண்டிருந்தது. அருணகிரிநாதரும் பொருந்தாத ஒன்றைக் குறித்துப் பாடியிருக்க மாட்டார் என உறுதியாயிருந்தேன்.

செண்டு எனும் பதம் வேறு எந்த நூல்களிலாவது வருகிறதா என ஒரு மூதறிஞரைக் கேட்டபோது, "இந்த வார்த்தை வில்லி பாரதத்தில் வருகிறது படித்து அறியவும்." எனக் கூறி, வில்லிபாரதத்தில் சபா பருவத்தில் சூதுபோர் சருக்கத்தில் வந்துள்ளது எனக் கூறியதும், அதில் ஒரு பாடலில் இப்பதத்தைத் உபயோகித்து உள்ளதைக் கண்டேன். காந்தாரியோடு இருந்த திரௌபதியை, துச்சாதனன் இழுத்துச் சென்றதைப்பற்றி கூறப்பட்ட பாடலாகும்.

துச்சாதனன் திரௌபதி முன் சென்று தன் கையிலுள்ள செண்டால் அவள் கூந்தலைப்பற்றிச் செல்லலானான். அது குறித்த பாடல்,

*" தண்டார் விடலை தாயுரைப்பத்*
*தாய் முன்னணுகித் தாமரைக் கைச்—*
*செண்டால் அவள் பைங்குழல்பற்றித்*
*தண்டானாகிச் செல்கின்றான்.*
*வண்டார் குழலுடன் குலைய, மானங்குலைய*
*மனங்குலையக்*
*கொண்டாரிருப்பரென்று நெறிக்கொண்டாள்.*
*அந்தோ கொடியாளே—"*

என்பதாகும்.

திரௌபதி அந்நாளில் தீண்டாத நிலையில் இருந்தாளென்று பின்னே ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளதையும் அறிந்தேன். ''தீண்டாத கற்புடைய செழுந்திருவை'' என நூலாசிரியரே குறிப்பிடுகின்றார். அதனால் துச்சாதனன் அவளைத் தன் கையினால் பற்றாமல் செண்டால் பற்றிச் சென்றான் என ஆசிரியர் கூறுகின்றார். இதைப் பற்றிய விவரங்களைப் பல தமிழ் அறிஞர்களிடம் கேட்டேன். ''கைச்செண்டால் அவள் பைங்குழல் பற்றி'' என வரும் தொடரால் குறிக்கப்பட்ட செண்டு என்பதற்குப் பூச்செண்டு எனப் பொருள் கூறிச் சமாதானப் படுத்தினார்.

அது சமயம் துச்சாதனன் கையில் பூச்செண்டு ஏது? திரௌபதி கூந்தலில் அணிந்திருந்த புஷ்ப ஆரத்தைப் பிடித்து இழுத்தான் எனப் பொருள் கொள்ளலாமா? ஆனால் பாடலிலோ தெளிவாகக் கைச்செண்டால் எனப் பாடப்பட்டுள்ளதே! மேலும் அது சமயம் திரௌபதி தீண்டாத நிலையில் இருந்த அவள் கூந்தலில் மாலை அணிவதும், கையில் செண்டு வைத்திருப்பதும் இயல் பல்லவே!

செண்டு என்பதற்குப் 'பந்து' என்று பொருள் கொண்டு அதைச் சம்மந்தப்படுத்திப் பார்க்கலாமென்றால், பந்துக்கு இங்கே என்ன சம்பந்தம் என ஐயங்கள் தோன்றின. சரியான விளக்கம் அறியாது, என் தந்தையாரிடம் கேட்க, அது சமயம் என் தந்தையார் எதேச்சையாக அடியேனையும் துணையாக அழைத்துக் கொண்டு கும்பகோணம் செல்ல நேரிட்டதால், கும்பகோணத்திற்கு 6 மைல் தொலைவில் உள்ள ஆறுபாதி எனும் ஊரை அடைந்ததும், பொழுது இருட்டி விட்டதால், அவ்வூர் அக்ரகாரத்திற்குப் பின்புறமுள்ள குளக்கரை அருகே ஒரு பெருமாள் ஆலயம் இருக்கக் கண்டு, ஆலயத்துள் பிரவேசித்து மூலவரான ராஜ கோபால சுவாமியைத் தரிசிக்கச் சென்றோம்.

பட்டாச்சாரியார் அர்ச்சனை முதலியவைகளைச் செய்து பிரம்பைப்போல் ஒன்று பெருமாள் கரத்தில் சாத்தியிருப்பதைக்

கற்பூர ஆரத்தியின்போது காட்டினார். என் தந்தையார் இது என்ன புதுமையாக இருக்கிறதென்று கேட்க, பிரம்பைப்போல தலைப்பில் இரண்டு வளைவுகள் இருப்பதை மறுமுறை மாலைகளை விலக்கித் தெளிவாக எங்களுக்குக் காட்டினார். இதுதான் செண்டு எனும் ஆயுதம் என்றும் சொன்னார்.

அதுசமயம் என் மனக்கண்முன் துச்சாதனன் தலைப்பு வளைத்த பிரம்பு போன்ற கருவியால்தான் திரௌபதி கூந்தலை இழுத்திருப்பான் எனும் காட்சி என் மனக்கண் முன்னே மின்னலைபோல் தோன்றி மறைந்ததும், அடுத்தடுத்து கரிகாலன் செண்டாயுதத்தோடு நின்றதையும், ஐயனாரும் என் மனக் கண் முன்னே தோன்றலாயினர். மதுரையில், உக்கிரவழுதி பாண்டியன் பஞ்சம் நேரிட்டபோது மேரு மலையைச் செண்டு என்னும் கருவியால் எறிந்ததைத்தான், அருணகிரியார் தம் பாடலில் ''கதிர் மிஞ்சிய செண்டை எறிந்திடு கதியோனே'' எனப் பாடியுள்ளதன் உட்கருத்தை அறிந்து பரவசமடைந்தேன்.

எதைப்பற்றி இதுகாறும் என் எண்ணம் ஆராய்ந்து கொண்டு இருந்தோ அந்தச் சந்தேக இருளை அகற்றி, முருகப் பெருமானின் மாமனாராகிய நாராயணனே துச்சாதனன், கரிகாலன், ஐயனார், உக்கிரவழுதி பாண்டியன் முதலானோர்கள் கையில் கொண்டுள்ள செண்டெனும் கருவி இன்னதுதான் என்று அறியும்படி, இத்திருவிளையாட்டினை நிகழ்த்தினான்போலும் எனக் கருதி, பட்டாச்சாரியாரை நோக்கித் தாங்கள் எங்களுக்குப் பெரிய உபகாரம் செய்தீர்கள். பெருமாளைத் தரிசித்ததால் எனக்குப் பெரிய இலாபம் கிடைத்தது. இதுகாறும் இந்தச் செண்டை நாங்கள் பார்த்ததில்லை எனக் கூறி விடைபெறும் சமயத்தில், பட்டாச்சாரியார், இவ்வுருவத்தை வடித்த ஸ்தபதியே தான் மன்னார்குடியில் உள்ள பெருமாளையும் வடித்துக் கையில் செண்டு ஆயுதத்தையும் பொருத்தியுள்ளதைக் கூறக் கேட்டோம். அம்மூர்த்திக்குச் செண்டலங்கார பெருமான் எனும் திருநாமம்

வழங்குவதாகவும், இதனைக் குறித்து இலக்கிய வாயிலாக உறுதி செய்யும்வகையில் ''செண்டலங்கார பெருமாள் வண்ணம்'' என்ற பிரபந்தம் ஒன்றும் உள்ளதாகவும் அறியக் கேட்டோம்.

அது சமயம் அடியேனுக்கும், சுந்தரர் திருக்கரத்தில் உள்ள செண்டும் ஓர் ஆயுதம் என்பதைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது.

ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றி னராய் அவ்வப்போது அருள் புரியும் முருகப் பெருமானை, முருகன், குமரன், குகன் என்று மொழிந்து உருகும் செயல் தந்து அருள என்றென்றும் கண்மலராலும், மனமலராலும், கை மலராலும் போற்றித் துதித்திடுவோமாக! முருகன் திருவருளே திருவருள்!

# 13. மேனை அரிவைக்குரிய பேரன்

பண்டைக்காலம் தொட்டே, வைணவமும், சைவமும், பரம்பொருளையே உறவாகக் கொண்டு பலவித உறவுக் கோணங்களில் பொருத்தி, அருட்கவிகளின் வாயிலாக அறிவித்துள்ளது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

அருணகிரியார், முருகப்பெருமானுக்கு நூதன முறையில் உறவு முறைகளைப் பொருத்திப் பாடியுள்ளது மிகவும் போற்றத் தகுந்ததொன்றாகும். அத்தகு உறவுமுறைகளைச் சிறிது ஆராய்வோம். பொதுவாகவே, முருகன் திருவருள் போற்றினால் பாடல்கள் புனைந்தவர்கள் மூவர் எனச் சைவமதம் அறிவிக்கிறது.

1. நக்கீரர், 2. கச்சியப்ப சிவாச்சாரியார், 3. அருணகிரிநாதர். முதல் இருவரும் பக்திரசம் ததும்பும் விதத்தில் சிவனோடும், பார்வதியோடும், விநாயகரோடும், திருமாலோடும், முருகனுக்கு உள்ள உறவு முறைகளைப் பாடியிருந்தபோதிலும் இவ்விரு வரையும் அருணகிரிநாதர் தமது திருப்புகழ் மூலம் மிஞ்சிவிட்டார் எனக் கூறலாம்.

பொதுவாகவே, எல்லாப் புலவர்களும் முருகனைச் சிவனது குமாரன் எனவும், பார்வதியின் மைந்தன் எனவும், விநாயகருக்குத் தம்பி எனவும், வள்ளி தெய்வயானை இருவருக்கும் கணவன் எனவும், திருமாலுக்கு மருமகன் எனவும்,

பிரம்மாவுக்கு மைத்துனன் எனவும், பாடிப் போந்துள்ளது யாவரும் அறிந்ததொன்றே. ஆனால் யாவராலும் கூறப்படாத உறவு முறையை முருகனுக்குப் பொருத்திப் பாடியவர் அருணகிரியார் ஒருவர்தான் என்றால் மிகையாகாது. அருணகிரியார் பாடிய வேளைக்காரன் வகுப்பில்,

*"மேனை அரிவைக்குரிய பேரனும் மதித்ததிறல்*
*வீரனும், அரக்கர்குல – சூறைக்காரனும்"*

எனப் பாடியுள்ளமை சிந்திக்கத் தகுந்தது.

**இதன் கருத்து :**

'மேனை அரிவைக்குரிய பேரனும், மேனை பார்வதியின்' தாயார். பார்வதியின் பிள்ளை ஆகிய முருகன் மேனையின் பேரன் ஆவார்.

அதாவது இமயராஜனின் மனைவியாகிய மேனை என்பவளுக்குப் புத்திரியாகப் பார்வதி பிறந்தாள். பார்வதிக்கு, முருகன் மகன் என்பது யாவரும் அறிந்துள்ள ஒன்று. அந்த முறையில் மேனையின் மகள் வயிற்றுப் பிள்ளையானதால், மேனைக்கு பேரப்பிள்ளை முருகன் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி என விளங்கும்.

இது போன்ற கருத்துக்களை அருணகிரியாரது பாடல்களில் பல இடங்களில் காணலாம். அருணகிரியார் காலத்துக்கு முன்பும் சரி, பின்பும் சரி எந்த அருளாளர்களும், இத்தகு உறவு முறையைத் தமது பாடல்களில் கையாண்டுள்ளதாக எங்கும் குறிப்புகள் காணவில்லை.

இனி மேனைக்குப் பேரன் என அருணகிரியார் உறவு கொண்டதுபோல் காரைக்கால் அம்மையாருக்கு முருகன் பேரன் என்ற வகையிலும் எண்ணி மகிழலாம்.

எல்லா நாயன்மார்களும், காதலால் கசிந்து உருகி பாடிய பின்னரே இறைவனிடத்தில் ஐக்கியம் அடைந்த போதிலும்,

காரைக்கால் அம்மையார் ஒருவர்தான், பேய் உருவம் கொண்டு கைலாயம் சென்று இறைவனைத் தரிசித்து மறுபடியும், மண்ணுலகத் திற்குத் திரும்பிய புண்ணியவதி என்றால் இவரது பெருமை அளவிடற்கரியது. காரைக்கால் அம்மையார் பேய் உருவம் கொண்டு கயிலையைக் காணச் சென்றதும், பார்வதி இவ் வுருவத்தைக் கண்டு, அதிர்ச்சியுற்று, யார் இந்த உருவம்? என இறைவனிடம் கேட்டதற்கு, முழு முதற் கடவுளாகிய சிவனே அவ்வுருவத்தைக் கண்டதும் குதூகலத்துடன் 'அம்மையே வருக' எனத் தாம் எழுந்து வந்து அழைத்ததைக் கண்டதும் பார்வதியே மெய்சிலிர்த்து நின்றாள்.

எந்த சைவ பராணங்களிலும், சிவன் எந்த அடியார் களையும் அப்பா என்றோ, அம்மா என்றோ, அழைத்ததாக எங்கும் குறிப்புகள் காணவில்லை. அதற்கு மாறாக காரைக்கால் அம்மையார் ஒருவரை மட்டுமே "அம்மையே" எனக் கூறியது பெரியபுராணத்தில் அறியப்பட்ட செய்தியாகும். இதனால் சிவனுக்குத் தாய் காரைக்கால் அம்மையார் எனக் கொள்வதில் பிழை என்ன இருக்கப்போகிறது? அந்த உறவு முறையில் முருகனைக் காரைக்கால் அம்மையாரின் பேரன் எனக் கொள்ள வாய்ப்பு உள்ளது. இதனை மறுக்கவோ மறைக்கவோ சைவமக்கள் யாவருக்கும் மனம் இடம் தராது எனக் கருதுகிறேன். இன்றைய நாளில் சிவாலயங்களின் பிரகாரத்தில் 63 நாயன்மார்களையும், கருங்கல்லிலும், பஞ்சலோகத்திலும் உருவச் சிலைகள் அமைத்திருப்பதைப் பார்க்கலாம். எல்லா நாயன்மார் களையும், சிலைவடித்த கலைஞன், நிற்கும் பாணியில் வடி வமைத்த போதிலும், காரைக்கால் அம்மையார் சிலையை உட்கார்ந்திருக்கும் பாணியில் சிலை வடித்துள்ளது, தாய்க் குலத்துக்கே பெருமை சேர்ப்பதாகும்.

# 14. தக்கனை வன்வாளியில் கொளும் தங்கரூபன்!

அடியேனின் தந்தையார், திருப்புகழ் அடிமை கா.ரா. முருகேசனின் குருநாதர் ஆகிய வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள், ஸ்ரீ அருணகிரி ஜெயந்தி விழாவினை வள்ளிமலை திருப்புகழ் ஆசிரமத்தில் கொண்டாடிய சமயம், அன்னார், ''என்னால் பிறக்கவும் என்னால் இறக்கவும்'' எனும் வயலூர் பாடலைப் பாடி முடித்ததும், என் தந்தையாரைப் பார்த்து ஏழாவது அடியில் வரும்.

*''மன்னான தக்கனை முன்னாள் முடித்தலை*
*வன் வாளியில் கொளும் – தங்கரூபன்''*

என்பதின் கருத்து என்ன எனக் கேட்டார். கல்வி அதிகாரி ஒருவர், ஒரு பள்ளிக்கு விஜயம் செய்தபோது, 3–ம் வகுப்பு மாணவனின் கல்வி தரத்தை அறிய 4–ம் 3–ம் சேர்ந்தால் எவ்வளவு எனக் கேட்டதும், மாணவன் 7–என்று பதில் கூறியதும், அதிகாரிக்கு முன்னமே இதை அறிந்திருந்தபோதிலும் சிறு மாணவன் வாயினால் கேட்டு ஒரு தனி இன்பத்தைக் காண்பதுபோல், குரநாதரே மேற்சொன்ன பாடலின் கருத்து தெரிந்திருந்தபோதிலும் அடியேன் வாயிலாகக் கேட்டு மகிழவே முருகப் பெருமான் திருவுளம் கொண்டார் போலும் என அகமகிழ்ந்தார். இப்பாடலின் கருத்தைப் பின்வருமாறு என் தந்தையார்,

அரசாய் விளங்கின தட்சப் பிரஜாபதியை முன்பு (அவனுடைய) முடியையும், தலையையும் (அல்லது கிரீடம் அணிந்த தலையை) கொடுமை வாய்ந்த அம்பினால் கொய்த - தங்கருபன்'' - எனக் கூறினார். இதில் தட்சனை வீழ்த்தியது யாரென்று வினாவிய குருநாதருக்கும்,

*" பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி ஈசனுக்கு "*
*— பொன்வண்ணத்து அந்தாதி — 1*

எனும் சேரமான் பெருமாள் நாயனார் பாடலையும் மேற்கோளாகக் கோட்டிட்டுக் காட்டினார்.

சிவனது கோபத் தீயினின்று வீரபத்திரரும், தேவியின் கோபத் தீயினின்று காளியும் தோன்றி தக்கனை அழித்ததைப்பற்றி, ''மாது சஞ்சார முகில்'' எனும் திருப்புகழில் 5,6,7 அடிகளில் தட்சனது யாகத்தில் தண்டனைகளை அனுபவித்தவர்களின் பட்டியலை அருணகிரியார் பாடியுள்ளதைக் காணலாம் என்றும் இதனை உறுதிபடுத்தும் வகையில் பல இறை சம்மந்தமான பாடல்களிலிருந்து தணிகை மணி வ.சு. செங்கல்வராயபிள்ளை அவர்கள் தந்த மேற்கோள்களையும் கூறினார்.

''மாக சஞ்சார முகில்'' எனத் தொடங்கும் அருணகிரியார் பாடலில் 5,6,7 அடிகளில் வருவது கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

*" வேகமுண் டாகியுமை சாற்று மளவினில்*
*மாமங்க கூரு மது தீர்க்க வடிவுடை*
*வீரனென் பானொரு பராக்ர னெனவர அன்றுசோமன்*
*மேனியுந் தேயகதிர் தோற்று எயிறுக*
*ஆனுகுந் தீகையற சேட்ட விதி தலை*
*வீழநன் பாரதியு மூக்கு நழுவிட வந்தமாயன்!*
*ஏகநின் றாகியமர் தோற்று வதறிட*
*வேகவுங் காரமெடு ஆர்க்க அலகைகள்*
*ஏறிவென் றாடுகள் நீக்கி முநிவரர் வந்து சேயென்றீச!"*

இப்பாடலில் தக்கனது யாகத்தில் தண்டிக்கப்பட்டவர்களைப் பற்றிக் கூறியுள்ளதைச் சிறிது ஆராய்வது அவசியம் எனக் கூறினார் என் தந்தையார்.

வேகம் (கோபம்) தோன்றி, உமை கூறினவுடனே (தக்ஷனுடைய) பெரிய மகம் மேற்கொண்டு நடப்பதை அழிக்கும் பொருட்டு ஒளி நிறைந்த வீர (பத்திரன்) எனப்பட்ட பராக்ரம சாலியாகிய ஒப்பற்றவன் தோன்றி வர, அன்று சந்திரன்,

உடல் தேய, சூரியனுக்கு உள்ள பற்கள் உதிர, (யாகப்) பசுவைத் (தடுத்துப்) பொடியாக்கும் தீ (ஆக்கினியின்) கை அற்றுவிழ, முதன்மையான தட்சப்பிரஜாபதியின் தலை அற்றுவிழ நல்ல சரஸ்வதியின் மூக்கு அறுபட்டு நழுவி விழ, (அங்கு) வந்திருந்த திருமால்,

ஓட்டம் பிடிக்க அந்த யாக சாலையில் நின்று, போர் விளைத்து, (அங்கிருந்தவர்களை) வைது (திட்டி) கோப ஆங்காரத்தோடு ஆரவாரஞ் செய்யப் பேய்க் கூட்டங்கள் கூடி வென்று ஆடின அந்த (யாக) சாலையை விட்டு (நீக்க – விலக்க) – (அல்லது) (யாவரையும்) வெளியே நீக்கினவனான (சிவனும்), முனிவர்களும் வந்து (சேயே) என்னும் 'ஈச' போற்றி!

என்னும் பாடலின் கருத்தை வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள் மிகவும் ரசித்து அப்பாடலினால் மிகவும் ஈர்க்கப் பட்டவரானார்.

இதனைக் குறித்து தணிகை மணி வ. சு. செங்கல் வராயபிள்ளை தேவாரங்களில் இருந்து சில பாடல்களை மேற்கோள் காட்டினார்.

*"சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் சுடரவன் கரமும்*
– முன்னியங்கு
*பருதியான் பல்லும் இறுத்தவர்க் கருளும் பரமனார்"*
– (சம்பந்தர் – 111–118–5)

*" தக்கனது பெருவேள்விச் சந்திரன் இந்திரன் எச்சன் அருக்கன் அங்கி மிக்க விதா தாவினொடும் விதிவழியே தண்டித்த விமலர்"*
(சம்பந்தர் – 1 – 131– 3)

*" வேகம் உண்டாகி உமை சாற்றின்"* வாசகம் –
*" சிறிய தொல்விதி பெரிதுனை இகழ்ந்தனன் பெரும அன்னவன் அரிதுசெய் வேள்வியை அழித்தி என்னவே"'*
(கந்த புராணம் – உமைவரு படலம் 59)

## தேவர்கள் அடைந்த தண்டனைகள்

| | | |
|---|---|---|
| அரி | – | கதைய தொன்றால் அடித்தனன்' அரிமுன் வீழ்ந்தான்' |
| பிரமன் | – | 'குட்டினன் ஒருதன் கையால்.' |
| நாமகள் | – | 'மூக்கொடு குயமும் கொய்தான்.'' |
| சந்திரன் | – | 'வீரன் தன்னொரு பதங்கொடே தேய்த்திட்டான்' |
| சூரியன் | – | 'கதிரவன் —— கவுளிடை எற்றினான் உகுப்பத் தந்தமே' |
| பிறிதொரு சூரியன் | – | 'பகனெனும் வெய்யவன் விழிபறித்தனன்' |
| கூற்றுவன் (எமன்) | – | 'கூற்றுவன் —— ஓடலும் வெட்டினன் அவன் தலை.'' |
| இந்திரன் | – | 'வாசவன் குயிலென உம்பரில் அடைந்தனன், அண்ணல் வீட்டினன்.' |
| அக்கினி – 'அங்கியை | – | அவன் கரத்தைத் துண்டமதாகவே துணித்து வீட்டினான்.' |

தக்கன் – 'ஈசனை இகழ்ந்தனை அதனால் தண்டம் ஈதென வாள்கொடே அவன் தலை தடிந்தான்.''

(கந்தபுராணம் – யாக சங்காரம் – 20–50

திருப்புகழ் பாடலாகிய ''மாக சஞ்சார முகில்'' எனத் துவங்கும் பாடலுக்குத் தேவாரத்திலும் மற்றும் ஏனைய நூல்களிலிருந்து உவமைகளைக் கொடுத்துள்ளது நோக்கின் அருணகிரியாரே புத்துயிர் பெற்று நம் மனக்கண் முன்காட்சியளிப் பதாகவே தோன்றுகிறது.

தணிகைமணி அவர்கள் சமய சந்தர்ப்பங்களுக்கேற்ப கூறும் சொல்வளம் படைத்தவர் என்பதற்கு இவரது வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை வாசகர்களின் நினைவிற்குக் கொண்டு வருவது அவசியம். திருப்புகழ் பாடல்களுக்கும், கந்தர் அலங்காரம், கந்தர்அந்தாதி, கந்தர் அனுபூதி, திருவகுப்பு போன்ற கவிகள் அனைத்திற்கும் உரை எழுதி வந்துள்ளதை டாக்டர். உ.வே.சா. அவர்கள் கண்ணுற்றதும், தாம் நோய்வாய்ப் பட்டுபடுக்கையில் இருந்தபோது தமது நண்பர்கள் இடம் தணிகை மணி அவர்களைக் காண விருப்பம் உள்ளதாகத் தெரிவித்தார். இச்செய்தியை நண்பர்களின் மூலம் அறிந்த தணிகைமணி வ. சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்கள் தாம் முதுமை அடைந்துள்ளபோதிலும், உடனே டாக்டர் உ.வே.சா. அவர்கள் இருப்பிடத்திற்குச் சென்றார். அங்கு அவரது பாதங்களைத் தொட்டு, ''இந்த இருபாதங்கள் தானே திருப்புகழ் ஓலைச் சுவடிகளை ஊர் ஊராகச் சென்று சேகரித்து என் தந்தையாருக்குத் தந்தது'' என வியந்து அவர் பாதங்களைத் தொட்டுப் பாராட்டினார். டாக்டர். உ.வே.சா. அவர்கள் படுத்தபடுக்கையாக இருந்ததால் வ.சு.செ. பிள்ளையை எழுந்து உட்கார்ந்து விசாரிக்க முடியாது போயிற்று. பிறகு அவரது அருகில் சென்ற சமயம் தணிகை மணியின் இருகரங்களையும் தன் கரங்களால் ஒருசேரப்

பற்றிக்கொண்டு, ''திருப்புகழ் முதலாக உள்ள பாடல்களுக்கு உரை கண்டது இந்தக் கரங்கள் அல்லவா!'' என்று கண்களில் நீர் வழிய இருவரும், ஒருவரோடு ஒருவர் பரஸ்பரம் பாராட்டிக் கொண்டனர்.

தணிகை மணி அவர்கள் அருணகிரியார் பாடல்களுக்கு உரை காண முற்படும்போது அதன் சம்பந்தமான ஏனையோரது பாடல்களை ஆராய்ச்சி செய்து விளக்கம் அளித்துள்ளது இவரது புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது. திருப்புகழ் முதலாகவுள்ள பாடல்களுக்கு உரை கண்டது இவரைத் தவிர இன்றுவரை வேறு எவரும் எழுதியதாக அறியப்படவில்லை. அன்னாரின் ஆத்மா மறைந்தாலும் திருப்புகழுக்காக ஆற்றிய பணிகள்யாவும் மங்காது, எக்காலத்தும் புகழோடு விளங்கும் என்பதில் ஐயம் இல்லை.

*" செயற்குஅரிய செய்வார் பெரியர் சிறியர்*
*செயற்குஅரிய செய்கலா தார்"*

என்னும் திருக்குறளுக்கு ஓர் எடுத்துக்காட்டாகச் சுமார் 600 வருடங்களுக்கு முன்னர் தோன்றிய அருணகிரியாரைச் ''சொல்லின் செல்வர்'' என்று அழைப்பதில் என்ன பிழை இருக்கப் போகிறது?

# 15. ஸ்ரீ அருணகிரியார் படைப்பில் கர்ணன்

கர்ணனைப் படித்தாலும், நினைத்தாலும் நெஞ்சம் கசிந்து கரைகிறது. வியாஸர் கர்ணனைப் படைக்கும்போது கண்ணீர் மல்கப் படைத்தார் என்றால், வில்லியோ கண்ணில் உதிரம் கொட்டப் படைத்தார் என்றே தோன்றுகிறது. வில்லி, வியாசரைத் தழுவியும், சில இடங்களில் நழுவி புதியன ஆக்கியும் நம்மிடையே கர்ணனை உலவ விடுகிறார். தமிழ்நாடு காட்டும் பாரி, காரி போன்ற வள்ளல்களைப்பற்றிய இலக்கிய உணர்வும், அருணகிரியார் தம் பாடலில் காட்டும் கர்ணனின் ஈகைத்திறனும் நமக்கு ஆராயப் பெரிதும் உதவுகிறது.

இந்துமதக் கலாச்சாரப்படி, பொழுது அஸ்தமித்த பிறகும், தர்மம் செய்வது சிறந்ததல்ல என்பதைக் கர்ணன் கடைபிடித்ததை, அருணகிரியார் தாம் பாடிய ''போக கற்பகக் கடவுள்'' எனத் துவங்கும் திருப்புகழில்,

''பொற்குவை உச்சிப் பொழுதில் ஈயும் போதுடைப் புத்திரரைப்போல '' எனப் பாடியுள்ளார். இக்கருத்தினையே, தாம்பாடிய கந்தரந்தாதி நூலிலும் (பாடல் – 15) ''திவாகரகன்ன'' என்று பாடல் ஆரம்பத்திலேயே தெரிவித்துள்ளார். இதன் பொருள்: திவா – பகலிலே, கரகன்ன – தர்மம் செய்யும் கரத்தையுடைய கர்ணன் – என்பதாகும். இதனால் கர்ணன், இந்து



**குந்தியும் அவளது மகன் கர்ணன்**

மதக் கலாச்சாரப்படி பகல் பொழுது வரைதான் தர்மம் செய்தான் என ஊர்ஜிதப்படுகிறது.

மேலும் கர்ணனைப்பற்றி மற்றோர் திருப்புகழ் ''குயிலோ மொழி'' எனத் துவங்கும் பாடலிலும் ''பொருள் உதவிய புதல்வனும் என நாடிமுதிய கன்னனெனை'' எனப் பாடியுள்ளார்.

தாயின் விளையாட்டு மகனுக்கு வினையானதை எண்ணிப் பார்க்காமல் குந்தி, துர்வாஸர் சொன்ன மந்திரத்தைப் பரீட்சித்துப் பார்த்தாள். அதனால் சூரியன் சேர்க்கையாலே, குாந்தையைப் பெற்றாள். குந்தி கன்னித் தாயானாள். குழந்தையைப் பெட்டியில் வைத்து கங்கையில் விட்டு விட்டனர். வரலாற்றில் கர்ணன் ஒரு அவயவீரனாகவே தேரோட்டியின் வீட்டில் வளர்கிறான். ஏவலர் புடை சூழ, மன்னர்கள் பணிவிடை செய்ய அரண்மனையில் வளர வேண்டியவன், தேரோட்டியின் வீட்டில் வளர்கிறான். பொதுவாக ஒருவனுக்கு உற்றதுணை 4எனக் கூறுவர், மாதா, பிதா, குரு,

தெய்வம் என்பனவாகும். கர்ணனோ நால்வராலும் கைவிடப் பட்டான். தாயோ, பிறந்த அன்றோ, உலகத்திற்கு நாணி, குழந்தையை ஆற்றில் விட்டு விட்டாள். தந்தை சூரியனோ, ஒரு வித உதவியும் செய்யாது விட்டுவிட்டான். வித்தை கற்கப் போன இடத்திலோ, இவன் க்ஷத்ரியன் எனக் கூறி குருவான பரசுராமரால் சபிக்கப் பெற்றான். கிருஷ்ணனோ, கர்ணனது எதிர் அணியிலிருந்து, இவனை அழிப்பதற்குப், பாண்டவர் பக்கமிருந்துப் வழிவகை செய்தார்.

இவனுக்குத் தரவேண்டிய அந்தஸ்தைக் கிருபரோ, பீஷ்மரோ அளிக்கத் தவறிவிட்ட போதிலும், துரியோதனன், கர்ணனுக்கு அங்கநாட்டைக் கொடுத்து, உடன் இருந்து நட்போடு பழகியும் வந்தான். இதனால் கர்ணனுக்கு ஏற்றமும் தோற்றமும் உண்டாகியிற்று.

மகன் யாரைப் பார்க்க வேண்டும் என்று வாழ்நாளெல்லாம் காத்திருந்தானோ அந்தத் தாயே மகனிடம் வருகிறாள். இந்தச் சந்திப்பு உள்ளத்தை உருக வைக்கும ஒப்பு உயர்வு அற்ற இடமாகும். குந்தியிடம் கர்ணன், துரியோதனன் நடந்து கொண்ட விதத்தை விளக்கினான். இந்நிகழ்ச்சி வியாச பாரதத்தில் குறிப்பிடப்படவிலலை. நட்பின் ஆழத்துக்கு எல்லோரும் இந்நிகழ்ச்சியையே உதாரணம் காட்டிப் பேசுவர். கர்ணன் ஒரு சமயம் பானுமதியோடு தனித்திருந்து சூதாட்டம் ஆடிக் கொண்டிருந்த சமயம், துரியோதனன் அங்கு வருவதும், பானுமதி எழுந்து நிற்க, எங்கே தோற்கப் போகிறோம் என்று ஓடப் பார்க்கிறாயா? எனக் கூறி அவளது மேகலையைப் பிடித்திழுக்க, அதில் கோத்திருந்த மணிகள் அறுந்து சிதறவும், தன் பின்னால் துரியோதனன் நிற்பதை அறிந்ததும், மரம் போல் ஒன்றும் செய்வதறியாது நின்றான். அப்பொழுது எவனும் உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரம் கொண்டு மிருகத்தனமாக மாறும் அந்த இடத்தில் துரியோதனன் சிறிதும் மனம் பதறாது, கோபத்தை அடக்கி, கர்ணனைப் பாத்து, ''நண்பனே! சிதறிய மணிகளை நான்

பொறுக்கித் தரவா? கோத்துத்தரவா?'' என்று கூறியதும், கர்ணன், துரியோதனன் நயக்கத்தக்க நாகரிகத்தின் எல்லைக்கே சென்று விட்ட காட்சியை நெஞ்சில் வைத்துப் போற்றுகின்றான். மனத்தை அடக்கி, கோபத்தை விடுத்து, சாந்தமான முறையில் துரியோதனன் கர்ணனிடம் நடந்து கொண்டதை, அருணகிரியார் தாம் பாடிய கந்தரலங்காரம் பாடலில்

*'' தடுங்கோள் மனத்தை,*
*விடுங்கோள் வெகுளியை*
*தானமென்று மிடுங்கோள்*
*இருந்தபடி இருங்கோள்'.'*

என்ற நான்கு உபதேச வாசகங்களில், முதல் இரண்டும் துரியோதனனின் செயலுக்குப் பொருந்துமாறு உள்ளது.

17–ம் நாள் போரிலே கொடை ஞாயிறு வீழ்ந்தது. கிருஷ்ணன் போரை நிறுத்தச் சொல்லி, ஓர் அந்தண முனிவர் வேடமும் பூண்டு, எதிர்ப்படையில், அர்ஜுனனது அம்பால் தாக்கப்பட்டு மரணப் படுக்கையில் இருக்கும் கர்ணனிடம் சென்று, உம்மால் கொடுக்க முடிந்ததை இத்தருணமே கொடுப்பாயாக என்று யாசித்ததும், 'என்னிடம் உனக்குக் கொடுக்கத் தக்க பொருளைச் சொல்லுக' என்ற கர்ணனிடம், 'இதுவரை செய்த புண்ணியம் முழுவதையும் கொடு' எனக் கேட்ட உடனே நெஞ்சக் குருதியால் தாரை வார்த்துக் கொடுத்ததும், கண்ணனுக்கும் கொடைச் சுவை பிறந்துவிட்டது. கிருஷ்ணனது பொய் வடிவம் கர்ணனின் எதிரில் சிறிது சிறிதாக கரைந்து, உண்மை உருவம் வெளிப்பட்டதும், கர்ணன் பரவசமடைந்து, கிருஷ்ணனிடம் முறையிடுகிறான். கிருஷ்ணன் எதிரி அணியிலிருந்து தானே வலிய வந்து கர்ணனை ஆட்கொண்டதை, அருணகிரியார் ''குயிலோ மொழி'' எனத் துவங்கும் பாடலில்,

*'' ரவிசேயெனும் அங்கராசன் விசகாகவமயல் பேடிகை படுபோது*
*சன்னிதியானவன் விதிதேடிய திருவாயின் அரன்குமரா. ''*

எனக் கூறியுள்ளார் இதன் கருத்து.

விசேயெனும் சூரியன் குமாரனான அங்கராசன் – அங்க நாட்டு அரசனான, வசிகாகவம்– அம்புகள் நிறைந்த போரில், அயல் – தனக்குப் பகையாயிருந்த பேடி– அர்ச்சுனனனுடைய கைபடும்போது – கை அம்பினால் இறக்கும்போது சன்னிதியான வன் கர்ணனுக்கு பிரத்தியட்சமாய்த் தரிசனம் தந்த திருமாலும், விதி தேடிய பிரமனம் சேர்ந்து தேடிய திருவாளி அரன் – செல்வநாயகனானஆவன்.

கந்தரலங்காரப் பாடலில் கூறப்பட்ட மற்ற இரண்டு உபதேச வாசகங்களான, "தானமென்று கடுங்கோள், இருந்தபடி இருங்கோள்" என்பதற்கு ஏற்ப, கர்ணன் தானம் செய்து வந்ததையும், என்றும் ஒரே நிலையில் செஞ்சோற்றுக் கடன் தீர்ப்பதை குறிக்காளாகக் கொண்டு வாழ்ந்ததையும் மக்கள் உணரும் பொருட்டே கூறப்பட்ட வாசகங்களாகும். மேற்சொன்ன நான்கு வாசகங்களையும் பின்பற்றுபவர்களுக்கு இறைவன் தானே வலியவந்து அருள் புரிவான் என்பதில் சந்தேகமே இல்லை.

மேலும், இக்கருத்தினையே மணிவாசகப் பெருமான் அருளிச் செய்த திருவாசகத்தில்,

*யோதவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்*
*இன்னமுதமாய் தித்திக்கும் சிவபெருமான் தானே வந்து*
*உனதுள்ளம் புகுந்து அடியேற்கு அருள்செய்தான்"*

எனப் பாடியுள்ளதையும் மனதில் கொள்ளவும். கந்தரலங்காரப் பாடலை முழுவதும் பார்ப்போம்.

*தருங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியை*
*தானமென்றுமிடுங்கோள், இருந்தபடி இருங்கோள்!*

அத்தகைய ஆழ்ந்த கருத்துள்ள பாடலை, ஒவ்வொரு அடியாரும், காலையில் ஓதி, இறைவனை மாமலராலும், மனமலராலும், கைம்மலராலும் பற்றி செய்து, நலமோடு வாழ்வோமாக..

# 16. வள்ளிச் சன்மார்க்கம்

வ்வுடற் சிறையில் 72 ஆண்டுகாலம், ஊழ்வினையை அனுபவித்துக் கொண்டிருக்கும் நாளில், ஆன்மீகப் பேரின்பத்தில் அடி எடுத்து வைக்கப்பணித்த இறைவனது கருணையைப் போற்றி, முதன் முதலாக அடியேன் திருப்புகழாகிய கவிகள் ஆழ்ந்து படிக்கத் தொடங்கிய நாளில், மனத்தில் தோன்றிய கருத்துகளை, ஒரு கட்டுரையாகத் தொகுத்து வழங்கியுள்ளேன். பல கருத்து வேறுபாடுகள் சான்றோர் பெருமக்களுக்குத் தோன்ற வாய்ப்பிருப்பினும், ஆச்சர்யம் ஒன்றுமில்லை. அனுபவ வாயிலாக அறிவித்த கருத்துகளில் ஏதேனும் உபயோகப்பட்டால், அதுவே அடியேனது முயற்சியின் பலன் யாவர்க்கும் கிட்டியதாக நினைத்து மகிழ்வேன்.

அருணகிரிப் பெருமானால், பாடப்பெற்ற 16,000 திருப்புகழ் பாக்களில், இன்றைய நாளில் உலகுக்கு 1340 பாடல்களே, அமரர், வ.த. சுப்ரமணியப் பிள்ளை எனும் புண்ணிய சீலரால் அரும்பாடுபட்டு, புத்தக வடிவில் வந்துள்ளதாலேயே முருகனது திருத்தலங்கள் பரக்கத் தெரிய வந்துள்ள போதிலும், மேலும் 16,000 பாடல்களும் கிடைக்கப் பெற்றிருந்தால் அறியப்படாத பல தலங்களின் அருமை பெருமைகளை அறிய வாய்ப்பு ஏற்பட்டு இருக்கும்.

அகக்கண் கொண்டு அருணகிரி நாதருடைய பாடல்களை ஆராயுங்கால், முருகப் பெருமானிடம் மூவாசைகளை விரும்பி விண்ணப்பித்துள்ளதை அறிய முடிகிறது.

**மூவாசைகள் :**

1. தந்தைக்கு உபதேசித்த ரகசியப் பொருளை, தானும் அறிந்து கொள்ள ஆசைப்பட்டது.

2. முருகனது அருளால் பாடப்பட்ட திருப்புகழாதிய கவிகள், அவனது மார்பில் அணியும் மதாணியாய் விளங்க வேண்டும் என விரும்பியது.

3. ஏனைய அருளாளர்களைப்போல், பூதவுடல் பிரியும்வரை, காதலால் கசிந்து கண்ணீர் மல்கி துதிசெய்து, முத்தி நிலை அடைந்த போதிலும், அருணகிரியார் என்றும் இறவாத பேரின்ப நிலையை அடைந்து, அவனது திருக்கரத்தில் கிளியாக இருந்து பாடி மகிழ, சுகப்பதம் அருள வேண்டும் என முறையிட்டுக் கொண்டது. (சுகம் – என்றால் கிளி)

தம் தலயாத்திரையின்போது, சுவாமி மலை வந்து முருகரைத் தரிசித்தும், முதலாவதாக, தந்தைக்கு உபதேசித்த ரகசியப் பொருளை தமக்கும் உபதேசித்தல் வேண்டும் என விரும்பியதை அன்னாரது பாடல்களிலிருந்தே அறியலாம். அப்பொருள் தொடர்புடைய பாடல்களைச் சிறிது ஆராய்வோம்.

"***கருப்புவில்லில்***" எனத் துவங்கும் பாடலில்.

"***உருத்திரனும்***
***விருத்திபெற***
***அநுக்ரகி யெனக் குறுகி***
***யுரைக்க மறையடுத்துப் பொருள்***
***உணர்த்து நாள் அடிமையும் உடையேனோ***"

எனவும்,

"***கொண்டாடி கொஞ்சு***" எனும் பாடலில்,

"***உமை பங்காளர்க்கு அன்று பகர்பொருள் அருள்வாயே***"

எனவும்,

*"அகரமுதலென யுரைசெய்"*

எனும் பாடலில்.

*" புரத்ரயமெரித்த பெருமானும்*
*நிருபகுருபர குமர என்றென்றும்*
*பக்திகொடு பரவ அருளிய மவுனமந்தரம் தனை*
*பழைய நினது வழியடிமையும்*
*விளங்கும்படி இனிது உணர்த்தியருள்வாயே"*

எனவும், இதனையே குறித்து,

*"துத்தி நச்ச"*

எனத்தொடங்கும் திருப்புகழில்.

*"வேணியர்க்கருள்கூறும்*
*புத்திசித்தி வாய்கனஞ்சுத்த சத்யவாசகம்*
*புற்புதப் பிராணனுக்கு – அருள்வாயே"*

என்றெல்லாம் கெஞ்சியும், இரங்கிக் கேட்டும் அந்த ரகசியத்தைத் தமக்கு அருளப்பெறாததால், அருணகிரியார், வேறு தந்திரங் களைக் கையாண்டு பார்த்தார்.

அதாவது முருகா! உனது தந்தைக்கு உபதேசித்த ரகசியப் பொருளை எனக்கு உபதேசம் செய்ய உமக்கு மனமில்லை யானால், "வேண்டாமை" என்கின்ற ஒன்றை (நிராசையை) அடைந்து, உள்ளம் மறக்கும் அன்புப் பேற்றினையாவது தந்தருளுக என வேறு பாணியில் இறைஞ்சிக் கேட்பதுபோல் வேண்டிப் பார்த்தார். இக்கருத்தினை "மாண்டார் எனும் பணியும்" எனத் துவங்கும் திருப்புகழில்,

*" சடையாண்டார் இறைஞ்ச மொழிந்ததை*
*வான் பூதலம் பவனங் கனல்– புனலான*
*வான்பூதமுங் கரணங்களும்*
*நான் போய் ஒடுங்க அடங்கலும்*
*மாய்ந்தால் விளங்கும் தொன்றினை – அருளாயேல்*
*வேண்டாமை யொன்றை யடைந்துள*
*மீண்டாறி நின் சரணங்களில்*
*வீழ்ந்தாவல் கொண்டுருகு அன்பினை யுடையேனாய்!*

எனக் கூறியுள்ளதால் அறியலாம்.

இந்தத் தந்திரத்துக்கும் முருகன் அகப்படவில்லை போலும்.

பின்னர், "நீங்கை சூடிக்குச் செய்த உபதேசத்தை எனக்கு உரை செய்தால், உன் கௌரவம் சற்றேனும் குறைந்து போகுமோ" எனச் சற்று நிந்தாஸ் துதியாக வைதும் பார்த்தார்.

இதனை,

*"கங்கை வைத்த நம்பர் உரைமான*
*செயல்மாண்டு சித்தம் விழ நித்தத்*
*துவம் பெறப்பகர்ந்த – உபதேசஞ்*
*சிறியேன் தனக்கும் உரைசெயில் சற்றுங்*
*குருத்துவங்குறையு மோதான் (திரு. சயிலாங்கனை)*

எனும் பாடலினால் வைதும் பார்த்தார்.

இங்ஙனம் பலவிதமாக அந்த ரகசியப் பொருளை விடாப்பிடியாக அறிய முயன்ற அருணகிரியார், வள்ளிமலைக்கு வந்ததும், மலையை வலம் வந்து, மலை முழுதும் முற்றும் ஆராய்ந்து, வள்ளியெம்பிராட்டியை மணக்க முருகனே, நாரதரின் வேண்டுகோளுக்கிணங்க, தணிகையினின்றும் தாமே, தமக்கென மயில்வாகனமிருந்தும், வலிய கால்நடையாகவே, வள்ளி மலைக்கு வந்து, வள்ளியோடு பல லீலைகள் புரிந்து விளையாடின தலமல்லவா இது என மகிழ்ந்து, முருகா! நீ எனக்கு ரகசியம் என்று உபதேசித்த பொருள், நான் வள்ளிமலையைத் தரிசித்ததும், வெட்ட வெளிச்சமாய்ப் புரிந்து கொண்டேன். நீ உபதேசித்த ரகசியமாவது, யாரொருவர், நான், எனது எனும் ஆணவ நிலை அற்று, என்னை வழிபடு கின்றார்களோ, அவர்களுக்கு நான் எளியன். குற்றேவல் செய்பவன்– என்பதல்லவா? அவ்வகை யினைப் பின்பற்றி உண்மை வழிபாடு செய்த பிராட்டி வள்ளியாவார். இதைத்தானே, அப்பர் அடிகளும்,

*"தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை தலைவன் தானே"*

எனக் குறிப்பிட்ட நிலையாகும்.

கடைசியில் முருகப் பெருமான், இந்த ரகசியத்தை, அருணகிரியார் வேண்டுகோளுக்கிரங்கி உபதேசித்தருளினார் என்பதை,

*" மிகுபரமாகும் பரம மாயையின்*
*நேர்மையை யாவரும் அறியொணாததை*
*நீகுருவாயிது பகருமாறு செய்தாய் "*

என "சுருதியாய் இயலாய்" எனத் துவங்கும் பாடலில் அறிவித்துள்ளார்.

அவ்வுபதேசத்தின் சிறப்பைக் குறித்து, குறிப்பாக கந்தரனுபூதியிலும் சற்று வெளிப்படையாகக் கந்தரலங்காரப் பாடலிலும், தெள்ளத் தெளிவாகத் திருப்புகழ் பாடல் ஒன்றிலும் அருணகிரியாரே கூறிப்போந்துள்ளதைப் பார்ப்போம். முதலில், கந்தரனுபூதியில் சுட்டிக்காட்டியதைச் சிறிது ஆராய்வோம்.

*" நாதா குமர நம என்று அரனார்*
*ஓதாய் என ஓதியது எப்பொருள்தான்*
*வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப்*
*பாதா குறமின் பதசேகரனே! "*

"இப்பாடலில் வரும் முதல் இரண்டு சீரில் வரும் வினாவிற்குப் பதில், அப்பாடலிலேயே பின்வரும் இரண்டு சீர்களிலேயே வெகு குறிப்பாகக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். அதாவது, "வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்பாதனாய் நீ இருந்தும் குறமின் பதசேகரனே" என்றாரே, அதுதான் எவ்வாறு எனில், "யான், எனது" எனும் இரண்டும் எங்கே அற்றுள்ளன வோ, அங்கே இறைவனைக் காணலாம். அங்கே இறைவன் தானே சென்று காட்சியளிப்பான் வள்ளியம்மை, முருகனையே நாடி நின்ற காரணத்தால், முருகர், வள்ளியின் தினைப்புனத்துக்குத் தானே வலியசென்றார்.

குறமின் (வள்ளி) பதசேகரர் ஆனார். எனவே, "தன்னை இழந்தால் தலைவனைக் காணலாம்" என்பதே இதன் ரகசியம்.

பொருள். இந்நிலையை அனுஷ்டானத்தில் கொண்டு பின் பற்றியவள் வள்ளியம்மையே. இத்தகைய வள்ளியின் உயரிய நிலை உணர்ந்த முருகர், வள்ளியைத் தாமே வலிய சென்று கல்யாணம் செய்து கொள்ள விரும்பினார் என்பதைத் தாம் பாடிய கந்தரலங்காரப் பாடலில்,

*"கின்னம் குறித்தடி யேன் செவி நீ அன்று கேட்கச் சொன்ன*
*குன்னம் குறிச்சி வெளியாக்கி விட்டது– கோடுகுழல்*
*சின்னம் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை*
*முன்னம் குறிச்சியில் சென்று கல்யாணம் முயன்றவனே"*

எனப் பாடியுள்ளதைக் கவனிக்காலம்.

மேற்சொன்ன பாடலின் கருத்து: இறைவா! என் மனத்தாசையை உணர்ந்து (நான் விரும்பிக் கேட்ட) ரகசியத்தை, நீ உபதேசித்தாய். அந்த ரகசியம் இன்னதென்பதை, குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த ஊராகிய வள்ளிமலை எனக்குச் சொல்லாமல் அறிவித்து விட்டது.

எப்படி எனில், வேட்டுவச் சிறுமியை நாடி நீயே, தனக்கென்று மயில்வாகனம் இருந்தும், உன் பங்கயபதம் நோவ, கால் நடையாகவே வள்ளிமலைக்குச் சென்று, அவளிருந்த தினைப்புனத்தை அடைந்து, அவளைக் கல்யாணம் செய்ய முயன்றாய் ஆதலின், என்பதை இச்செய்யுளில் 'சென்று' என்னும் வார்த்தை எத்துணை கருத்தாழத்துடன் கூடியது என்பதனை நினைக்கும்தோறும், உள்ளம் புல்லரிக்கிறது. இதே கருத்தை மற்றோர் திருப்புகழிலும், ''வள்ளிமலை சென்று வள்ளியை மணந்த பெருமாளே'' எனவும் கூறியுள்ளதை நோக்குங்கால், இறைவன் அடியார்களை ஆட்கொள்ளத் தானே வலியச் சென்று அருட்புரிவான் என்பதுதான் அவனது ஒப்பற்ற கருணை. இப்பாடலில் வள்ளியம்மை கடைப்பிடித்த நன்னெறியே இறைவனை வசப்படுத்தும் நெறி என்றும், தனையே கைப்பற்றுக எனவும் அருணகிரியார்க்கு முருகர் உபதேசித்தார் எனவும்

கொள்ள முடிகிறது. இதே கருத்தினை மணிவாசகர் தாம் பாடிய பாடல் ஒன்றில்,

*" நானேயோ தவம் செய்தேன் சிவாய நமவெனப் பெற்றேன்*
*தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்*
*தானே வந்து எனதுள்ளம் புகுந்து அடியேற்கருள் செய்தான்*
*ஊனாரும் உயிர் வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே!"*

இப்பாடலில், தானே வந்து என்ற பதம் மிகவும் சிந்திக்க வைக்கும் இடம். அதனால் இதுபோன்ற நெறியைத்தான் அருணகிரியார் சுருக்கமாக, "வள்ளிச் சன்மார்க்கம்" எனக் குறித்துப் பாடியுள்ளார். இதுவே "வள்ளி அனுஷ்டித்த நன்னெறி" என்பதாகும்.

பின்னும் இதைப்பற்றித் திருப்புகழில் வெளிப்படையாகவே பாடியுள்ளதைப் பார்க்கலாம். அதாவது முருகா! நீ சிவனுக்கு உபதேசித்த ரகசியத்தை "வள்ளிச் சன்மார்க்கம்" எனத் தெரிந்து கொண்டேன் என்பதனை,

*" வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க*
*வல்லைக்குள் ஏற்றும் – இளையோனே!"*

எனப் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

இதன் பொருள் : வள்ளிச் சன்மார்க்கம் – வள்ளி அனுஷ்டித்த நல்வழியே தலைவனை (கடவுளை) வசப்படுத்தும் வழி என, நோக்கவல்லைக்குள் – ஒரு நொடிப் பொழுதில், வில் ஐக்கு. ரகசிய உபதேசம் எது எனக் கேட்ட தந்தைக்கு, ஏற்றும்– அவர் காதில் சொன்ன – இளையோனே– குழந்தைக் குருநாதனே என்பதாகும். இங்ஙனம் இந்த ரகசியத்தை க்ஷண நேரத்தில், முருகன் சிவபிரானுக்கு உபதேசித்த தலம் திருத்தணி யாகும். அதனால் இத்தலத்துக்கு **க்ஷணிகாசலம்** என வட மொழியிலும் கடிகாசலம் எனத் தமிழிலும் பெயர் வழங்குகின்றது.

# 17. திருஞானசம்பந்தரும், அருணகிரியாரும்

இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட நாயன்மார்களுள் சிறப்பாகப் போற்றப்படும் நால்வர்களான சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் போன்றோர்கள் பரம்பொருளையடைய பின்பற்றிய வழிகளான, புத்திரமார்க்கம், தாஸமார்க்கம், சகமார்க்கம், சீடமார்க்கம் மூலமாக வாழ்ந்து காட்டிய 4 வகை மார்க்கத்தினையும் ஒருங்கே அனுட்டித்தவர் அருணகிரிநாதர்.

பிள்ளையைப்போல் அன்பு செலுத்தியும், தாசனைப்போல் ஊழியஞ்செய்தும், நண்பனைப்போல் நட்புப் பாராட்டியும், சீடனைப்போல் உபதேசம் பெற்று அன்புடன் பராவியும், முருகனிடம் பக்திபூண்டவர் அருணகிரிநாதர்.

புத்திரமார்க்கத்தின் அடிப்படையில் ஞான சம்பந்தரையும், அருணகிரியாரையும் ஒப்பிட்டு, அவர்களின் பாடல்களிலிருந்தே இங்கு ஆராய்வோம்.

ஞானசம்பந்தரது பாடல்களுக்குப் பண்வகுக்கப்பட்டது போன்று அருணகிரியாரின் திருப்புகழ் பாடல்களுக்குச் சந்தம் வகுக்கப்பட்டுள்ளது.

சம்பந்தப் பெருமான், அம்மையையும் அப்பனையும் முதற்கண் சீர்காழி குளக்கரையில் கண்டு, ஞானப்பால் உண்டு,

திருக்கடைக் காப்பு பாடியது போன்றே அருணகிரியாரும் திருவண்ணாமலை கோபுரத்தினின்றும் வீழ்ந்தவுடனே முருகனால் தாங்கிக் கொள்ளப்பட்டு, அவரை நேரில் தரிசித்த பிறகே, அவனருளால் திருப்புகழ் போன்ற கவிகளைப் பாடத்துவங்கினார என்பதில் உள்ள ஒற்றுமை நயத்தை அறியமுடிகிறது.

ஞானப்பால் உண்ட ஞான சம்பந்தர், முதன் முதலாக, ''தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடி'' எனப் பாடியதிலிருந்தே, இடப்பாகத்திலிருக்கும் உமாதேவியை முதலில் குறித்துப் பாடியதுபோன்று,

அருணகிரியாரும், முருகனால் தடுத்தாட் கொள்ளப் பட்டபோது, முதன்முதலில்,

*''முத்தைத்தருபத்தித்திருநகை*
*அத்திக்கிறை''*

என்று பாடி இடப்பாகத்தில் வீற்றிருக்கும் தேவசேனை அம்மையாரைப் புகழ்ந்து பாடினார். அருணகிரியாருக்குச் சம்பந்தப் பெருமானிடத்தில் உள்ள அன்புப் பெருக்கினைத் திருப்புகழிலும், கந்தர் அந்தாதியிலும் பார்க்கக் காணலாம்.

சம்பந்தர் இறைவனையும் இறைவியையும் அம்மை அப்பனாகக் கருதி புத்திர பாவத்தைக் காட்டியதுபோன்று அருணகிரியாரும், முருகரை ''எந்தாயும் எனக்கருள் தந்தையும் நீ'' எனக் கந்தரனுபூதிப் பாடலிலும் ''அருணகிரிநாத எனும் அப்பனே போற்றி'' எனத் திருப்புகழிலும், ''அமுத மதையருளி எமையாளும் எந்தை'', எனவும், ''சதாசிவக் கடவுள் எந்தையர்'' – என்பதாகவும் திருப்புகழில் பாடியுள்ளார்.

ஞானசம்பந்தர், கோளறு பதிகம்பாடி, தாக்கில் ஞான சம்பந்தர் எனப் புகழப்பட்டதற்கேற்ப, அருணகிரியாரும், கோளறு பதிகத்திற்கு இணையாக ''நாளென்செயும், வினைதானென் செயும், எனைநாடி வந்தகோள் என்செயும் கொடுங்கூற்று என்

செய்யும்'' எனக் கந்தரலங்காரத்தின் முற்பகுதியிலும், ''சேயவன் புந்திவனவா சமாதொடு சேந்த செந்தில்சேய்'' – என்று தொடங்கும் கந்தரந்தாதிப் பாடலிலும் பாடியுள்ளது கவனிக்கத் தக்கது.

ஞானசம்பந்தர், புத்திரமார்க்கத்தையன்றி, கிரியாமார்க்கத் திலும் வாழ, தலங்கள்தோறும் சென்று இறைவனைத் தரிசித்துப் பிறகு திருக்கடைக் காப்பு அருளிச்செய்தது போன்று, அருணகிரி யாரும், ''ஆடும்பரி, வேல், அணி சேவல் எனப் பாடும் பணியே, பணியா– யருள்வாய்'' எனக் கந்தர் அனுபூதியில் பாடியதிலிருந்து, இவரும் முருகனது தலங்களுக்கெல்லாம் சென்று பாடும் பணியை மேற்கொண்டார் என்பது அறியப்படுகிறது. சம்பந்தர், ''பிடியதனுருவுமை கொளமிகுகரியது'' எனும் பாடலை. நெட்டெழுத்துவராமலேயே பாடியதற்கேற்ப, அருணகிரியாரும், ''அமிர்தகவி தொடை பாட அடிமைத் தனக்கருள்வாயே'' எனச் சம்பந்தரைப் போற்றி செய்து, ''கைத்தல நிறைகனி'' எனும் பாடலிலும், தாம் அவதரித்த தலமான திருவண்ணாமலை தலப்பாடல், ''குமரகுருபர குணதர நிசிசர'' எனத் தொடங்கும் பாடலிலும் நெட்டெழுத்து வராமலேயே பாடியுள்ளதன் ஒற்றுமை நயத்தை காணலாம்.

சம்பந்தர், திருக்கோலக்காவில் இறைவனால் பொற்றாளம் பெற்றதுபோல், அருணகிரியாரும், திருவாவினன்குடியில், முருகனால் ஜபமாலை பெற்றதை, ''ஜபமாலை தந்த சற்குருநாதா திருவாவினன் குடிப் பெருமானே'' என ''அபகாரநிந்தை'' எனும் திருப்புகழ்ப் பாடலில் பாடியுள்ளார்.

சம்பந்தர், 1600 பாடல்கள் பாடியதற்கேற்ப, அருணகிரியாரும் 16,000 திருப்புகழ்ப் பாக்கள் பாடியருளினார்.

திருவீழிமிழலையில் பஞ்சம் ஏற்பட்டபோது இறைவனால் சம்பந்தருக்குப் படிக்காகத் தந்தருளியதுபோன்று அருணகிரி யாருக்கும், சென்னிமலையில் முருகன் படிக்காசு தந்தருளினார்

என, ''சென்னிமலை ஆண்டவன் காதல்'' என்ற நூலில் பாடியுள்ளதை நினைவில் கொள்ள வேண்டும். ஒருவேளை, அருணகிரியாரால் பாடப் பெற்ற பாடல்களில் இதைக் குறித்துப் பாடி இருக்கலாம் எனத் தோன்றுகிறது. இன்றைய நாளில் அடியார் பெருமக்களுக்குக் கிடைத்துள்ள, 1340 பாடல்களும் அமரர். வ.த.சுப்ரமணியப் பிள்ளையின் அயரா உழைப்பினால்தான் கிடைத்துள்ளது என்பதைக் கூறிக் கொள்வதில் பெருமிதமடைய லாம்.

சம்பந்தர் அருளிச் செய்த க்ஷேத்திரக் கோவையில், ''ஆரூர் தில்லையம்பலம்'' எனத் தொடங்கி பாடியது போன்று, அருணகிரியாரும் க்ஷேத்திரக் கோவையாக பாடினபாடலில் ''கும்பகோணமோ டாரூர் சிதம்பரம்'' என ஆரூரையும், தில்லையையும் முதற்கண் குறித்துப் பாடியுள்ளது கவனிக்கற் பாலது.

ஞானசம்பந்தர், சிவன் அருளால், சமணர்களால் இழைக்கப்பட்ட பல துன்பங்களினின்றும் வென்று, பாண்டியனின் இருகூன்நிமிர்த்தி, திருநீறிட்டு வெப்புநோயைத் தணித்தருளி, சமணர் தாங்கள் சபதம் செய்த வாக்கின்படி கழுவேறச் செய்தார். இதனால் சைவசமயம் தழைக்க மூலபுருஷராக விளங்கினார். அருணகிரியாரும், சமண மதத்தைத் தழுவிட பிரபுட தேவராஜனையும் அதற்கு உதவியாக இருந்த சம்பந்தாண்டான் என்பவனையும் வாதில் வென்று, முருகப்பெருமானை, திருவண்ணாமலையில் கம்பத்திளையராக எல்லோர் முன்னிலையிலும் வரச் செய்து காண்பித்தார். மேலும், இந்த ஜோதியைக் கண்ட அரசனது கண்களைப் பார்வையிழந்தபோது, சமணர்கள், தேவலோகத்தில் இருந்து பாரிஜாத மலரை அருணகிரியார் கொண்டுவர அரசரிடம் விண்ணப்பித்ததன் பேரில், கிளி உருவம் பெற்று, இந்திரலோகத்தில் இருந்து பாரிஜாத மலரைக் கொண்டுவந்து, அரசனும் பார்வை பெற உதவினார். இதனால் அரசரும் சைவ சமயத்தில் சேர்ந்து, சமணர்களை

வெறுத்து, அருணகிரியாரைக் குருவாகவும் ஏற்றார். அதனால் அருணகிரியாரும் சம்பந்தரைப் போல் இறைவன் அருளைப் பெற்றதோடன்றி, சைவ சமயத்தை வளர்த்தவராவார்.

சிறுத்தொண்டர் பொருட்டு, அவர் பெயரையும், அவர் ஆற்றிய திருப்பணியையும் குறித்து, ஞானசம்பந்தர் தமது பாடலில்,

*"செங்காட்டங்குடி மேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டுடன் அனல்ஏந்தி விளையாடும் பெருமானே!"*

என்று பாடியுள்ளது போன்று,

அருணகிரியாரும், வீரையில் வீற்றிருக்கும் பழநிநாதரையும் பழநிமுருகனின் பரமபக்தரான கலிசை சேவகனார் அன்பையும் குறித்து, ''கோலமதி வதனம்'' எனும் பாடலின் ஈற்றடியிலும்', ''சீயுதிரமெங்கும்'' எனும் பாடலின் ஈற்றடியிலும், ''சீற லசடன்வினைகாரன்'' எனும் பாடலிலும் பாடியுள்ளார்.

திருஞானசம்பந்தர் சமணர்களை வாதில் வென்றதுபோல், அருணகிரியாரும் வில்லிப்புத்தூராரை, சுந்தரந்தாதிப் பாடலாகிய ''திதத்தத்த திதிதாதை'' எனத்துவங்கும் பாடலை, தகரவர்க்கத்திலே பாடி, வாதில் வென்றவராவார்.

மேலும் விரிக்கின், கட்டுரை நீளும் எனக் கருதியே இத்துடன் நிறைவு செய்யப்படுகிறது.

# 18. வினாவும் விடையும்

**வி**னா : திருப்புகழ் பாடல் :

*" இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்.*
*இடுக்கினை யறுத்திடும் – என வோதும்*
*இசைத்தமிழ் நடத்தமிழெனத் துறைவிருப்புட*
*னிலக்கண இலக்கிய – கவிநாலும் "*

இப்பாடலில் முதலடியில் வரும் சீரில் ''இருப்பவல் திருப்புகழ்'' எனத் துவங்கும் பதத்திற்குச் சரியான கருத்து விளங்க வில்லை. விளக்கிட வேண்டுகிறேன்.

விடை : **''இருப்பவல் திருப்புகழ்''** இரும்பு அவல் திருப்புகழ் எனக் கொண்டால் – அது திருப்புகழின் உரத்தைக் காட்டுவதாகும். இவ்வன்மையை ''சினத்தவர் முடிக்கும்'' எனும் பாடலில் விரிவாகக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். அவல் போல் உண்ணலாம். உண்டபின் இரும்புபோல மனோதிடம் பெறலாம். மேலும் யமனையும் அறை கூவியழைக்கும் திடம் பெறலாம். இவ்விதத்தில் பொருள் அமைந்துள்ளதாகப் பொதுவாக யாவரும் கருதிய போதிலும்,

**சிறப்பான மற்றொரு பொருள் :** ''இருப்பவல் திருப்புகழ்'' என்னும் பதத்தினை இருப்பு அவல் எனக் கொண்டு, கருத்தினை ஆராய்வதே பொருத்தமாகும்.

''திருப்புகழ்'' கையிருப்பிலே உள்ள அவலைப் போன்றது. காலன் ஊருக்குச் செல்லும் நெடுவழிப் பயணத்தில் உபயோகப் படும் அவல் என்பதாகும். அருணகிரிநாதர் முருகனுக்கு ஒரு வகை அவல் கொடுத்தார். குசேலர் கொடுத்தது நெல் அவல். ஆனால் அருணகிரியாரோ முருகனடியார்களுக்குக் கொடுத்தது சொல் அவல். அதனால் நம் ஆவி பிரிந்து கடைசிப் பயணம் செல்லும் நேரத்தில் உதவுவது சொல் அவலாகிய திருப்புகழ் எனும் பாடல்களே கை இருப்பாகும்.

உயிர் போகும் கடை வழி – தனி வழி, தொலையா வழிக்கு அவலோ ''பொதிசோறோ'' இருப்பு அவசியம் எனும் கருத்தினை மனத்தில் கொண்டு தினமம் இப்பாடலை ஓதிவருவது சிறந்த பலனை அளிக்கும் என்றார்.

வினா : அருணகிரிநாதர் அருளிச் செய்த கந்தரலங்காரப் பாடலின், ''படிக்கும் திருப்புகழ்'' எனத் துவங்கும் 50–வது பாடலில் இறுதியில் ''தனி மயிலேறும் இராவுத்தனே'' என்பதில் 'இராவுத்தனே'' எனும் பதத்துக்குப் பொருள் விளங்கவில்லை.

விளக்கம் : பொதுவாக அருணகிரியார் தனது பாடல்களில் மயிலேறும் மாணிக்கமே, மயில் வாகனனே என்றெல்லாம் பலவாறு பாடியிருந்த போதிலும், இப்பாடலில் 'இராவுத்தனே' எனப் பாடியுள்ளது மிகவும் சிறப்புடையதாகும். இதுகாறும் எந்த அறிஞர்களோ, புலவர் பெருமக்களோ, ஞானிகளோ கூறாத விதத்தில், இவர் கூறியது விந்தைக்குரியது மட்டுமின்றிச் சிந்தனைக்கும் ஏற்றது.

பொதுவாக நம் நாட்டில், யானை நடத்திச் செல்லும் பாகனை, மாவுத்தன் எனவும், குதிரையை நடத்திச் செல்லும் பாகனை ராவுத்தன் எனவும் வழங்கி வந்துள்ளது யாவரும் அறிந்ததொன்றாகும்.

இப்பாடலில் 'மயிலேறும் இராவுத்தனே' என்று பாடியதில் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லைதான் எனத் தோன்றினாலும், கொஞ்சம் கருத்தை ஆழ்ந்து நோக்கின் உண்மை புலப்படும். சைவர்களுக்கே உரித்தான தில்லை நடராசப் பெருமான், ஒரு சமயம் நரியைக் குதிரையாக்கி, மாணிக்கவாசகர் பொருட்டு பாண்டியனிடம் ஓட்டிச் சென்ற வரலாறு திருவிளையாடல் புராணத்தில் கூறப்பட்டள்ளதை யாவரும் அறிந்திருக்கலாம். அதனால் குதிரைகளைச் சிவபெருமான் ஓட்டிச் சென்றதால், இராவுத்தனாக அழைக்கப்பட்டார். தில்லைக்கூத்தனே இராவுத்தனாகும்போது, அன்னாரின் மகன் முருகப் பெருமானும் ராவுத்தன் வர்க்கத்தில் சேர்ந்தவனாகத்தானே கருத வாய்ப்புள்ளது. இதனை நினைவில் வைத்துக் கொண்டுதான் அருணகிரியார், தாம் பாடிய கந்தரலங்காரப் பாடலில், ''மயிலேறும் இராவுத்தன்'' என அடைமொழி தந்து பாடியுள்ளதை அனுபவிக்குந்தோறும் உள்ளம் புல்லரிக்கும்.

இராவுத்தன் மகன், இராவுத்தன் எனக் கூறுவதில் என்ன பிழை இருக்கப் போகிறது?

வினா : ''பஞ்சகௌயம்'' என்பதனை விளக்கிக் கூறிட வேண்டுகிறேன்.

கிரகப்பிரவேசம் போன்ற விழாக்களிலும், நீத்தார் கடன் நிகழ்ச்சிகளிலும் அமரரான பெற்றோர்கள் நினைவு நாட்களிலும் (திவசம்), வீட்டில் ஏற்பட்ட தோஷங்களான தீட்டை விலக்குதல் எனும் புண்ணியாவசனம் போன்ற நிகழ்ச்சிகளிலும் பஞ்சகௌயம் புரோகிதர்களால் வழங்கி வருதல் இன்றைய நாள் வரை கடைப்பிடிக்கப்படும் மரபாகும். இதனை ஆங்கிலத்தில் (Convention) எனக் கூறுவர். ஐந்து வஸ்துக்களின் கலப்பினைக் கொண்டதான பால், தயிர், நெய், பசுவின் யோனியில் இருந்து வெளியாகும் கோமியம், சாணம் இவைகளையே பஞ்சகௌயம்

என்பதாகக் கொள்வதற்கு ஆதாரம் இல்லாது போன போதிலும் ஒரு மரபு வழியாகக் கருதப்பட்டு விட்டது. மேலும் இந்த ஐவகை வஸ்துக்களையே ஐந்து தெய்வங்கள் எனக் கூறியும் உள்ளனர்.

பாலுக்கு – சந்திரனும், தயிருக்கு – வாயுவும், நெய்க்கு – விஷ்ணுவும், சாணத்திற்கு – அக்னியும், கோசலத்திற்கு– வருணனும் உரிய தெய்வங்களாகக் கூறப்படுகின்றன. பாலை – பொன் நிறமான பசுவினிடமும், தயிரை–நீலநிறப் பசுவினிடமும், நெய்யை கருநிற பசுவினிடமும். சாணத்தை வெள்ளை நிறப் பசுவினிடமும், கோமியத்தை–செந்நிறப் பசுவினிடமும் கொள்ள வேண்டும் எனவும், பஞ்ச கௌயத்தில், பாலும் நெய்யும் 3 பாகமும், தயிர் – பத்து பாகமும், சாணம் கோமியம் இரண்டும் 6 பாகமும் எடை இருக்கும் வகையில் கலக்க வேண்டுமாம். இன்றைய நாளில் புரோகிதம் செய்பவர்கள் அதைப் பின்பற்று கின்றனரா என்பது சந்தேகத்திற் குரியதொன்றாகும்.

''ஆவினுக்கழகு அரனைந்தாடுதல்'' எனச் சான்றோர்கள் கூறியுள்ளனரே எனக் கருதுவோர்க்கு, பசுவினிடத்திலிருந்து தோன்றிய ஐந்து வஸ்துக்களாலும் அரனை நீராட்டப் பெறுவராயின், அதுவே பசுவிற்கு பெருமை என்பதல்லவா அப்பாடலின் பொருள். இறைவனை ஆவின் ஐந்தினால் நீராட்டும் போது மக்கள் அவற்றைப் பயன்படுத்துவதில் தவறென்ன இருக்கப்போகிறது எனக் கேள்வி எழலாம். இதனைப்பற்றிச் சிறிது சிந்தித்தருல் அவசியம். நாம் வணங்கும் இறைவன் சிரசிலும், ஏனைய பாகத்திலும் ஒரு பசுவின் சிறுநீரையும் சாணத்தையும் திருமஞ்சனம் செய்விப்பது சிறப்பாகுமா? இதனைச் சிறந்த ஆன்மீகச் பெருமக்கள் ஏற்றுக் கொள்வரோ? ''ஆனைந்து'' என்பது மேற்கூறிய அந்த ஐந்து வஸ்துக்களைக் குறிக்கவில்லை. அவற்றில் குறிக்கப்படும் ஐந்து வஸ்துக்களும் வேறு. அதாவது பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் எனும் ஐந்து வஸ்துக்களேயாகும். இதனை உறுதிப்படுத்தம் வகையில்,

திருநாவுக்கசரது பாடல் ஒன்று தெள்ளத் தெளிவாகக் கூறுகின்றது. பாடலைப் பார்ப்போம்.

*" மாதனத்தை மாதேவனை மாறிலாக்*
*கோதனத்தில் ஐந்தாடியை, வெண்குழைக்*
*காதனைக் கடுவாய்க்கரைத் தென்புத்தூர்*
*நாதனைக் கண்டு நானுய்யப் பெற்றேனே"*

*– அப்பர் தேவாரம் (5–62–4)*

இப்பாடலில் ''கோதனத்திலைந்து'' எனும் தொடர் சிந்திக்கப்பாலது. கோபசுவினையும், தனம்– முலைக்காம் பினையும், ஐந்து – அதனின்று தோன்றும் 5 வஸ்துக்களையும் குறிக்கும் என்பதும், பிற உறுப்புக்களில் இருந்து வெளிவருவததை, அதுவும் வெறுக்கத்தக்க பசுவின் யோனியிலிருந்து வெளி வரும் கழிவுப் பொருள்களைக் குறிக்காது. இதனை உறுதிச் செய்யவே அப்பரும் 1300 ஆண்டகளுக்கு முன்னரே மாறிலா கோதனத்தில ஐந்தினிலாடி என்றதில், கோதனத்தில் எனும் சொல்லுக்கு முன் மாறிலா எனும் பதத்தைச் சேர்த்துப் பாடியுள்ளது, புரோகிதர், வேத விற்பன்னர்கள் போன்றோர்களால், தயாரிக்கப்பட்ட பஞ்ச கௌயத்திற்கு, ஒரு மறுப்பு மட்டுமல்லாது, இது காறும் செய்து வரும் முறை திருத்திக் கொள்வதாகவும் அமைந்துள்ளது. மேலும் இக்கருத்துக்கு மறுப்புக் கூறாது சைவப் பெருமக்கள் யாவரும், அப்பர் வாக்கையே உச்சநீதிமன்றத் தீர்ப்பு (Supreme court) எனக் கொள்வதே சிறந்த பண்பாகும்.

ஒன்றிலிருந்து ஐவராய் தோன்றி, ஐவகைப் பணிகளை ஆற்றும் இறைவனுக்கு, ஒன்றிலிருந்தே தோன்றிய ஐவகை வஸ்துக்களால் இறைவனுக்கு திருமஞ்சனம் செய்விப்பதே பொருத்தமாகும். பரம்பொருள் ஒன்றிலிருந்துதான், சதாசிவன், ஈசன் பரமீசன், ஈசுரன், ஈசானன் எனும் ஐவரும் தோன்றி, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்தொழிலை ஆற்றுகின்றனர். அதுபோன்றே ''ஆ'' எனும்

ஒன்றிலிருந்து, பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் எனும் ஐந்து பொருட்களும் தோன்றி, ஐவகை பலனைத் தருகின்றன. ஆவினிட மிருந்து பாலும், அதைக் காய்ச்சி உறையிட்ட பிறகு தயிரும், அதனைக் கடைந்த பிறகு தோன்றும் மோரையும், மோரின் மூலம் வெண்ணெயும், வெண்ணெயிலிருந்து நெய்யும், உருவாதலை யாவரும் மறுக்கவோ இயலாது. ஆகவே இதை என் விளக்கத்தை, மறைக்கவோ, மறுப்பு தெரிவிக்காது ஏற்றுக் கொள்வர் என்பதில் ஐயப்பாடு சிறிதும் இருக்காது என நினைக்கிறேன். இதற்கு மாறான கருத்து விளக்கம் கூறிச் சான்றோர்கள் தெளிவுபடுத்துவர் ஆயின் அதனை ஏற்கவும் யான் சித்தமாக உள்ளேன்.

# 19. ஸ்ரீ வைகுண்டம் எவ்வளவு தூரம்?

ஒரு சமயம் வள்ளிமலை சுவாமிகள் வழக்கமாகக் காண்டாடி வந்த அருணகிரிநாதர் ஜெயந்தி விழாவில் அடியேனும் கலந்து கொள்ளும் பாக்கியம் பெற்றேன்.

வள்ளிமலை சுவாமிகள் ''மாண்டார் எலும்பணியும் சடை'' எனும் திருப்புகழைப் பாடி, அதன் பின்பகுதியில் வரும் கஜேந்திரனின் வரலாற்றைப்பற்றி, இதுகாறும் எவரும் கேட்டிராத வகையில், பொருள் சொன்னது, யாவரையும் வியப்பில் ஆழ்த்தியது அன்றி, பக்திப்பரவசத்தில் திளைக்கச் செய்தது என்றால் மிகையாகாது. பாடலின் பின்பகுதியைப் பார்ப்போம்.

*'' ஆண்டார் தலங்கள் அளந்திட*
*நீண்டார் முகுந்தர் தடந்தனில்*
*ஆண்டாவி துஞ்சிய தென்று முதலைவாயுற்று*
*ஆங்கோர் சிலம்பு புலம்பிட*
*ஞான்றூது துங்கச லஞ்சலம்*
*ஆம்பூ முழுங்கி அடங்கும் அளவில் நேசம்*
*பூண்டாழி கொண்டு வனங்களில்*
*ஏய்ந்தாள என்று வெறுந்தனி*
*போந்தோலம் என்றுத வும்புயல் மருகோனே''*

என்பது அருணகிரியார் வாக்கு.

ஸ்ரீமந் நாராயணன், யானையின் கூக்குரலைக் கேட்டதும், லட்சுமிக்கும் சொல்லாமல், ஆதிசேடனுக்கும் அறிவிக்காமல், கருடன்மீது ஆரோகணித்து வைகுண்டத்திலிருந்து பூலோகத்திற்கு வந்து, யானையை முதலை வாயினின்றும் காப்பாற்றினார்'' என்ற அளவிலே பாடி இருந்த போதிலும், அதே நிகழ்ச்சியை அருணகிரியார் தனது பாடலில் விவரிக்கும் பாணியே அலாதி என்றே அறுதியிட்டுக் கூறலாம். இனி அப்பாடலின் சம்பந்தமாய் அடியேனின் குருநாதர் தக்க உதாரணத்தோடு விளக்கம் அளித்த விதத்தினை உங்கள் நினைவிற்குக் கொண்டு வருவது அவசியமாகும்.

சோழ நாட்டில், அரசன் நிகழ்த்திய வித்வத் சபையில், கலந்து கொண்ட அனைத்துக் கவிஞர்களுக்கும், அவரவர்கள் நாட்டின் எப்பகுதியில் இருந்து வந்தனர் எனக் கேட்டறிந்து, அதற்கேற்ப பிரயாணச் செலவையும், பரிசோடு சேர்த்துக் கொடுத்து வரும் சமயம், ஒரே ஒரு கவிஞர் மட்டும், யாவரும் வியக்கத்தகும் வகையில்தான் நாராயணன் வீற்றிருக்கும் ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து நேரே வருவதாகவும், அதற்கேற்பப் பிரயாணச் செலவை கணக்கிட்டுப் பரிசோடு அளிக்குமாறு விண்ணப்பித்தார். இதைக் கேட்டதும் அரசரும் சபையோரும் ஆச்சரியப்பட்டதோடன்றி, கவிஞரது பொருளாசையை ஒரு புறம் உணர்ந்த போதிலும், அவரது விருப்பத்தை எவ்வாறு பூர்த்தி செய்வதென்றே அறியாமல் திகைத்துக் கொண்டிருந்தனர். அது சமயம் சிதம்பரத்தில் இருந்து வந்த ஓர்அறிஞர் யாவரும் கவலைப் பட வேண்டியதில்லை. இதற்கு அருணகிரியார் பாடலாகிய ''மாண்டார் எலும் பணியும் சடை'' எனும் பாடலின் பின்பகுதியிலேயே விளக்கம் அளித்துள்ளார். பாடலின் கருத்தைக் கூர்ந்து கவனித்தாலே, வைகுண்டத்துக்கும் பூலோகத்திற்கும் சுமார் எவ்வளவு தூரம் இருக்கும் என அனுமானித்து விடலாம் எனக்

கூறி, பாடலைப் பாடி, அதன் விளக்கத்தைச் சபையோர் முன்னிலையில் கீழ்வருமாறு எடுத்துரைத்தார்.

பாடலின் பின்பகுதியான, ஆண்டார் தலங்கள் அளந்திட நீண்டார் எனத் துவங்கி,

*" ஆம்பூ முழுங்கி அடங்கும் அளவில்நேசம்*
*பூண்டாழி கொண்டு வனங்களில்*
*ஏய்ந்தாள என்று வெறுந்தனி*
*போந்தோலம் என்றுத வும்புயல் மருகோனே"*

எனப் பாடியதில் வைகுண்டத்தில் துயில் கொண்டிருந்த நாராயணன், யானையானது ''ஆதிமூலமே'' என்று புலம்பிடும் சத்தம் கேட்டதும், கருடன்மீது ஆரோகணித்து, தன் வருகையைத் தெரிவிக்க தன் கையிலுள்ள வலம்புரிச் சங்கை எடுத்து ஊதி, அதன் நாதம் அடங்குவதற்குள், ''வைகுண்டத்திலிருந்து பூலோகத்திற்கு வந்து யானையின் காலை பிடித்துள்ள முதலையின் வாயினின்றும் காத்தருளியவரின் மருகோனே'' என்பதே இதன் பொருள். இப்பொழுது தங்கள் அரண்மனையில் உள்ள திடகாத்திரமான ஒரு மல்யுத்த வீரனைச் சங்கு எடுத்து, தன் சக்திக்கு ஏற்ற வகையில் மூச்சு பிடித்து ஊதச் சொல்லி, அதன் நாதம் அடங்கும் அளவிற்கு, புலவரை நடக்கச் சொல்லி, எவ்வளவு தூரம் நடக்கிறாரோ அந்தத் தூரமே உண்மையான பக்தனுக்கு வைகுண்டம் உள்ள தூரம் என அரசரிடம் சொல்ல, அரசரும் அவ்வாறே, ஒரு மல்யுத்த வீரனை அழைத்து அவனைச் சங்கின் மூலமாக மூச்சு பிடித்து ஊதச் சொல்லி அந்தச் சத்தம் அடங்குவதற்குள், அந்தப் புலவரைத் துரிதமாக ஓடியோ, அல்லது வேகமாக ஓடும் குதிரையின் மூலம் சவாரி செய்தோ, எவ்வளவு தூரம் சென்றார் என்பதைக் கணக்கிட்டு, அவருக்குச் சன்மானத்தோடு, போக்குவரவு

செலவையும் கொடுங்கள் என உத்தரவிட்டார். அப்புலவர் தன் செருக்கினால் நேர்ந்த அவ மானத்தை உணர்ந்து, அன்றிலிருந்து அகங்காரத்தை அறவே மறந்து புனிதரானார்.

இந்த அளவிற்கு அருணகிரியார் பாடலுக்கு அதிசயிக்கத் தக்க விதத்தில் பொருளைப் பொருத்தி வள்ளிமலை சுவாமிகள் விளக்கம் அளித்தார்கள்.

இவ்வாறு எல்லாத் தெய்வங்களையும் துவேஷமின்றி அரவணைத்துப் போற்றிப் புகழ்ந்து பாடிய அருணகிரிப் பெருமானை "ஞானி" என்று கொண்டாடிப் போற்றிடுவோமாக.

# 20. அலங்காரத்தில் அற்புத அறிவுரைகள்

அருணகிரியார், திருவருணைக் கோபுரத்தில் முருகனை நேரில் தரிசித்த பிறகே, அவனருளால் பாடப்பட்ட பாடல்களே, திருப்புகழ், கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்த அனுபூதி, திருவகுப்பு போன்றவைகளாகும். பொதுவாக, ஏனைய அருளாளர்கள் பாடிய பாடல்களுக்குத் தாங்களாகவோ, அல்லது ஏனைய ஆன்றோர்களாலோ, தலைப்பு தந்தபோதிலும், அருணகிரியார் பாடலுக்கு, வயலூர் பொய்யாகணபதியே, திருப்புகழ் எனும் தலைப்பு தந்தது அறிந்து மகிழ்தற்கு உரியதாகும். இத்தகு பெருமை வாய்ந்த திருப்புகழை, ஆபாசமான காமவெறியூட்டும் நிகழ்ச்சிகளைப் பலவித கோணங்களால் பாடியுள்ளார் என நினைப்பது பழியாகும். அருணகிரியாரது பாடல்களின் பெருமையை, சுவையை உணராதவர் கூறும் உரையாகும். அவரது பாடல்களில் பிற மதவெறுப்பைக் காண முடியாது. சமையலறையில், அஞ்சறைப் பெட்டியில் பலவித தானியங்கள் அடங்கியுள்ளதுபோன்று, சைவ வைணவ சம்பந்தமான பல நூல்களையும் படித்து அறிய வேண்டிய கருத்துகள் யாவும் அவரது பாடல்களிலேயே பொதிந்துள்ளதைக் காணலாம். முருகனையே முதற் தெய்வமாக வைத்துப் பாடின அவர்தம் கவிகளில் இராமாயணம், மகாபாரதம், நாயன்மார்கள்

வரலாறுகள், கந்தபுராணம்பற்றிய வரலாறுகளையும் காணலாம்.

அருணகிரியாரது பாடல்கள், அனைத்தும் மக்கள் சமுதாயத்தின் நலனைக் குறித்தே எக்காலத்துக்கும் பொருந்தும் விதத்தில் அமைந்துள்ளதைக் காணலாம். இதுதான் சமரஸ நோக்கம் எனப்படும். பொதுவாக, பலருக்குப் பயன்படும்படி ஒன்றை உரைப்பதுதான் உயர்ந்த உரையாகும். அறிவுள்ளோர், அருள் பெற்றோர், புலமையுள்ளோர் கூறும் மொழிகளில் இத்தகைய பொதுத் தன்மையைக் காணலாம். அருணகிரியாரும் இதற்கு விதிவிலக்கு அல்ல. இதற்கு உதாரணமாக, ''ஒரு பானை சோற்றுக்கு, ஒரு சோறு பதம்'' எனும் முதுமொழிக்கேற்ப, அவரால் பாடப்பட்ட கந்தரலங்காரப் பாடல் ஒன்றை ஆராய்வோம்.

*''தடுங்கோள்மனத்தை, விடுங்கோள்வெகுளியைத் தானமென்று*
*இடுங்கோள், இருந்தபடி இருங்கோள் – எழுபாருமுய்ய*
*கொடுங்கோபச் சூருடன்குன்றம் திறக்க தொளைக்க வைவேல்*
*விடுங்கோன் அருள்வந்ததுதானே உமக்கு வெளிப்படுமே!''*

இது அருணகிரியாரின் அத்தாட்சிப் பத்திரம்.

மனத்தை ஐம்புலன்கள் வழி செலுத்தாது தடுத்து நிறுத்த வேண்டும். காணும் பொருள்கள் மேல் எல்லாம் பறிகொடுக்காமல் தடுத்தல் வேண்டும். செவிக்கு அழியக் கூடிய இன்பம் தரும் நிகழ்ச்சிகளைக் கேட்பதிலோ, மனத்தைத் தாராளமாகச் செலவிடாது தடுத்தல் வேண்டும். மூக்கு விரும்பும் வாசனைப் பொருள்களை எல்லாம் நுகர்வதற்கு இடமளிக்கக் கூடாது நாக்கு விரும்பும் சுவைகளை எல்லாம் சுவைக்க இடம் தரலாகாது. இவற்றிற் கெல்லாம் மனத்தைக் கட்டுப்படுத்த அறிந்து கொள்ள வேண்டும். இதுவே மனத்தை தடுககும் வழியாகும்.

அடுத்து, பொறுமையுடன் வாழப் பழகிக் கொள்ள வேண்டும். வெகுளி சினம்– கோபம் தோன்ற இடம் தரலாகாது. சினத்தைப்போல மனிதனைச் சீரழிப்பது வேறொன்றுமில்லை. இதோடு பொருந்தி வாழ்ந்தவர்களெல்லாம், பல இன்னல்களுக்கு ஆளாவர். சினம் உள்ள்வர்களிடம், உறவினர் மட்டுமின்றி,

ஏனையோரும் சுமுகமாகப் பழக மாட்டார்கள். ஆதலால் கோபத்தைத் தவிர்த்து, பொறுமையைக் கையாண்டு வாழப்பழகிக் கொள்ளுதலே நலம்.

உதாரணத்திற்குக் , கர்ணன், பானுமதியோடு தனித்திருந்து சூதாடும் சமயம் துரியோதனன் வந்ததை அறிந்த பானுமதி எழுந்து நின்றாள். அது சமயம் கர்ணன் அவளது ஆடையைப் பிடித்து இழுக்கவும். அதிலிருந்து மணிகள் சிதறியது. இச்சூழ்நிலையில் எவரும் மிருகத்தனமாக மாறும் நிலையில் செயல்படுவது இயல்பே. ஆனால் துரியோதனன் அதற்கு மாறாக, மனத்தை அடக்கியதோடு, கோபமும் கொள்ளாது கர்ணனிடம் சிதறிய மணிகளை ''எடுக்கோ, கோக்கவோ'' எனக் கூறியதிலிருந்து துரியோதனனின் உயரிய பண்பை அறிய முடிகிறது. அருணகிரி யார் கூறிய ''தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியை'' எனும் வாசகத்தோடு பொருத்திப் பார்த்தால், எளிதில் இதன் ஆழமான கருத்து புலப்படும். துரியோதனன் முதலில் ஆத்திரம் கொள்ளாது மனத்தைத் தடுத்தான். அதோடு வெகுளியையும் அறவே அடக்கினான். இச்செயலே எக்காலத்துக்கும் துரியோ தனனை ஒப்புயர்வற்ற நாயகனாக எடுத்தக் காட்ட உதவும் விதத்தில் அமைந்துவிட்டது.

அடுத்து வரும் வாசகமான, ''தானமென்றும் இடுங்கோள் இருந்தபடி இருங்கோள்'' என்பதில் பொதிந்து உள்ள ஆழமான கருத்தும், கர்ணனின் வாயிலாக யாவரையும் சிந்திக்க வைக்கச் செய்கிறது.

கர்ணன் போரில் அம்புகளால் தாக்குண்டு, மரணப் படுக்கையில், உயிர் புறத்ததோ, அகத்ததோ என இருந்த சமயம், உலகத்திற்கே படியளக்கும் பரந்தாமன், தேரை விட்டிறங்கி, வேதிய வடிவில் வந்து, இதுகாறும் செய்த புண்ணியம் அனைத்தையும் யாசகமாகக் கையேந்தி கேட்டு நின்றபோது, தன் நெஞ்சக் குருதியால், அப்பலனைத் தாரை வார்த்துத் தந்ததும், கர்ணனது கொடைச் சிறப்பைக் கண்டு கண்ணபெருமான் வியந்தார். வரம்

பெற்றுச் செல்ல வந்த பரந்தாமனே, கொடுத்துச் செல்லுமாறு செய்தது கர்ணனின் கொடை வாழ்வு, அது நிறை வாழ்வுதானே! இப்பெருமித உணர்ச்சியை உணர்த்தத்தான், கண்ணன் பாண்டவர் படையிலிருந்து வலிய வந்துள்ளான். இதனை அருணகிரியார் '' குயிலோ மொழி'' எனத் துவங்கும் பாடலில், பின் பகுதியில் பாடியுள்ளதைப் பார்ப்போம்.

*'' ரவி சேயெனும் அங்கராசன்*
*வசிதா கவம் அயல் பேடி கை படுபோது*
*சன்னிதியானவன் விதிதேடிய — திருவாளி யரன்''*

**இதன் கருத்து :** ரவியின் குமாரனான அங்கநாட்டு அரசன் (விசிதா தவம்) அம்புகள் நிறைந்த போரில் (அயல்) தனக்குப் பகையாயிருந்த (பேடி ) அர்ச்சுனன் (கை) கை அம்பினால் (படுபோது) இறக்கும் தருவாயில், (சன்னிதியானான்) கர்ணனுக்குப் பிரத்தியட்சமாய்த் தரிசனம் தந்த திருமாலும், (விதி) பிரம்மனுமாக இருவரும் அடிமுடி தேடிய (திருவாளி) செல்வ நாயகனான (அரன்) எம்பெருமான் என்பதாகும். என்ன வரம் வேண்டுமெனக் கேட்டக் கண்ணனிடம், கர்ணன்,

''அல்லல் வெவ்வினையால் இன்னும் உற்பவம் உண்டாயினும், மேலெழு பிறப்பும் இல்லை என்று இரப்போர்க்கு இல்லை என்றுரையா இதயம் நீ தந்தருள்'' என்றார்.

இவ்வாசகங்கள் கண்ணனின் செவிகளில் விழுந்தவுடன், பிறரது அழுகையை நீக்கும் கண்ணனே தன் கண்ணீரால் கர்ணனை நீராட்டினான். கர்ணன் மரணப்படுக்கையில் வேதனையோடு இருந்த நிலையிலும், சிறிதும் மனம் கோணாமல் தனது குறிக்கோளாகிய தானத்தைக் கடைபிடித்து வாழ்ந்து காட்டியதை நினைக்கும்தோறும் நம் நெஞ்சத்தை நெகிழ வைக்கிறது.

இப்பொழுது, அருணகிரியார் தந்தர் அலங்காரப் பாடலில் கூறிய பின் இரண்டு வாசகங்களாகிய, ''தானமென்றும் இடுங்கோள், இருந்தபடி இருங்கோள்'' என்பதை மேலே கூறிய

நிகழ்ச்சியினை ஒப்பிட்டுப் பார்த்தால், எளிதில், இதில் பொருத்தியுள்ள ஆழமான கருத்து புலப்படும்.

இனி பாடல் முழுவதையும் ஒரு முறை படித்த பின்னரே சொல்லி, அடியேனது சிற்றறிவுக்கு எட்டியதை விளக்கமளித்துள்ளேன்.

*" தடுங்கோள்மனத்தை, விடுங்கோள்வெகுளியைத்தானமென்றும்*
*இடுங்கோள், இருந்தபடி இருங்கோள் எழுபாருமுய்ய*
*கொடுங்கோபச் சூருடன் குன்றம் திறக்க தொளைக்க வைவேல்*
*விடுங்கோன் அருள் வந்து தானே உமக்கு வெளிப்படுமே."*

அருணகிரியாரால் கூறப்பட்ட இந்த நான்கு உபதேச மொழிகளை எவர் ஒருவர் தம்வாழ்நாளில் பின்பற்றுகின்றனரோ, அவர்களுக்கு முருகனது அருள் வந்து தானே உங்களுக்கு வெளிப்படும் என்பதில் சிறிதும் ஐயம் வேண்டாம்.

யார் ஒருவர் நான்கு உபதேச மொழிகளை குறிக்கோளாகக் கொண்டு வாழ்கிறார்களோ அவர்களுக்கு இறைவனது அருள் தாமே வெளிப்படும் எனக் கூறியதிலிருந்து அறியப் படுகிறது.

கண்ணன், குந்தியை கர்ணனிடம் தூது அனுப்பினார். அவருடைய கட்டளைக் கிணங்க, குந்தியும் கர்ணனிடம் தானே வலியச் சென்றார்.

மகன் யாரைப்பார்க்க வேண்டுமென்று தன் வாழ்நாள் முழுவதும் ஒருகுறிகோளுடன் காத்திருந்தானோ, அந்தத் தாயே மகனிடம் வலியவருகிறாள் எந்தவித அறிவிப்புமின்றி. எவன் ஒருவன் தன்வாழ்நாளில் ஒருகுறிக்கோளுடன் வாழ்கிறானோ, அவனிடம் தாம் விரும்பியதை அடைய இறைவன் துணை புரிவான். இதனையே அருணகிரியாரின், தானே உமக்குவெளிப் படுமே. எனும் வாசகத்தைப் பொருத்திப் பார்த்தால் உண்மையை உணரமுடியும்.

# 21. முருகவேள் பன்னிருத் திருமுறை

முருகவேள் பன்னிருத் திருமுறைக்கு விளக்கம் அளிக்கும் முன்பு, இதன் சம்பந்தமான சில செய்திகளைக் கூற முற்படுகிறேன்.

என் தந்தையார், திருப்புகழடிமை கா.ரா. முருகேசம் பிள்ளை என்பவர் தன் குருவின் கட்டளைக்கிணங்க, தணிகைமணி, வ.சு. செங்கல்வராயபிள்ளையிடம் திருப்புகழ் பாடம் கேட்டு வரலானார். அன்னாரின் மகனான அடியேனும் உடன் செல்வது வழக்கம். திருப்புகழுக்கு உரை சொல்லும் போதெல்லாம், கல்வி பயின்று வந்ததோடு, பாடல்களில் பொதிந்துள்ள கருத்துக்களைக் கூர்ந்து கவனிக்கலானேன். அதில் என் மனம் ஈர்க்கப்பட்டு, ஆன்மீகத்தில் என் சிந்தனை துளிர்விட்டது.

அடியேன் 1926–ல் பிறந்தபோது பலர், பல பெயர்களான அண்ணாமலை, அருணாசலம், அர்த்தநாரி, அனந்தகிருஷ்ணன் போன்றவைகளைக் கவனத்திற்குக் கொண்டு வந்தனர். அந்நாளில் என் தந்தையாருக்குத் திருப்புகழ் என்ன என்றே தெரியாதிருந்த காலம். இருந்தும், எனக்கு அருணகிரி என்ற பெயர் வைத்தது என்ன காரணம்பற்றியோ! அப்பெயரைச் சொல்லியது அவரது வாய். அனால் உள்ளிருந்து உந்திப் பேசியவர் முருகப் பெருமானாகத்தான் இருத்தல் வேண்டும். இதனை என் தந்தையார்

மூலம் அறிந்திருந்த, தணிகை மணி அவர்கள், திருப்புகழில் இருந்த நாட்டத்தைக் கண்டு, உங்கள் மகனுக்கு இப்பெயர் முன்னரே வாய்த்ததின் காரணம் ஓரளவு புரிகிறது. உங்களைப் போன்று திருப்புகழில் பிற்காலத்தில் மிக்க ஆர்வம் கொண்டவனாய் விளங்குவான் என வாழ்த்திய வாசகம்தான், பின்னால் அடியேனுக்குத் திருப்புகழில் அளவுகடந்த பத்தியும், ஆராயும் நூல் களில் அரிய கருத்துக்களைத் தோற்றுவித்ததும் என்றால் மிகையாகாது. ஆன்றோர்களின் ஆசி என்றும் பொய்க்காது என்பதனை உணர்ந்தேன். நம் ஜென்மத்துப் பாவங்களைப் போக்க, நிறைய தெய்வங்கள் தேவையில்லை. ஒருமுறை அன்பினால் உருகிச் சொல்லும் இறை நாமம் ஒன்றே போதுமானது.

*" முருகா என ஓர் தரம் ஓத அடியார்*
*முடி மேல் இணைதாள் – அருள்வோனே "*

என்பது திருப்புகழ். இது அருணகிரியார் தரும் அத்தாட்சிப் பத்திரம்.

தருவதோ திருவடிகள் இரண்டு. கூறுவதோ ஒரு திருநாமம். இது எப்படிச் சாத்தியம்? ஞானிகளின் வாழ்க்கை அனுபவம். ஆன்மாவைப் பற்றியுள்ள அழுக்குச் சுமைகளை, ஞானக் கனலாகிய இறைவனது திருநாமங்களில் ஒரு திருநாமம் எனும் சிறு தீப்பொறியே எப்படி எரிக்கின்றது என்பதை அருணகிரியார் போன்ற அருளாளர்கள் வாழ்க்கையை உணர்ந்தாலே போதும்.

இனி தலைப்பின் கருத்துக்கு வருவோம்.

சிவபெருமானையே முழுமுதற் கடவுளாக வழிபட்ட சிவனடியார்கள், நாயன்மார்களால் அருளிச் செய்யப்பட்ட பாடல்களைப் பன்னிருத் திருமுறைகளாக வகுத்து, பன்னூறு ஆண்டுகளாக வழிபட்டு வந்தனர். அதுபோன்று, முருகப் பெருமானுக்கும் பன்னிரு திருமுறைகள் வகுத்தல் சிறப்பெனக் கருதி, டாக்டர் தணிகைமணி, வ.சு. செங்கல்வராய பிள்ளை

அவர்கள், 'முருகவேள் பன்னிருத் திருமுறை'' எனும் தலைப் பினைக் கொண்டு, எல்லோராலும் போற்றப்படும் வகையில் தொகுக்க ஆர்வம் கொண்டார்.

அருணகிரிநாதர் அருளிய 6 திருப்பதிகளுக்கும் உரிய பாடல்களை, 6 திருமுறைகளாகவும், சிவனுக்குரிய பஞ்சபூதத் தலப் பாடல்களையும், ஏனைய தலப் பாடல்களையும், பொதுப் பாடல்கள் போன்றவைகளையும் சேர்த்து 7–ம் திருமுறையாகவும், அடுத்தாற்போல், அருணகிரிநாதரால் அருளிச் செய்யப்பட்ட கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி ஆகிய நூல்களில் அடங்கிய பாடல்கள் 8–ம் திருமுறையாகவும், சிற்றின்ப வர்ணனையோ, நோய்களைப்பற்றியோ, வறுமையைக் குறித்தோ சிறிதும் கலவாது, பேரின்ப நிலையில், அத்வைதத்திற்கு நிகராகப் பாடிய பாடல்களாகிய திருவகுப்பு எனும் தொகுப்பை 9–ம் திருமுறையாகவும், முருகனடியார்களால் மந்திர நூலாக போற்றப்படும் கந்தரனுபூதி 51 செய்யுட்களை 10–ம் திருமுறையாகவும், பொருந்தும் வகையில் எல்லாப் பாடல்களுக்கு உரையோடு முதன் முதலாக எழுதி வெளிவரச் செய்த புண்ணிய சீலர் தணிகை மணி என்றால் மிகையாகாது.

அடுத்தாற்போல், திருமுருகாற்று படை, கந்தர்கலி வெண்பா, மற்றும் முருகனைப்பற்றிய பாடல்களை ஒன்று திரட்டி, 11–ஆம் திருமுறையாகவும். தேனூர் வரகவி சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் இயற்றிய சேய்த்தொண்டர் புராணத்தை, 12–ம் திருமுறையாகவும் தொகுத்து, ''முருகவேள் பன்னிருத் திருமுறை'' எனும் தலைப்போடு உருப்பெற்று புத்தக வடிவில் வெளிவரச் செய்த உத்தமராவார். முருகனடியார்கள் இதுபோன்ற தலைப்பினில் தொகுக்கப்பட்டதை ஏற்றுப் போற்றி, தணிகேசனின் அருள் பெறுவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இத்தகைய அரிய பெரிய பணியை, தணிகை மணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்கள் தம் இளமை வயதிலேயே



செய்யத் தவறியதை, இறைவனிடம், தமது வாழ்நாள் வீணாளாகக் கழிந்தது குறித்து வருந்தி முறையிட்டதன் பயனே, தமது முதுமையில் சிறிதும் மனம் தளராது ஊக்கத்தோடு வரலாறு காணாத போற்றப்படும் விதத்தில், பாடல்கள் அனைத்துக்கும் உரை எழுதியும் இதுகாறும் யாவராலும் எழுதிப் பூர்த்தி செய்யப்படாத ஒரு பெரிய சாதனையை, தணிகேசனே அருளிச் செய்யக் கருணை உள்ளம் கொண்டான்.

இத்தகு அரும்பணியைத் தணிகேசனின் அருளால், தம் முதிய வயதில், என்றும் நிலைத்து இருக்கக் கூடிய அரும் பெரும் சாதனையைச் செய்து முத்த, தணிகைமணி, டாக்டர், வ.சு. செங்கல்வராயப் பிள்ளை அவர்களை, உங்களோடு சேர்ந்து, கண்மலராலும், மனமலராலும், கைம்மலராலும் போற்றிப் பிரார்த்தித்துக் கொள்கிறேன். அன்னாரது குடும்பத்தினரும் சகல செல்வமிக்க பெருவாழ்வையும் பெற்று வாழ, இறைவனைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இனி 6 திருமுறைகளாகிய, முருகனுக்குகந்த 6 திருப்பதி களில் பொதிந்துள்ள அரிய கருத்துகளை ஆராய முற்படுகிறேன்.

*" சரவணதகப்பன் சாமி எனவரும் பெருமாளே!*
*கலக்குண்டாகு புவிதனில் எனக்குண்டாகு பணிவிடை*
*கணக்குண்டாதல் திருவுளம் – அறியாதோ "*

# 22. அருணகிரியாரது கவிகளில் முதல் திருமுறையாக வகுக்கப்பட்ட தலம் – திருப்பரங்குன்றம்

அருணகிரிப் பெருமான்தம் திருப்புகழில், முதல் திருமுறையாகிய திருப்பரங்குன்றப் பாடல்களை ஆராயப் புகுமுன், ஆசிரியர் கையாண்ட சில அரிய தத்துவங்களை அறிந்துகொள்வது சிறப்பாகும். ஏனைய புலவர்கள், கட்டளைக் கலித்துறை, அந்தாதி, அலங்காரம் போன்ற பாடல்களைப் பாடுவதில தேர்ச்சி அடைந்திருந்தாலும் , அருணகிரியார் இதே போன்று பாடியதற்கும் உள்ள வேறுபாடு– ''படும் பாட்டைப் பாட்டாகப் பாடினார்கள் ஏனையோர்கள், அருணகிரியார் பாட்டை நம் மனதில் படும்படிப் பாடினார் – இதுதான் வேறுபாடு. தமிழில் உள்ள உயிர் மெய் எழுத்துகளை, வல்லினம், மெல்லினம், இடையினம் என 3 வகையாக வகுத்துள்ளதை அடிப்படையாகக் கொண்டு மெல்லின் ஓசை வரும் விதத்தில், திருப்பரங்குன்றம் பாடலாகிய,

*'' மன்றலங்கொந்து மிசை தெந்தெனம் தெந்தனென*
*வண்டினங் கண்டு தொடர் – குழல் மாதர் ''*

என்பதில் மெல்லின ஓசையான ''ங, ஞ, ன, ந, ம, ண'' எனும் எழுத்துகளின் ஓசையே மிக்கு நிற்கும் விதத்தில் பாடியுள்ளது

அற்புதம் என்றே கூறலாம். தனக்கென்றே ஒரு பாணியில் எதுகை மோனை இவைகளைக் கையாள்வதோடு அன்றி, சந்தங்கள் (நூதனமாக) அமைப்பதிலும் கைதேர்ந்தவராவார். ஆதலில் இவரைக் கவிராஜர் எனப் போற்றுதல் தகும். மேலே குறித்த பாடலில், ''பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந்து ஐங்கர பண்டிதன் தம்பி'' எனும் 6ஆவது அடியில் சொன்னதைச் சொல்லுகின்ற கிளிகள், வந்து வந்து ஐந்து கரபண்டிதன் தம்பி'' எனச் சொல்லுவதை எந்த அளவு ரசித்துப் பாடியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.

இன்றைய நாளில் தமக்குத் திருப்பரங்குன்றத்தைக் குறித்து 15 பாடல்களே கிடைத்துள்ளன. திருப்பரங்குன்றத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சியை முதலில் நாம் தெரிந்து கொள்வது அவசியம்.

ஒரு பழைய கதைதான். கற்கிமுகி எனும் பூதம், அவ்வூரில் சிவபூஜையில் தவறியவர்களை எல்லாம் பிடித்து, மலைக் குகையில் அடைத்து வருவது வழக்கம். 999 பேர்கள் அவ்வாறு அடைக்கப்பட்டிருந்த சமயம், மதுரை சங்கப் புலவர்களிடம் சிறந்த நக்கீரர் அம் மலையினிடத்தே வருகிறார். இவர், இறைவனிடமே, நெற்றிக்கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே என வாதிட்டவர். இவர் குளக்கரையில் சிவபூஜை செய்தகாலையில், அருகிலிருந்த மரத்தின் இலை, தரையில் விழுந்தபோது, பாதி இலை தண்ணீரிலும், பாதி இலை தரையிலுமாக விழுந்ததும், பறவையாகவும், மீனாகவும் மாறி, இரண்டும் ஒன்றையொன்று விடாமல் இழுத்துக் கொண்டிருந்த அதிசயத்தைக் கண்டு, மனம் மலைப்புறுகிறது. சிவபூஜையும் அதனால் தவறுகிறது. உடனே கற்கிமுகி பூதம், இவரையும் பிடித்துக் குகையில் அடைத்தது. 1000 பேர்கள் சேர்ந்து விட்ட உற்சாகத்தில், அவர்களை உண்பதற்கு முன், நீராடி வரச் செல்கிறது. பூதத்தின் குறிக்கோளை, குகையில் அடைத்திருந்த ஏனைய புலவர்கள் கூறக் கேட்டறிந்து, முருகனைத்

துதித்தப் பாடிய பாட்டுதான், பத்துப் பாடலில் முதலாவதாக 'திருமுருகாற்றுப்படை' என வழங்கப்பட்டது. இதனைப் பகழிக்கூத்தர் திருச்செந்தூர் பிள்ளைத் தமிழில் பாடியிருக்கிறார்.

*" ஏர் கொண்ட பொய்கைதனில் ...*
*நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு பேழ்வாய் நெடும்பூதம்*
*அதுகொண்டு போய், நீள்வரை எடுத்து அதன் கீழ்வைக்கும்*
*அதுகண்டு நீதிநூல் மங்காமலே; சீர்கொண்ட நக்கீரனைச்*
*சிறைவிடுத்தவா, செங்கீரை ஆடி அருளே!"*

எனப் பாடியதிலிருந்து அறிய முடிகிறது.

இப்படி நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாட காரணமாயிருந்த குளமும், மரமும் இருந்த தலம்தான் திருப்பரங்குன்றம். இதனைக் குறித்து அருணகிரியார் வேல்வகுப்பில்,

*" பழுத்தமுது தமிழ்ப்பலகையிருக்கு மொரு*
*கவிப்புலவன் இசைக் குருகி வரைக் குகையை*
*இடித்து—வழிகாணும் "*

எனக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். இத்தலம் மதுரைக்குத் தென்மேற்கே 10 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்குள்ள குன்றின் உயரம் சுமார் 1050 அடியாகும். இக்குன்று இயற்கையாகவே சிவலிங்க வடிவமாய் இருப்பதால், இதனைச் சிவலிங்கமாகவே கருதி வழிபடுகின்றனர்.

இங்கு வீற்றிருக்கும் மூலவர் பரங்கிரிநாதர் எனவும், துணைவியார் ஆவுடை நாயகி எனும் நாமத்தோடும் காட்சியளித்த போதிலும், இத்தலத்துக்கு முக்கியத்துவம் வாய்ந்தவர் முருகனே. முருகப்பெருமான், சூரனை சம்ஹாரம் செய்தபிறகு, அதற்கு வெற்றிப் பரிசாகத் தேவேந்திரன் தன் மகளாகிய தேவசேனையை மணம் முடித்துக் கொடுத்த தலம்தான் திருப்பரங்குன்றம். இங்குள்ள முருகனிடத்துத்தான், நக்கீரர் அடியவர்களை முதலில் ஆற்றுப்படுத்தியிருக்கிறார். மதுரை, திருப்பரங்குன்றம் இரண்டையும் சேர்த்தே நக்கீரர் பாடியிருக்கிறார். இத்தலத்துக்கு,

சம்பந்தரும் சுந்தரரும் பாடல்கள் பாடியிருக்கிறார்கள். இக் குன்றத்தில் ஒரு சித்திரச்சாலை இருந்திருக்கிறது. அதில் சூரியன் முதலிய கோள்களும், தாரகை, நாள் மீன்கள் எல்லாம் சித்திரமாக வரைந்துள்ளதாக அறியப்படுகிறது. இன்று அச்சித்திரச் சாலையை காண முடியவில்லை. திருப்பரங்குன்ற மலையைச் சிறிது தூரம் ஏறிச் சென்றால், இம்மலையின் தென்பகுயில் காசிவிசுவநாதர், விசாலாட்சி, வினாயகர், முருகர் கற்சிலை வடிவத்தில் உள்ளதைக் காணலாம். பிரம்மாவையும் பஞ்சலிங்கத்தைப் பூஜை பண்ணும் கோலத்தில் காண முடிகிறது. மலை அடிவாரத்தில் ஒரு குடை வரைக் கோயில் உண்டு. அதை உமையாண்டவர் கோவில் என்கின்றனர். பாறையின் பின் பக்கத்தில் நடராஜரது தாண்டவம் செதுக்கப்பட்டிருக்கிறதைப் பார்க்கலாம். ஆனால் எல்லாமே சிதைந்த நிலையில் உள்ளது. திருப்பரங்குன்ற ஆலயம் குடைவரை போல் இருந்தாலும், பாண்டிய மன்னர்கள்தாம் இதனை நிர்மாணித்திருக்க வேண்டும்.

# 23. திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா!

ஸ்ரீ அருணகிரியார், திருத்தணிக்குச் சென்று முருகனது பேரழகைக் கண்டுகளித்து "கோடாத வேதனுக்கு யான் செய்த குற்றம் என்ன?" எனும் கேள்வியை விடுத்தார்.



திருப்புகழ் பாடும் அடியார்கள் இதே வினாவைத் தொடுக்காது இருக்கவும், அருணகிரி யாருக்கு மனச்சாந்தி அளிக்கவும், முருகனே வருடாவருடம் டிசம்பர் 31-ம் தேதி அன்றும், மறுநாள் ஜனவரி 1-ம் தேதி அன்றும், அடியார்கள் யாவரையும் திருத் தணிக்கு அழைத்துத் தரிசனம் தரும் பொருட்டே ஸ்ரீ வள்ளிமலை திருப் புகழ்ச் சச்சிதானந்த சுவாமிகளை மூல புருஷராகத் தோற்றுவித்து, திருப்புகழ் விழாவினுக்கு வித்திட திருவுள்ளம் கொண்டார் போலும் என நினைக்கத் தோன்றுகிறது.

பொதுவாகவே, எந்த ஓர் ஆலயமோ, இறைபணிகளோ, ஞானிகளாலும், சித்த புருஷர்களாலும் துவக்கி வைக்கப்படு மேயானால், நாளடைவில் நிச்சயம் விரிவடைந்து சிறப்புடன்

விளங்கும் என்பதனை உணரச் செய்யும் ஒரு தனிச் சிறப்பு பாரத மண்ணுக்கே உரிய பண்பாகும்.

அதனடிப்படையிலேதான், எங்கள் குருநாதர் வள்ளிமலை சுவாமி சச்சிதானந்தா அவர்களே, 1921ம் ஆண்டு தணிகை மணி, வ.சு.செ. பிள்ளை அவர்களோடு, மேலும் நெருங்கிய சில அடியார்களோடு, திருத்தணிக்குச் சென்று திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா எனும் தலைப்பினைத் தந்து முதன் முதலாக, துவங்க வித்திட்டவர் என்பதனை யாவராலும் மறைக்கவோ, மாற்றவோ, மறுக்கவோ இயலாததொன்றாகும். இத்திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா அன்னாரது காலம் தொட்டு, இன்று வரை கோலாகலமாகப் பெருகி வருவதைக் காண முடிகிறது.

ஸ்ரீ அருணகிரி நாதரின் வாக்கிற்கிணங்க, திருமுருகன் பூண்டி தலத் திருப்புகழில்,

*" அவசிய முனைவேண்டிப் – பலகாலும்*
*அறிவினுணர்ந் தாண்டும் – கொரு நாளில்*
*தவசெப முந் தீண்டிக் – கனிவாகிச்*
*சரணமதும் பூண்டற் – கருள்வாயே. "*

எனும் கருத்தினை மெய்ப்பிக்கும் பொருட்டே, ஆண்டுக்கு ஒரு நாள் திருத்தணி சென்று, திருப்புகழ் விழாவினைத் தொடர்ந்து நிகழ்த்தி வரும்படி எங்கள் குருநாதரால் உணர்த்தப்பட்ட ஒரு பணியாகும்.

ஏறக்குறைய 600 ஆண்டுகளுக்கு முன்னரே வாழ்ந்த தீர்க்கத் தரிசியான அருணகிரிப் பெருமான் முருகனிடம் அமிர்த கவி தொடை பாட அடிமை தனக்கு அருள வேண்டும் என விண்ணப்பித்ததன் பேரில், பாடிய பாடல்களே திருப்புகழ் போன்ற கவிகளாகும். அத்தகு பாடல்களின் ஒன்றான,

*" திருப்புகழோதும் கருத்தினர் சேரும்*
*திருத்தணி மேவும்– பெருமாளே"*

எனும் பாடலில் பொதிந்துள்ள அற்புத அருள் வாக்கினை, வருங்காலத்தில் உலகிற்கு மெய்ப்பிக்கவே, திருத்தணி கேசனே அன்னாரது திருப்புகழ் பாடல்களைத் தன் கழுத்தில் மதாணியாய் அணிந்து கொண்டான் போலும். ஆதாரம், வேடிச்சி காவலன் வகுப்பில் ஓர் அடியில் இக்கருத்தினைப் புலப்படுத்தியது மிகவும் கவனிக்கத்தக்கது. அதனாலன்றோ, இவரை ஆன்றோர்கள் ''வாக்கிற்கு அருணகிரி'' எனப் புகழ்ந்துள்ளனர்.

விஞ்ஞானத்தால் முன்னேறி வரும் இக்கலியுகத்தில் ஆண்டுக்கொரு முறை திருத்தணி சென்று நெஞ்சக்கன கல்லும் நெகிழ்ந்து உருக, படிகள்தோறும் அடியார்கள் திருப்புகழ் பாடிச் சென்று, முருகப்பெருமானைத் தரிசித்து,

நின் தண்டையந்தாள் சூடும் – சென்னியையும், தொழுவ தற்குக் கையையும், உன் அழகைக் கண்டு களிக்க கண்களையும், உன் புகழையே பாடும் நாவையும் அடியார் பெருமக்களுக்கு அருள பிரார்த்திப்போமாக.

பொதுவாக நாட்டிலுள்ளோர், புது வருடத்தன்று மாலை களும், பழங்களையும் கொண்டு சென்று, தங்களது உயர் அதிகாரிகளுக்கு நன்றியைத் தெரிவித்து வரும் நாளில் அதிகாரிகளின் அபிமானத்தைப் பெற நினைத்துச் செல்வதைக் கண்டு அதை விரும்பாத எங்கள் குருநாதர், எல்லோர்க்கும் மேலான துரையாகிய முருகனை ஆண்டின் தொடக்கத்தில் திருத்தணி சென்று 365 படிகளிலும் திருப்புகழ் பாடி, ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் தங்களால் இயன்ற தருமங்களைச் செய்து வாருங்கள் என்ற நெறியினை வகுத்துக் கொடுத்தார்.

''படிஉற்சவம்'', ''படிவிழா'' போன்றவை புகுத்தப்பட்ட போதிலும், குருநாதரால் வழங்கப்பட்ட ''திருத்தணித் திருப்புகழ் திருவிழா'' என்னும் தலைப்பினையே சிறிதும் மாற்றம் செய்யாது

இன்று வரை அன்னாரது சீடர்களால் கொண்டாடி வருவது, குரு கட்டளையின் சிறப்பை அறிய முடிகிறது.

விண்ணோர்கள் வியக்கவும், மண்ணோரும் மதிக்கத் தக்க வகையில்,

*" எத்திக்கும் உற்ற புகழ் வெற்றித் திருத்தணியில்*
*இன்றைத் தினத்தில் – வர வேணும் "*
*(முத்துத் தெறிக்க – திருப்புகழ்)*

இது அருணகிரியாரின் அத்தாட்சிப் பத்திரம், புத்தாண்டு ஆரம்ப தினத்தன்று, முருகனடியார்கள் யாவரும் ஒன்று கூடி தணிகைக்குச் சென்று, முருகனிடம்,

*" பலகாலும் உனைத் தொழுவோர்கள்*
*மறவாமல் திருப்புகழ் கூறி*
*படிமீது துதித்துடன் வாழ– அருள்வோனே! "*

என உள்ளத்தூய்மையுடன் கண்மலராலும், மன மலராலும், கைம்மலராலும் போற்றிப் பிரார்த்தித்து வாழுவது சிறப்புடைய தாகும்.

முருகன்பால் உள்ளத்தையே உருக்க முயல்கின்ற ஆன்மீகச் சாதகர்கள், அருணகிரியாரின் அருள் வாக்கான திருப்புகழ் பாடல்களைப் பாடி வருவார்களேயானால், சீலம் வாய்ந்தவர் களால் புகழப்படும் சித்தர்களுள் பிரசித்தர்களாய் (சகல சித்திகளும் கைவரப் பெற்ற சிததர்களாய்) விளங்குவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இக்கருத்தினை அருணகிரியாரே, தாம் இயற்றிய சித்து வகுப்பில் கடைசி அடியில் கீழ்க்கண்டவாறு பாடியுள்ளது, அடியார்களின் உள்ளத்தை உருகச் செய்வதோடு, ஆன்மீகச் சமுதாயத்தைத் தட்டி எழுப்ப, சத்துள்ள ஔஷதமாக (டானிக்) அமைந்துள்ளது.

*" வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர்*
*சீலமேத்திய சித்தப்ர சித்தரே "*

என உறுதிப் பத்திரமாக அளித்துள்ளார்.

இத்திருத்தணித் திருப்புகழ்த் திருவிழாவானது மென் மேலும் புகழோடு சிறப்புடன் வருடா வருடம் குருநாதரால் தந்த தலைப்பிலேயே கொண்டாடி வர, பக்தியால் தணிகை முருகனைப் பலகாலும் பற்றியே மாதிருப்புகழ் பாடல்களைப் படிகள் தோறும் பாடி, வருவினைகள் தீர்ப்போமாக.

**எ**ந்த ஓர் ஆலயங்களோ , இறைப்பணிகளோ, ஞானி களாலும், சித்தபுருஷர்களாலும், தவசிகளாலும் துவங்கப்படு மேயானால், நிச்சயம் விரிவடைந்து சிறப்புடன் விளங்கும் என்பதனை உணரச் செய்யும் ஒரு தனிச்சிறப்பு பாரத பூமிக்கே உரிய பண்பாகும்.

அதன் அடிப்படையிலேதான் ஒரு சித்த புருஷராகிய எங்கள் குருநாதர் வள்ளிமலை சுவாமி சச்சிதானந்தா அவர்கள், 1917ஆம் ஆண்டு சில அடியார்களோடு திருத்தணியில் திருப்புகழ் படி விழா தொடங்கி வித்திட்டவர் என்பதனை முதற்கண் மக்கள் நினைவிற்குக் கொண்டு வந்து, இத்தகைய திருப்புகழ் விழாவானது நாளது வருடம் வரை பன்மடங்குப் பெருகி பலப் பல சபைகளின் அடியார் பெருமக்களால் கொண்டாடப் படுவது கண்கூடாகக் காணும் ஒரு நிகழ்ச்சியாகும்.

ஸ்ரீ அருணகிரி நாதரின் வாக்கிற்கிணங்க, திருப்புகழ் பாடல் ஒன்றில்,.

*"அவசியமுன் வேண்டி பலகாலும்*
*அறிவினுணர்ந்து ஆண்டுக்கொரு நாளில்*
*தவ செப முன்திண்டிக் கனிவாகி*
*சரணமதும பூண்டற் கருவள்வாயே"*

என்ற கருத்தினை மெய்ப்பிக்கும் பொருட்டே, ஆண்டுக்கு ஒரு நாள் திருத்தணி சென்று திருப்புகழ் விழாவினை நிகழ்த்தி வரும்படி எங்கள் குருநாதரால் உணர்த்தப்பட்ட ஒரு பணி ஆகும்.

ஏறக்குறைய 600 ஆண்டுகளுக்கு முன்னரே தீர்க்க தரிசியான ஸ்ரீ அருணகிரி பெருமான் அருளிச் செய்த திருத்தணித் தலத்து திருப்புகழ் பாடலின் சீர் ஒன்றில்,

*" திருப்புகழோதும் கருத்தினர் சேரும்*
*திருத்தணி மேவும் – பெருமாளே"*

எனும் அருள் வாக்கின் சிறப்பை உணரலாம்.

விஞ்ஞானத்தால் முன்னேறி வரும் இக்கலியுகத்தில் திருத்தணியிலேயே அடியார்கள் ஒன்றுகூடி உளம் நெகிழ மலைப்படிகள்தோறும் திருப்புகழ் பாடிச் சென்று இறைவனைத் தொழ மெய்ஞ்ஞான கலியுக மூர்த்தியாகிய முருகன் திருவுள்ளம் கொண்டான் போலும் என நினைக்கத் தோன்றுகிறது.

பொதுவாக நாட்டிலுள்ளோர், புது வருடத் தினத்தன்று மாலைகளும் பழங்களையும் கொண்டு சென்று தங்களது உயர் அதிகாரிகளைக் கண்டு நன்றியைத் தெரிவித்துக் கொண்டு வருங்காலத்தில் அவர்களது அபிமானத்தைப் பெறவும், நினைத்துச் செல்வதைக் கண்டு விரும்பாத எங்கள் குருநாதர், எல்லோருக்கும் மேலான துரையாகிய 'திருத்தணிகேசனை ஆண்டின் இறுதியிலும் புத்தாண்டு ஆரம்பத்திலும் அவன் பெருமையை 'திருப்புகழால்' 365 மலைப் படிகளிலும் பாடி ஏழைகளுக்குத் தங்களால் இயன்ற தருமங்களைச் செய்து வாருங்கள்' என்ற நெறியினை வகுத்துக் கொடுத்தார்.

**இந்த ஆண்டு திருத்தணி திருப்புகழ் திருவிழாவினைத் தொடங்க அடி எடுத்து வைக்கும் தருணத்தில், 75ஆம் ஆண்டு விழாவாக இவ்வருடம் அமைவதால் பவள விழாவாக கொண்டாடப்பட்டது.**

முருகனது திருவருளும், குருவருளும் பெற்று நலமுடன் வாழ திருத்தணிக்கு வாருங்கள் என அறைகூவி அழைப்போம்.

# 24. தில்லையில் திருப்புகழ் திருவிழா!

**திருத்தணித் திருப்புகழ்த் திருவிழா !**

ஆதியிலே மலைகளிலுள்ள ஆலயங்களுக்கு ஏறிச் சென்றுதரிசிக்க மலைப்பாதை தான்இருந்தது, உதாரணமாக பழமுதிர்சோலை, ஏலகிரி மலை, ஜவ்வாது மலை, கேதார்நாத், பத்ரிநாத், திருப்பதி, சபரிமலை போன்ற ஆலங்களுக்கு மலைப் பாதைதான் உள்ளது. மலைக்கோயிலுக்கு ஏறிச்செல்ல மக்கள் வசதிக்காக அண்மையில் படிகள் நிறுவப்பட்டது. முதன்முறையில் மலைப்படிகள் பற்றிய குறிப்புகள் பெரிய புராணத்தில் வருகிறது. கண்ணபர் காலத்தில் நாணணும் அன்பும்' எனத் தொடங்கும் பாடலில், திருக்காளத்தியில் குடுமித்தேவர் வீற்றிருந்த அந்த மலைக்கு 96 படிகள்இருந்ததாக குறிப்பு வருகிறது. இதனையே 96 தத்துவங்களாகவே குறிப்பிடுகிறார்கள். நம் ஆன்றோர்கள். ''பேணு தத்துவங்கள் எனும் பெருகு சோபானம் ஏறி ஆணையாம் சிவத்தைச்சார அணைபவர் போல'' (சோபானம் படிகள்) என்ற அடிகள் நோக்கத்தக்கது. பெரிய புராணத்துள்ளும் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பர் சுவாமிகள், பேணத் தொழுமவர்' எனத் தொடங்கும் திருவையாறு பதிகத்தில் 'ஏணிப்படி நெறி யிட்டுக் கொடுத்து இமையோர் முடிமேல்' எனக் கூறியுள்ளது கவனிக்கத்தக்கது.

பிற்காலத்தில் மக்கள் தங்கள் வசதிக்காகவேமலைப் படிகளை நிறுவியும், மின்சார வசதியினால் இயங்கும் வினச் போன்றவைகளினாலும், மலைப் பாதை நிறுவி பேருந்து மூலமாகவும் செல்லவசதிகளைச் செய்து கொண்டனர். மலை மேல் உள்ள இறைவனைத் தொழ மெய்வருத்தம் பாராது, மலைப்பாதை வழியாகவே ஏறிமுருகன் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு, அவனது அருட்பாடல்களைப் பாடிக்கொண்டு சென்று, முருகனைத்தரிசிப்பதன் மூலம் உண்டாகும். பேரின்ப உணர்ச் சிக்கும், வசதிகளினால் மலைமேல் உள்ள இறைவனை தொழும் மனநிறைவுக்கும் உள்ள வித்தியாசத்தை உணரலாம். இன்று, சபரி 'மலைக்குச் செல்லும் அடியார்கள் எல்லாம் மலைப்பாதை வழியாக கால்நடையாகச் சென்ற தரிசித்து வருவதை கண்கூடாகக் காணலாம்.

வள்ளிமலை திருப்புகழ் சச்சிதானந்தசுவாமிகளால் 'திருத்தணித் திருப்பு கழத் திருவிழா' என்ற பெயரில் நடத்தப் பட்டு வந்த விழாவானது; பிற்காலத்தில் 20-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பிற சமயத்தாக்கத்திற்கு எதிராக சில நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது, பக்தி மார்க்கத்தின் சடங்குகளும் 'படிஉற்சவம் – படி விழா' போன்றவை புகுத்தப்பட்டது. அதன் அடிப்படைவிலேதான் 'புகழ் விழா – படி விழாவாக' உருமாறிவிட்டது.

### திருப்புகழின் பெருமை

**நி**னைத்த மாத்திரை முத்தியளிக்கும் அருணையம் பதியில் இன்றைக்குச் சற்றேறக் குறைய 600 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய ஸ்ரீ அருணகிரிப் பெருமான், ஏனைய அருளாளர்களாலும் முனிவர்களாலும் காதலாகி, கசிந்து, கண்ணீர் மல்கி அனுபவித்தப் பின்னரே இறைவனால் ஆட்கொள்ளப் பட்டதற்கு நேர்மாறாக, முதலிலேயே முருகப் பெருமானைத் தரிசனம் கண்ட பிறகே, அவனருளாலே பாடப் பெற்ற பாடல்களே திருப்புகழாகிய நூல்கள் ஆகும்.

**தேவாரமும் திருப்புகழும் தோன்றிய வரலாறு :**

ஆரம்பகாலத்தில் மூவர்கள் இயற்றிய தேவாரப் பதிகங்களும், திருப்புகழாகியப் பாடல்களும் ஓலைச் சுவட்டிலே தான் எழுதி வைக்கப்பட்டிருந்தன. தேவாரப் பதிகங்களை உலகுக்கு வெளிக் கொணர, தில்லை ஆடல் வல்லான் தன் கருணையினாலே நம்பியாண்டார் நம்பியைத் தோற்றுவித்தது போன்றே, அதே தில்லையில் வீற்றிருக்கும் முருகப் பெருமானும் திருவுளம் கொண்டு ஸ்ரீ அருணகிரிநாதரால் பாடப்பெற்ற பாடல்களைப் புத்தக வடிவிலே வெளிக்கொணர, அமரர் வ. த. சுப்பிரமணியப் பிள்ளை என்னும் பெருந்தகையாரைத் தோற்றுவித்தான் போலும்.

இத்தலம் தேவாரமும், திருப்புகழும் தோன்றக் காரண மாயிருந்ததினால் ஏனைய தலங்களுக்கில்லாத ஒரு தனிச் சிறப்பைக் கொண்டது என்றால் மிகையாகாது, தேவாரம் வெளிவந்த வரலாறு சைவப்பெருமக்கள் அனைவரும் அறிந்ததொன்றே. ஆனால், திருப்புகழ் வெளிவந்த வரலாறு அனேகருக்குத் தெரிந்திருக்க வாய்ப்பிருக்காது என்று கருதியே, யாவரும் உணரும் பொருட்டு இக்கட்டுரையை ஸ்ரீ வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகளின் மானசீகச் சீடர்களில் ஒருவரால் தொகுத்தளிப் பட்டதைப் பெரும் பேறாகக் கருதவேண்டும்.

**திருப்புகழின் மகிமையும் சிதம்பரக்கோவில் பூசனை உரிமையும் :**

1871–ஆம் ஆண்டு அமரர் வ. த. சுபிரமணிய பிள்ளைக்கு முதன் முதலாகத் திருப்புகழாகிய பாடல்களை அச்சிட வேண்டும் என்ற எண்ணம் உதித்ததற்குக் காரணம், சிதம்பரம் தீட்சிதர்கள் ஒரு சம்வாதத்தில் தங்களது பெருமையைக் காட்ட மேற்கோளாக சிதம்பரத் தலத்திருப்புகழ் (தாது மாமலர்) என்ற பாடலில் வரும் 7–வது அடியாகி,

*" வேத நூன்முறை வழுவாமே தினம்*
*வேள்வியால் எழில் புனை மூவாயிர*
*மேன்மை வேதியர் மிகவே பூசனை — புரிகோவே'*

என்பதனை எடுத்துக்காட்டாகக் கூறியதைக் கேட்டதும், பாடலின் சந்தமும், தேனொழுகும் இனிய தமிழின் நடையும் கண்டு, அப்பாடலினால் தன் மனது ஈர்க்கப்பட்டு, அன்று முதல் ''திருப்புகழ்'' ஓலைச்சுவடிகளைச் சேகரிக்கும் பணியில் தன் எஞ்சிய வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்ததின் பலனே, இன்று நம் அனைவராலும் போற்றியும், பாடியும் வரும் திருப்புகழ், திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தர் அனுபூதி போன்ற நூல்கள் புத்தக வாயிலாகப் பெற்றுள்ளோம். 1895–ஆம் ஆண்டு ஆண்டு முருகனது 6 திருப்பதிகளையும் கொண்ட பாடல்களை முதற்பாகமாகவும், பஞ்ச பூத தலங்கள், ஏனைய தலங்கள் பாடல்களைச் சேர்த்து 1902–ஆம் ஆண்டு இரண்டாவது பாகமாகவும், பொதுப் பாடல்கள், திருவகுப்புக் கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி போன்ற பாடல்களை 1906–ஆம் ஆண்டு மூன்றாவது பாகமாகவும் அச்சிடப்பட்டு வெளிவந்தது.

வேதத்துக்கும், மந்திரத்துக்கும் இணையான தேவாரம், திருப்புகழ் தோன்ற இறைவனே இத்திவ்ய க்ஷேத்திரத்தைக் கருவூலமாகக் கொண்டு நிகழ்த்திய திருவிளையாடலை எழுத்து வடிவிலோ சொல்வாயிலாகவோ வர்ணிப்பது என்பது சிறந்த தாகாது என்று எண்ணி, எந்தப்பாடல் அமரர் வ. த. சுப்பிரமணியப் பிள்ளையவர்களால் ஈர்க்கப்பட்டு, திருப்புகழாகிய பாடல்களை எல்லோராலும் படிக்கவும், பாடவும் பயன்படும் விதத்தில் இறைவன் தன் பணியை பூர்த்தி செய்து கொள்ளத் திருவுளம் கொண்டானோ, அப்பாடலையே கல்வெட்டு மூலமாய், சிம்பரம் மேலவாயிலின் மயில்மீதேறிய பெருமான் சந்நிதியிலேயே நிரந்தரமாகப் புதுப்பிக்கப்பட்டது. எல்லோராலும், இன்றும், இனி எக்காலத்திலும் தில்லையம்பதியில் மேலவாயி லுள்ள முருகனைத் தரிசிப்போர் மெய்யுருகிப் பாடி மகிழும் பொருட்டே அண்மையில் இத்திருப்பணி நிறைவேற்றப்பட்டது.

கடந்த 27–12–1993 திங்கள் மாலை 6–00 மணி அளவில் ப்ரம்ம ஸ்ரீ டாக்டர் ஸ்வர்ண வெங்கடேச தீட்சிதர் தலைமையில்,

பாடலின் கல்வெட்டுத் திறப்பு விழாவினைத் தமிழ் நாட்டுத் திருப்புகழ்ச் சபைகள் கூட்டமைப்பின் மாநிலப் பொதுச் செயலர் திரு. மா. பெரியசாமிப் பிள்ளை எம். ஏ. எம். எட்., அவர்களால் நிகழ்த்தி வைக்கப்பட்டு வள்ளிமலை ஸ்ரீசச்சிதானந்த சுவாமிகள் திருப்புகழ்ச் சபையினர் நெய்வேலி மாதர் திருப்புகழ்ச் சபையினராலும் தொடர்ந்து திருப்புகழ் இன்னிசையோடு இசைக்க கந்தர்வலோகமே தில்லையம்பதியில் அமைந்ததோ என மன்னவரும் விண்ணவரும் வியக்கும்வண்ணம் விழா நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெற்றது. இரவு 7.45 மணி அளவில் ஸ்ரீ அருண கிரிநாதர் திருவுருவச் சிலைக்கும் திருப்புகழ்ப் பாடல் வடிக்கப்பட்ட கல்வெட்டிற்கும் மலர் மாலை களால் அலங்கரித்து முருகப் பெருமான் ஆலய தீட்சிதர் பூசனை செய்ய, தமிழ்நாட்டுத் திருப்புகழ்ச் சபைகள் கூட்டமைப்பின் மாநிலப் பொதுச் செயலர் திரு.ம. பெரிய சாமிப்பிள்ளை அவர்கள் சிதம்பரம் மேல வாயிலின் மயில் மீதேறிய முருகப் பெருமான் சந்நிதியில் பாடலின் கல்வெட்டினைத் திறந்து வைத்துச் சிறப்பு சொற்பொழிவாற்றினார்.

எவரும் எளிதில் எண்ணி செயல்படுத்த முடியாத இச்சீரியப் பணியினை மிகச் சிறந்த முறையில் நிறைவேற்ற ஆரம்பக் கட்டத்திலிருந்தே, எனது இரு கண்களையும் போன்று, தோன்றாத் துணையிருந்து ஆலோசனைகளை நல்கி, அவ்வப்போது துணைபுரிந்து ஊக்கமளித்துவந்த என் அன்பிற்கும் பாசத்திற்கும் உரிய.

தமிழ் நாட்டுத் திருப்புகழ்ச் சபைகள் கூட்டமைப்பின் மாநிலப் பொதுச் செயலர் திரு. ம. பெரியசாமிப் பிள்ளை அவர்களுக்கும் எனது பணிவன்பைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன். மேலும் இத்தகு பணிகளுக்கு வருங்கால இளைய சந்ததியினருக்கும் அறிவுரை வழங்கி, வழிகாட்டியுமாக விளங்க அவர்களைப் பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். இப்பாடலைக் கல்வெட்டின் மூலம் பதிப்பிக்க அனைத்து

தவிளையும் நல்கிய அமரர் வ.த. சுப்பிரமணியப்பிள்ளை அவர்களின் வழித் தோன்றல்களையும், இறைவனது அருளைப் பெற்று இனிது வாழப் பிராத்திக்கின்றேன்.

## நன்றிக் கடப்பாடு

இவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், இக்கல் வெட்டினை ஆலயத்தில் பதிப்பிக்க அனுமதி வழங்கியதோடு மட்டும் நில்லாது, சிறப்பான முறையில் அவற்றினைப் பதிப்பிக்கவும், பொருட் செலவைச் சற்றேனும் எதிர்பாராது, குறித்த தேதியில் விழாவினை வெற்றிகரமாய் நிகழ்த்த உதவிய திரு. கே. சங்கர தீட்சிதர், பி.காம்., காரியதரிசி, சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் பொது தீட்சிதர்கள், அவர்களுக்கும் ஏனைய ஆலயத் தீட்சிதர் களுக்கும், எங்களது பணிவான அன்பினை உங்கள் பொன்னார் திருவடிகளுக்குக் காணிக்கையாகச் செலுத்து வதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

# 25. பிரம்மா தன் விதியை நிர்ணயிக்க என்று முடிவெடுப்பார்?

பாரதம் என்னும் பசுவின் மடியாக விளங்குவது தமிழ்நாடு. இந்தத் தமிழ்நாட்டைத் தெய்வமணம் கமழும் திருநாடாக எடுத்துக்காட்டுவன திருக்கோயில்களே ஆகும். இத்திருக் கோயில்களையே மூலப் பொருளாகக் கொண்டு ''பாடலும் பாவமும்'' என்னும் கருத்திற்கேற்ப இறை அனுபவத்தில் தோய்ந்து முதிர்ச்சி அடைந்த இறைவனது திருவருள் திறத்தினைக் குறித்துப் பாடிய கவிகளையும், அதன் மூலமாக அவனது எழில அழகையும் மனக்கண்ணால் கண்டு களித்திடும் வகையில் பாவத்தோடு சிலை உருவங்களையும் அமைத்துத் தந்த பெருமை, கவிஞனையும் கலைஞனையும் சாரும் என்பதில் சந்தேகம் இல்லை.

மணிவாசகர் அருளிச் செய்த ''பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து'' எனும் பாடலுக்கேற்ப, முதலிலேயே தாய்மை வடிவத்திலே கண்டு தொழக்கற்ற மனிதன், மலையையும், கடல் அலையையும் உருவகப்படுத்தி, மலைமகளாக, அலைமகளாக அந்த அன்னையைத் தொழ நினைத்திருக்கிறான்.

இவ்வழிபாட்டின் மூலம், கவிஞன் உள்ளத்தில் எழுந்த அழகுணர்ச்சி காரணமாக அந்த அன்னையை மக்களுக்கு நல்லறிவு

நல்கும் அழகிய கலைமகளாகவும் உருவகப்படுத்தி, கவிஞனது கற்பனையில் தோன்றியிருக்கிறாள். பெரும்பகுதிகளில் உள்ள ஆலயங்களில் கலைஞன் கைவண்ணத்தால் சிவன், பார்வதி, விஷ்ணு, லக்ஷ்மி, முருகன், வள்ளி, தெய்வயானை, வினாயகர் போன்றவர்களுக்கு உருவச் சிலை வடித்திருந்த போதிலும், பிரம்மாவிற்கு, தாம் படைத்த திலோத்தமையைக் காதலித்த குற்றத்தினால், அன்று தொட்டு சரஸ்வதிக்குக் கணவன் பேரில் ஏற்பட்ட மனக்கசப்பு நிவர்த்தி ஆகாத காரணத்தினாலோ அல்லது சிறு பிள்ளை முருகனிடம் எல்லோரும் காணக் குட்டுப் பட்டதினால் நேர்ந்த அவமானத்தினாலோ, விண்ணுக்கும் மண்ணுக்கு விஸ்வரூபம் எடுத்த இறைவனின் முடியைக் காண அன்னப்பறவையாய்ச் சென்ற பிரம்மா, முடியில் இருந்து விழுந்த தாழம்பூவின் துணைகொண்டு முடியைக் கண்டதாகப் பொய் சொன்ன குற்றத்திற்காக இறைவனால் சபிக்கப்பட்டதாலோ என்னவோ இன்று வரை ஆலயங்களில் இவருக்கு (பிரம்மா) உருவச் சிலை கலைஞர்களால் அமைக்காது போய் இருக்கலாம். ஒருவேளை சரஸ்வதியின் நேர்மைக்காக உருவச் சிலைகளை ஆலயங்களில் அமைத்த போதிலும் பிரம்மாவுக்குச் சிலைகள் நிறுவப்படவில்லை. எல்லோருக்கும் விதியை நிர்ணயிக்கும் பிரம்மா தன்னுடைய விதியை நிர்ணயிக்க என்றுதான் முடிவெடுக்கப் போகிறாரோ?



செங்கோடனின் வடிவு அமைப்பின் அழகிலே மயங்கித் தன் வயம் இழந்த அருணகிரியார் கையாண்ட விதத்தினை அவரது கந்தர்அலங்காரப் பாடலில் பார்ப்போம். முருகனது அழகுணர்ச்சி



அவருக்குக் கருவிலே வாய்த்த திருவாக அமைந்திருக்கிறது. மலை மீதேறி அர்த்தநாரியையும், வேலனையும் தரிசித்துப் பாடிய கந்தர். அலங்காரப் பாடலே ''மாலோன் மருகனை'' என்பதாகும். அருணகிரி, கடற்கரையிலுள்ள செந்தூர் ஷண்முகனையும் தரிசித்திருக்கிறார். திருச்செங்கோட்டு வேலனையும் தரிசித் துள்ளார். கடைசி யாகத் திருத்தணி சென்று அவனது தணிந்த கோலத் தையம் தரிசித்தும் தாம் பாடிய கந்தரலங்காரப் பாடலில் ஏனோ தன்னைப் படைத்த பிரம்மன் மேல் இத்தனைக் கோபம். செந்தூர் சென்றால் அங்கு பிரமன் எழுதிய தலையெழுத்து முருகனது கால் பட்டு அழியும் என்கிறார். அடுத்தபடியாக செங்கோடனைக் கண்டு தொழ நாலாயிரம் கண் படைக்காமல் போய்விட்டானே அந்தப் பாவிப்பயல். தன்னைத் தணிகைக்கு அழைக்காத குறைக்கு அந்தப் பிரமன் பேரிலேயே பழியைப் போடுகிறார், இவ்வாறு எல்லாம் பிரம்மனைச் சாடுகிறார். என்னதான் பண்ணுவான்? அவனோ முன்னமே



குட்டுப் பட்டவன். இனியாவது இப்படிக் கவிஞர்களிடத்தும், கலைஞர் களிடத்தும் குட்டுப்படாமல் தப்பித்துக் கொள்ள வேண்டும். எலலோர்க்கும் தலை எழுத்தை நிர்ணயிக்கிற பிரம்மன் தலைவிதி எப்படி இருக்கிறதோ யார் கண்டார்கள்?

திருச்செங்கோட்டில் உள்ள வடிவம் மிகவும் தொன்மை யானதுதான். இந்த வடிவினைத்தானே சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோ ''கங்கை முடிக் கணிந்த கண்ணுதலோன் பாகத்து மங்கை உருவாய் மறை ஏத்த நிற்கும்'' என்பர். இந்த அம்மை அப்பன் உருவில் எத்தனை அழகைக் கலைஞன் வடித்திருக்கிறான். அதி அற்புதமான சிற்பக்கலைக் கூடமான மாமல்லபுரத்திலேயும், அர்த்த நாரிக்கு ஓர் இடம் ஒதுக்கச் சிற்பிகள் மறக்கவில்லை. பஞ்சபாண்டவர் ரதங்கள் எனும் 5 கல் ரதங்களிலே கம்பீரமாக உயர்ந்திருப்பது தருமரது ரதம் அந்த ரதத்தன் பின்புறச் சுவரிலே ஓர் அர்த்தநாரியின் வடிவத்தைச் செதுக்கி வைத்துள்ளனர். சக்தியும் சிவமும் தனித்தனியே நிற்பவை அல்ல என்றும் பின்னிக்கிடந்தே அருள்புரிய வல்லது என்றும் அல்லவா கலைஞர்கள் கற்பனை பண்ணியிருக்கிறார்கள். திருச்செங்கோடு அர்த்தநாரியைத் தரிசித்த உங்கள் மனச்சாந்திக்கு இதேபோன்று மற்றோர் இணைப்பையும் பிணைப்பையும் கண்டு களிக்க சாய்க்காடு எனும் தலத்திற்கே செல்வோம் வாருங்கள்.

தமிழ் மக்களால் வணங்கப் பெறும் ஒப்பற்ற மூர்த்திகள் இருவர். ஒருவன் தமிழ் மக்களுக்கே உரித்தான கடவுள் முருகன். மற்றொருவன் தடந்தோள் வீரனான இராமன். இவர்கள் இருவரும் ஒப்பற்ற மூர்த்திகள் என்றாலும், இவர்களுக்கிடையே எத்தனை எத்தனையோ வேற்றுமைகள். முருகன் சைவச் சார்புடையவன். தென்னாட்டுக்காரன். ஒன்றுக்கு இண்டு மனைவியரை வைத்துக் கொள்ள வழிகாட்டியவன். அவன ஏந்தியிருக்கும் ஆயுதமோ ஞானவேல்.

ஆனால் இராமன் முழுக்க முழுக்க விஷ்ணுவின் அம்சம். வடநாட்டான் ஏகபத்தினி விரதன். அவன் ஏந்தி இருப்பதோ கோதண்டம். இத்தனை அடிப்படை வேற்றுமைகள் இருந்தாலும் இந்த இருவருமே தமிழ் மக்களால் போற்றி வணங்கப்படுகின்ற தெய்வங்கள் ஆவர். இந்த இருவரும் தனித்தனியாக இருப்பதை விட இணைத்துப் பார்க்கவே கலைஞன் விரும்பினான். ஆதலால் வேலேந்தியவனை வில்லேந்த வைத்திருக்கிறார்கள். வில்லேந்தியவனை வேலேந்த வைத்திருக்கிறார்கள். அவனைத் தனுஷ் சுப்ரமணியன் எனப் பெயரிட்டு அழைத்தனர். மேலும் அழகாபுத்தூரில் முருகன் கைகளில் சங்கு, சக்கரம் ஏந்தி நின்று அருள்பாலிக்கிறார். வில்லேந்திய வேலனைக் கல்லிலே வடித்து நிறுத்தியிருக்கிறார்கள். திருவையாற்றிலும், திருவண்ணா மலையிலும் செப்புச் சிலையாக வடித்திருக்கிறார்கள். சாய்க்காடு என்னும் சாயாவனத்திலே இராமனையும் முருகனையும் பின்னிப் பிணைந்து நிற்கும் கோலம் தான் எத்தனை அழகு? இந்தப் பிணைப்புகளுக்கெல்லாம் மூலாதாரம் என்ன? உயிர்கள் அனைத்தையும் ஒன்றோடொன்று இணைக்கும் வலிமையுடையது அன்புதானே? ''அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே'' என்று வள்ளலார் பாடியுள்ளார்.

தெய்வ வடிவங்களையே ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து உயிர்கள் பால் வைத்த பேரன்பை வெளிப்படுத்தவே கவிஞர்களும், கலைஞர்களும் அரிய பணிகளைச் செய்துள்ளனர்.

# 26. முந்துதமிழின் சிறப்பு

மிகப் பழமையான தமிழ் இலக்கண நூல் தொல்காப்பியம் ஆகும். இதன் காலம் கி.மு. 500 என வரலாறு கூறும் திராவிட மொழியில் சமஸ்கிருத தாக்கம் சிறிதளவும் பெற்றுள்ளது. காலத்தால் தொன்மையான தமிழ் இலக்கியங்களைச் சங்க இலக்கியம் என்பர். இதன் காலம் கி.மு.500 முதல் கி.பி. 200 எனக் குறிப்பிடுவர் ஆன்றோர்கள். அதில் பெரும்பாலும் அழிந்து மீதம் உள்ளவைகளைத் தொகுக்கப்பட்டும் பாதுகாக்கப்பட்டும் வந்தன. அவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பனவாகும். 473 புலவர்களால் பாடப்பெற்ற இதில் 30 பெண்பால் புலவர்கள் பாடியுள்ளனர். இவற்றில் அகம், புறம் என இருவகையாகப் பிரிக்கப்பட்டு, அகம் என்பது காதல் வாழ்க்கையையும், புறம் என்பது போர் முதலான வாழ்க்கைகளையம் கூறுவதாக வகை செய்யப்பட்டு உள்ளது. பழந் தமிழர் காலம் சுமார் கி.மு.10,000 ஆண்டிலிருந்து தொடங்குகிறது என ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். 1863–ஆம் ஆண்டில் நடந்த அகழ்வாராய்ச்சியின் மூலம் இது வெளிப்படுகிறது. ஒரு காலத்தில் தமிழும் தமிழ் தெய்வமும் உலகம் முழுவதும் பரவி இருந்ததாகத் தெரிகிறது. அண்மையில் 19–7–96, தினமணி பத்திரிகையில் 'கானகம் மறைத்த ஆலயம்' என்ற தலைப்பில் ஆங்கோர்வாட் கோயிலைக்

காண்பித்தார்கள். கம்போடியாவில் இருக்கும் கோயில் பிரம்மாண்டமானதாயும், மிகவும் பழமை வாய்ந்ததாயும் இருப்பதை தெரிவித்துள்ளனர். வாட் எனில் கோயில். ஆங்கோர் என்பது ஓங்காரம் இது இந்து கோயிலாகும். கலை வேலைப்பாடுகளோடு அமைந்த இக்கோவில் அளவில் மதுரைக் கோயிலை நிகர்த்தது. கேட்பார் அற்று, செடியும் தழையும் மூடி, இதன் பக்கத்தில் இருந்த காட்டோடு காடாக மாறிவிட்டது. இத்தகைய ஆலயத்தை கண்டுபிடித்தவர் ஒரு பிரெஞ்சுக்காரர். அவரால் கண்ட ஒரு சின்னத்தைக் கொண்டு கோயிலின் அகல நீளத்தைப் பார்க்கப் போனதில் வியக்கத்தகும் பிரம்மாண்டமான கோயில் என்பதை உணர்ந்தார். இதனால் பழங்காலத்தில் உலகம் பூராவிலும் இந்து சமயம் தெய்வங்களும் பரவி இருந்ததற்கு சான்று. இதனால்தான் இன்றும் யுனெஸ்கோ வெளியிடும் இதழ்களில் '' கூரியர்'' என்ற இதழ் தமிழல் சிறப்பாக வருகிறது. இங்கிலாந்தில் பி.பி.சி. வானொலியிலும் (தமிழ், ஓசை) சீன நாட்டு வானொலி, ரஷ்யாவில் உள்ள மாஸ்கோ வானொலி பிலிப்பைன்ஸ் வானொலி இவைகளில் தமிழ் ஒலி பரப்பப்பட்டு வருகிறது. ஆங்கிலம், பிரான்சு, ஜெர்மன், ரஷ்யா போன்ற உலகப் பெருமொழிகள் வளர்ந்துள்ள அளவுக்குத் தமிழ் வளர்ந்து விட்டது என்று கருத முடியாது போனாலும், தேமதுரத் தமிழ் ஓசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும் என்ற பெரும் விருப்பத்திற்கிணங்க பல நாடுகளும் ஏதாவது ஒரு வகையில் தமிழ் தொடர்புபெற்று விளங்குவது நம் எல்லோர்க்கும் மகிழ்ச்சியோடு கண்ணாரக் காணும் உண்மை ஆகும்.

இத்தகைய தமிழின் சிறப்பை அறிந்தே, இறைவனையே தமிழ்த் தெய்வமாகக் கருதி முன்னோர்கள் நூல்கள் வாயிலாக உணர்த்தியுள்ளார்கள். இத்தமிழின் சிறப்பை 500 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த அருணகிரிப்பெருமான் தாம் பாடிய திருப்புகழில் ''முந்துதமிழ்மாலைக் கோடிக் கோடி'' எனவும், பழுத்தமுத தமிழ்'' என வேல் வகுப்பிலும், பகதர்தர்தான செந்தமிழ்'' எனவும்,

தமிழானது எல்லா மொழிக்கும் முதன்மையானது எனப் புகழ்ந்துள்ளார். மற்றோர் பாடலில் ''முத்தமிழடை வினை முற்படுகிரிதனில் முற்பட எழுதிய முதல்வோனே'' என்றதில், தமிழானது வினாயகப் பெருமானாலும், ''தமிழ்யத்து அகப்பொருள் வருத்தியினை, உணர்வித்தருள் வித்தக சற்குருநாதா'' என்பதிலிருந்து முருகப்பெருமானாலும் தமிழைப் போற்றினவர்களாகத் தோன்றுகிறது. அதனால் மற்ற மொழிபோல் அல்லாது ஆதியாயுள்ள தெய்வப் பாஷையாகும்.

ஆரியமும் தமிழும் ஆதியில் கடவுளால் தோற்றுவிக்கப் பட்ட பாஷையாகும். இவ்விரு பாஷைகளிலும் எல்லாவிதப் பொருள்களும் உண்டு என்பதற்குத், திருமந்திரம் பாடலில்,

''ஆரியமும் தமிழும் உடனே சொலிக்காரிகையார்க்கும் கருணை செய்தானே'' – கூறப்படுகிறது. இதை உணராதவர்கள் கும்ப முனிவரால் தமிழ் உண்டாக்கப்பட்டது எனக் கூறுவர். வடமொழிபோல் அவ்வளவு சிறந்ததல்ல என்றும் கூறுவர். அகஸ்தியர் ஆதிகாலத்தில் தாம் சிவபெருமானால் உணர்ந்த தமிழை, தமது மாணாக்கர் வாயிலாக உலகத்தில் பரவச் செய்தாரேயன்றி, தமிழை உண்டாக்கினரவர் அல்லர் என்பதனை ''ஆதியில் தமிழ் நூல் அகத்தியர்க்குணர்த்திய மாதொரு பாகனை வழுத்துதூம், போத மெய்ஞ்ஞான நலம் பெறல் பொருட்டே'' என்று தொல்காப்பிய பாயிர முகத்தால் உணர்க. ஆகையால் இது முந்துதமிழாகும்.

மேலும், திருப்புகழ்ப் பாடலிலும் ''சிவனை நிகர் பொதியவரை முனிவன் அகமகிழ இரு செவி குளர இனிய தமிழ் பகர்வோனே'' எனக் கூறியுள்ளார். ஒரு காலத்தில் நம் நாட்டில் 3 கோள்கள் வந்ததாயும், நாவலன் தீவும் அழிந்ததாகவும், உலகம் சிதறுண்டு போன பிறகு ஐரோப்பா, நியூசிலாந்து, மடகாஸ்கர், ஆஸ்திரேலியா, அமெரிக்கா போன்ற நாடுகள் தனித்தனியே தோன்றலாயின. என்னோடு பள்ளியில் பயின்ற என் நண்பர் திரு.

சிலேடன்(anglo Indian) என்பவர் அரசாங்கப் பணியில் பணியாற்றி, ஓய்வு பெற்று நியூசிலாந்து சென்றவர், அடியேனுக்குக் கடிதம் எழுதியதில், அங்குள்ள காட்டுவாசிகள் இன்றும் பேசும் பாஷையில் 100க்கு 90 பாகம் தமிழ் வார்த்தைகள் காணப்படுகிறது எனத் தெரிவித்திருந்தார். இதனால் தமிழானது உலகம் பூராவும் பரவி இருந்ததென்பது தெரியவருகிறது.

சமய ஆச்சார்யர்கள், ஆழ்வார்கள், ஏனைய பக்திமான்கள் போன்றோர் தங்களுடைய அறிவின் திறத்தாலே சிறப்புடன் விளங்கினர் என்பதாகக் கொள்வது சிறப்புடையதல்ல. அப்படி இருந்தால் அவர்களைப் புலவர் என்றுதான் பாராட்டலாம். அறிவுக்கும் அப்பால் இறைவனது திருவருள் நலத்திலே ஈடுபட்டு அனுபவம் பெற்றிருக்க வேண்டும். அத்தகு அனுபவம் செறிந்தவராக விளங்கியவர்கள்தான் நாயன்மார்கள் ஆவர். அவர்களில் இறைவனருளால் ஞானப்பால் உண்டு. தமிழால் பாடல்களை இயற்றித் தந்தவர்தான் ஞானசம்பந்தப் பெருமான். இவரது பாடல்களாகிய, திருக்கடைக் காப்புக்கும், ஏனைய அருளார்களால் பாடப்பெற்ற பால்களையும் ஒப்பிட்டு அனுபவித்துப் பார்த்ததில், இவர்களுக்குள்ளே வேறுபாடு தோன்றாது போனாலும் அந்த இறை அனுபவத்தைச் சொல்லுகின்ற முறையிலே வேறுபாடு இருந்தது.

பொதுவாக எம்.ஏ., பட்டம் பெற்றவர்கள் யாவரும் ஒரே மாதிரியாக மாணவர்களுக்குப் பாடம் சொல்லித் தருகிறார்களா? அதனால் கல்வி பட்டத்திலே குறைவு இல்லை. நன்றாகக் கற்றுத் தேர்ந்தவர்களேயாவர். படித்தவற்றைச் சொல்லித் தருவதிலே வேறுபாடு உள்ளதை அறியலாம். அதைப் போன்று இறைவனிடம் பரிபூர்ண பக்தியில் தோய்ந்து, உலக மக்களுக்குச் சொல்ல வேண்டும் என்று கருணை உள்ளம் இருந்தபோதிலும் அதை நிறைவேற்றினவர்கள் மிகச் சிலரேயாவர். அத்தகைய சிலருள் உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கப்படுபவரே,

ஞானசம்பந்தர். காரணம் எல்லா ஞானிகளும், அருளாளர்களும் இறைவனைக் காதலால் கசிந்து, கண்ணீர் மல்கி பாடிய பின்னரே எம்பெருமானால் ஆட்கொள்ளப் பட்டபோதிலும், இதற்கு மாறாக ஞானப்பால் உண்ட பிறகு இறைவனையும் இறைவியையும் நேரில் கண்ட பிறகே நற்றமிழால் பாடினவர் ஆவர்.

ஒருவருக்கு நீதிகளை பலர் உரைப்பர். பள்ளியில் ஆசிரியரோ அதையே அதிகாரத் தொனியில் உரைப்பர். நெருங்கிய நண்பர்களானால் உரைக்கும் விதம் வேறு. காதலி ஒருத்தி காதலனுக்கு அந்த நீதியைக் கூறினால் எப்படி இருக்கும்? அந்த முறையில்தான் தமிழின் இனிமையும் நயமும் கொண்டு ஞானசம்பந்தர் கூறிய அருட்கருத்துகள் மக்களுக்கு ஏற்புடைய தாய் விளங்கியது. காதலி காதலனுக்குக் கூறுவதுபோல் தமிழின் சுவையும் பக்தியும் பொருந்து வகையில் அமைந் துள்ளது. இதனால்தான் சம்பந்தர் பாடியதை, 'ஞானசம்பந்தன் உரைசெய் சங்கமலி செந்தமிழ்'' எனவும், ''நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்'' எனவும் போற்றினர். எவருக்கும் கிடைக்காத இச்சிறப்பு, இறைவியின் அருளால் கொடுக்கப்பட்ட ஞானப்பால் உண்டதின் பயனே, தமிழில் அமிர்த கவிபாடும் திறமை வாய்த்ததோடன்றி, ஏனையோர்களால் ''நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்'' எனும் பெருமையையும் பெற்று விளங்கினார். நற்றமிழ் என்று குறிப்பிட்டது சங்கத் தமிழ் மொழியையே எனின், மிகப் பொருந்தும். மக்கள் யாவரும் இத்தகு தமிழ் பாடலகளைப் போற்றியும் பாடியும் வருவதே தமிழர்களாகிய நமக்குத் தலையாய கடமையாகும் இன்றையிலிருந்தாவது தமிழின் சிறப்பை உணர்ந்து, தமிழ்த் தெய்வமாகிய இறைவனைத் துதி செய்து வாழ்வில் கரையேறுவோமாக.

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழ்மொழிக்கு அழியா சிறப்பையருளிய பேராசிரியர் தொல்காப்பியர் தம்மை குறள் தந்த வள்ளுவர் தமிழ்த்திருவள்ளுவன் என்றே தம்மை

அடையாளம் கூறினால் சிலப்பதிகாரம் எனும் காப்பியத்தை இயற்றிய முத்தமிழ் வித்தகர், இளங்கோவும், தம்மை தமிழ் இளங்கோ என சொல்லிக் கொள்ளவில்லை.

இந்நிலையில் சம்பந்தர்மட்டும், தம்மை ''தமிழ் ஞானசம்பந்தன்'' என வழங்கியதின் அருமைப்பாடு ஆராய்ந்து இன்புறப்பாவது. முருகவேள் சிவனுக்கு பிரணவத்தை உபதேசித்த தம், எலும்பை பெண்ணாக்கிதும், முதலை உண்ட பாலனை உயிர் பெறச்செய்ததும், அரவம் தீண்டி, மாண்ட பாலகனை எழுப்பியதும்,

அருணையில் முருகனோடு மயிலுமாடி வருமாறு செய்ததும், தமிழேயாகும். திருவள்ளுவர் பாடிய தெந்தமிழும், திருமூலர் ஓதிய திந்தமிழும், இளங்கோவடிகள் இயம்பிய இன்தமிழும், நற்கீரர் நவின்ற நற்றமிழும், கம்பர் இயற்றிய கன்னித் தமிழும், ஆண்டாள் அருளிச் செய்த அமுதத்தமிழும், நம்மாழ்வார் நவீன்ற குமரகுருபரர், வள்ளலார் முதலானோர் வழங்கிய தண்தமிழும், ஆதிசேடனோடு பரந்தாமனை பின் தொடரவைத்ததும், கயிலையிலே அரங்கேறியதும், பித்தா என பாடப்பெற்றதும், முழுமுதற் கடவுளை ஏவல் கொண்டதம், கோவையை எழுதவைத்து, கைச்சாத்துயிடச் செய்ததும் தமிழேயாகும். பரமாத்வை அடைய, அருணகிரிநாதர், நாயன்மார்கள் ஆழ்வார்கள் போன்றோர்கள் பல ஆண்டுகளுக்கு முன்னரே தாங்கள் மாறிலாமகிழ்ச்சியில் அனுபவத்தபேரின்ப நிலைகளை, ஜீவனுள்ள அருட்பாக்களால் பாடியருளிய தெய்வத்தமழை மக்கள் ஒவ்வொருவரும், மனம், வாக்கு, காயம் மூலம் தமிழ்மணம் கமழ எல்லாம் வல்ல இறைவனைப் போற்றி செய்து நாடி வரும் வினைகளவை ஓடிட வெல்வோமாக.

# 27. கந்தரனுபூதி

அடியேன் இளமையிலிருந்தே என் தந்தையின் அன்புக்கட்டளைக்கிணங்க, வள்ளிமலை சச்சிதானந்த சுவாமி களைக் குருவாக ஏற்று திருப்புகழ்ப் பாடல்களைப் பாடும் பணியிலே இறைபணி ஆற்றி விட்டு, முதுமையில் என் தந்தையாரின் மூலம் தணிகைமணி வ.சு. செங்கல்வராயப்பிள்ளை அவர்களோடு பழகும் வாய்ப்பினைப் பெற்றதின் பயனே, இப்பொழுது வயது முதிர்ச்சியினால் உடலுறுதி தளர்ந்த போதிலும் உள்ளத்தினால் உறுதி குன்றாது, அருணகிரி பெருமானின் திருவாக்காகிய கந்தரனுபூதி பாடல்களில் பொதிந்து கிடக்கும் மதிக்கவொணா அரிய கருத்துக்களை, எனது சிற்றறிவைக் கொண்டு அடியார் பெருமக்கள் யாவரும் உணர்ந்து பயனடையும் வகையில்



இக்கட்டுரை எழுத முற்படும்போது, எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம் ஏதேனும் நேரிட்டிருக்கலாம். இதில் ஆச்சர்யப் படுவதற்கொன்றுமில்லை. அவற்றினை என் முதுமைப் பிதற்றல் எனக் கொண்டு, குற்றம் காணுமிடத்து அது என் பிறவிச் செயல் என்றும், குணம் காணின் இறைவனின் கருணை என்றும் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

தேனாகத் தித்திக்கும் அனுபவத் தத்துவங்கள் அனைத்தையும் அறிவதை விட, அனுபூதியில் முக்கியமான சில பாடல்களை அறிந்தாலே போதுமான மனநிறைவு ஏற்படும் எனக் கருதியே இறைவனின் துணைகொண்டு எழுத முற்படுகிறேன்.

அருணகிரிநாதர் அருணையில் முருகப்பெருமானால் தடுத்தாட்கொள்ளப்பட்டு திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி திருவகுப்பு போன்ற கவிகளை இயற்றும் அருளைப் பெற்றவராவார். சமய ஆசாரியர்கள் எல்லாம் தங்களுடைய அறிவின் திறத்தாலே ஆசாரியர்கள் ஆகவில்லை. அறிவில் சிறந்தவர்களானாலும், வெறும் அறிவைக் கொண்டு அவ்களைப் புலவர்கள் எனப் பாராட்டலாம். அறிவுக்கும் அப்பால் இறைவனது திருவருள் திறத்திலே ஈடுபட்டு அனுபவம் பெற்றிருக்க வேண்டும். அத்தகு அனுபவம் செறிந்தவராக விளங்கியவரே அருணகிரிநாதர் ஆவார். இவர்கள் பிரசங்கம் செய்ய வேண்டும் என்பது அவசியமில்லை. மனம், வாக்கு, காயம், மூலம் என்றும், ஆத்மாவில் பதிந்திருக்கும் இறை அருளில் தோய்ந்திருக்கின்ற பெரியோர்களின் அடிப்படையிலே விளங்கினவர்தான் அருணகிரிநாதர். ஒருவருக்கு நீதிகளைப் பலர் உரைப்பர். நண்பர்களானால் அதையே உரிமையோடு உரைக்கும் முறை வேறு. ஆசிரியரால் விளங்கவைக்கும் முறை வேறு. ஆனால் காதலி தன் காதலனுக்கு நீதிகளை எடுத்துக் கூறினால் எப்படி இருக்குமோ, அந்த முறையிலேதான் இனிமையும் நயமும் கொண்டு ஆன்றோர்களின் அருட்கருத்துக்களை மக்களுக்கு

வழங்குவதற்கு ஒப்பாகும் விதத்தில் கசப்போ, வெறுப்போ இல்லாது, மக்கள் அருளாளர்கள் சொன்ன கருத்துகளைப் படிக்கும் பொழுது அவர்களையும் அறியாமல் உயரிய இறைத்தத்துவங் களை உணர்ந்து கொள்வர். காதலி காதலனுக்குக் கூறுவதுபோல் சுவையும், பக்தியும் பொருந்திய கருத்துக்களை அருணகிரியார் பாடிய கந்தர் அனுபூதியில் பரக்கக் காணலாம். கந்தபிரான் செய்த உபதேசச் சிறப்பையும் அவனது திருவருள் பிரசாதத்தின் பெருமையும் பேசும் நூலாதலின் இந்நூலுக்கு கந்தரனுபூதி எனப் பெயர் போந்தது. (அனுபூதி.... அருட்பிரசாதம்) முருகப்பிரான் திருவடி தீட்சை செய்து, மௌன உபதேசம் செய்த பிறகே கந்தரனுபூதி எனும் இந்நூலை ஆசிரியர் இயற்றினார் என்பது ஆன்றோர்கள் கருத்து.

அருணகிரியார் தமது குறைகளை எடுத்துக் கூறியும், தாம் தவநிலையில் பெற்ற பேற்றினை எடுத்து ஓதியும், தாம் அடைந்த மௌன நிலையின் பெருஞ்சிறப்பை எடுத்துக் கூறியும், தான் பெற்ற இன்பத்தை மக்கள் யாவரும் வழிபாட்டால் பெற்று உய்யுங்கள் என உபதேசித்தும் அருளிச் செய்த நூலே கந்தரனுபூதியாகும். இந்நூலுக்கு உயிர்நிலைப் பாக்கள். ''ஆடும்பரி'' ''கெடுவாய் மனனே'' எனத் துவங்கும் பாடல்களேயாம்.''

அருணகிரியாரின் அனுபூதிப் பாடல்களையும், பிற அனுபூதிமான்கள் அருளிய நூல்களையும் பார்த்ததில், அனுபூதிமான்களுக்குள்ளே வேறுபாடு தோன்றாது போனாலும். அந்த அனுபவத்தைச் சொல்லுகின்ற முறையிலே வேறுபாடு இருந்தது. பொதுவாக எம்.ஏ. பட்டம் பெற்றவர்கள் யாவரும் ஒரே மாதிரியாக மாணவர்களுக்குச் சொல்லித் தருகிறார்களா? அதனால் அவர்கள் பெற்ற கல்விப் பட்டத்திலே குறைவு இல்லை. நன்றாகக் கற்றுத் தேர்ந்தவர்களேயாவர். படித்தவற்றைச் சொல்லித் தருவதிலே தான் வேறுபாடு உள்ளதை அறியலாம். அதைப் போன்றே அனுபூதி மான்களுக்குள்ளே, நல்ல உயர்ந்த

அனுபவத்தை உலக மக்களுக்குச் சொல்ல வேண்டும் என்ற கருணை உள்ளம் இருந்த போதிலும் அதை நிறைவேற்றினவர்கள் மிகச்சிலரேயாவர். அத்தகைய சிலருள் உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கப்படுபவரே அருணகிரிநாதர். ஒருவன் குக்கிராமத்தில் இருந்து பட்டணம் சென்று திரும்பி வந்ததும், தான் கண்டதைச் சொல்ல நினைக்கிறான். அங்கே வீடுகள் இருந்தன. வீதிகள் இருந்தன. மனிதர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று கொண்டிருக் கிறார்கள் என்றா சொல்வான். அதற்கு மாறாக, அந்த ஊரிலே எவ்வளவு உயர்ந்த கோபுரங்களைக் கொண்ட ஆலயங்களையும், மாடிக்கட்டிடங்களையும், வீதிகளில் செல்லும் வாகனங்களையும் நகை –ஆபரணங்கள் கடைகளைப் பற்றியும் தன் கிராமத்தில் காணாததை அல்லவா சொல்லுவான். அதுபோன்றே நாம் எத்தனையோ நூல்களைப் படித்தாலும், கந்தர் – அனுபூதியைப் படிக்கும்பொழுது ஏனையோர் பாடிய நூல்களில் உள்ள அரிய கருத்துகளைப் படித்து அறிந்த போதிலும் அவற்றைப் பெரியனவாகப் பாராட்டாது.

கந்தரனுபூதியில் மட்டும் காணப்படுகின்ற அனுபவ துளிகளாகிய பாடல்களை நினைத்து, இத்தகைய உயர்ந்த பாடல்களைக் கொண்ட நூல் வேறு எங்கு உண்டு? என விம்மிதம் அடைவோம். அப்படி இன்றைய நாளில் விம்மிதம் அடைகிறோமோ, இல்லையோ? பெரியவர்கள் அப்படி விம்மிதம் அடைந்தார்கள். உதாரணத்திற்குப் பெரியவர்களுக்குள்ளே அனுபவசாலியும், இறைவனுடைய அருள்பெற்ற தவச்சீலரு மாகிய தாயுமானவர் அப்படி விம்மிதம் அடைந்தார். அதைக் குறித்து அவர் பாடிய பாடல் ''ஐயா, அருணகிரியப்பா, உனைப்போல் மெய்யாக ஒரு சொல் விளம்பினர் யார்?'' என்பதாகும்.

தம்மக்கள் அனுபவிக்கும் பொருட்டு செல்வத்தைச் சேமித்து வைக்கும் தந்தையைப்போல், நெஞ்சக்கனலும் நெகிழ்ந்து உருகி தொழுது இறைவனுடைய திருவருள் அனுபவம் பெற்ற

அருணகிரியார் போன்ற அனுபூதிமான்கள் அந்த மாபெரும் அழியா அருட்பிரசாதத்தை, செல்வத்தை எளிதில் நாமெல்லாம் பயனடையும்படி பாடி அருளிப் போந்துள்ளனர்.

அருணகிரிநாதர் உலகமக்களின் பொருட்டு மக்கள் செய்யும் குற்றங்களைத் தாமே செய்ததுபோல், இறைவனிடம் முறையிட்டுக் கொண்டு அதற்குப் பரிகாரமும் சொல்லியுள்ளார். இவர்கள் எல்லாம் வக்காளத்துப் பெறாத வழக்கறிஞர்கள் ஆவர்கள். பக்திமான்கள் உள்ளத்தில் அழுத்தமாக பதியவே முருகனது திருக்கரத்திலே இருந்து அவன் சொன்னதைச் சொன்ன கிளியே அருணகிரியாவார் எனச் சொல்லி மனதை ஒரு நிலைப்படுத்தவே ஆராய்ச்சியாளர்கள் கற்பனை செய்து அல்லது மனதில் தோன்றியதைக் கூறி இருக்கலாமல்லவா? இறைவனது பேரின்ப நிலையை அடைந்த பிறகு பசு கரணம் மாறி பதிகரணம் ஆன பிறகே பாடிய பாட்டே திருவகுப்பு எனும் நூலாகும்.

கந்தரனுபூதியை அருணகிரியார், கிளியாயிருந்து பாடியதற்கு எங்கும் குறிப்புகள் காணப்படவில்லை. மேலும் தான் மானுட தேகத்தில் இருக்கும் போதுதான் அனுபூதி பாடப் பெற்றது என்பதை அவரது பாடலிலேயே ஆதாரம் உள்ளது.

*" அடைக்கலப் பொருளாம் நாயெனை அழைத்து*
*முத்தியதாம் அனுபூதி என் அருட்திருப்புகழ் ஓதுக. "*

**வேல்மயில் அருள்வோனே''** எனக் கூறியதிலிருந்து அறியலாம். மேலும் பசுகர்ணம் மாறி பதிகர்ணங்களாக மாறிய பிறகு உலகின் சிற்றின்ப வர்ணனைகளையும், வறுமையையும் குறித்துப் பாட வாய்ப்பே ஏற்பட்டிருக்காது. ஆனால் திருவகுப்பு பாடியிருக்கலாம் எனக் கொள்வதற்கு ஆதாரம் அவரது வாக்கிலிருந்தே அறிய முடிகிறது.

மேலும் தாம் மானுட தேகத்திலிருக்கும்போதே, பாடிய பாடல்களில் இறவாத இன்ப அன்பை வேண்டி, தனக்குச் சுக

சொருபம் அருள வேண்டும் என முருகனிடம் விண்ணப்பித்துள்ளதைக் காண முடிகிறது (சுகம் – கிளி) திரு வகுப்பு பாட ஆசைப்பட்டதற்கு அன்னாரது," நிந்தனையில் பத்தர் வெட்சிமலர் தூவும் நின்பத யுகப்பிரசித்தி என வகுத்துரைக்க நின்பணி தமிழ் தரயத்தை – அருள்வாயே" என்று பாடியது, தான் திருவகுப்பு பாட அடிகோலி, வேண்டுகோளாக இந்தப் பாடல் விளங்குகிறது.

இப்பாடலே திருவகுப்பு பாட ஓர் எடுத்துக் காட்டாகும். திருவகுப்பில் ஒன்றில்தான் சிற்றின்ப வர்ணனையோ, உலக பந்த பாசங்களையோ சிறிதும் கலவாது, பேரின்ப நிலையில் பாடப்பட்டுள்ளதை அறியலாம். திருவகுப்பில், "உரை பெற, வகுத்தருணை நகரினொரு பத்தினிடும் ஒளி வளர் திருப்புகழ் மதாணிக் கிருபாகரன்" எனப் படர்க்கை வினையில் பாடியுள்ளதையும், "ஏழையின் இரட்டை வினையாயதோர் உடற் சிறையிராமல் விடுவித்தருள் – நியாயக்காரனும்..." எனவும் கூறியதிலிருந்தே அறியமுடிகிறது. ஒருவேளை இறைவனுடைய திருக்கரத்தில் இருந்து அனுபூதி பாடினார் என்ற கதை சொன்னதாக நம்புகின்றவர்களும் இருக்கலாம்.

அதை ஆராயாது, அவர் பாடிய ஏனைய பாடல்களைக் காட்டிலும் திருவகுப்பில் ஞானமணம் நிரம்பியதாக, இறைவனது செறிவை மிக மிக நன்றாக விளக்குவதாக இருக்கிறது என்பதை மாத்திரம் நாம் அறிந்து கொண்டாலே போதும். மானுட தேகத்திலிருந்தே பாடிய பாடல்களாகிய திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி போன்றவைபோல கந்தரனுபூதியும் பாடி இருக்க வேண்டும். சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்ற பழமொழி ஒன்று உண்டு.

அருணகிரியாகிய கிளிக்குத் தன்னிச்சையாகப் பேசத் தெரியாது. சொன்னதைத்தான் சொல்லும் கிளிப்பிள்ளை எனும் முதுமொழிக்கேற்ப, முருகன் சொன்னதைத்தான் திருப்பிச்

சொன்னது என்று கருதினால் கந்தரனுபூதியில் வரும் பாடல்களில் சிற்றின்பத்தைப்பற்றிய பாடல்கள் முருகன் கிளிக்குச் சொல்லி அதையே கிளி பாடியது எனக் கருதுவது சிறிதும் பொருந்தாது. கிளியாயிருந்து பாடின பாடல்கள் திருவகுப்பு எனக் கொள்ளலாம். முன்னம் அவர் பாடிய பாடல்களில் மனித உள்ளம் இருக்கும். ஆனால் திருவகுப்பில் இறைவனே உள்ளத்தில் இருந்து நம்மைப் பாட வைத்தால் எவ்வாறு இருக்குமோ, அதே போன்று அரிய தத்துவங்களை எல்லாம் திருவகுப்பில் நிரம்ப இருப்பதைக் காணலாம்.

மழையின் காரணத்தால் காட்டாறுகள் பெருக்கெடுத்து ஓடும். சிறிதுநேரம் கழித்து வற்றி விடும். அதேபோன்று சில பாடல்கள் நம் நாட்டில் எங்கும் முழங்கும். பின்னர் அவை இருந்த அடிச்சுவடுகள் கூட இல்லாமல் மறைந்து விடும். ஆனால் அனுபூதி மான்களில் அருணகிரியார் சிறந்து விளங்கிய இறை அருளால் பாடி அருளிய ஞான பாடல்களாகிய கந்தரனுபூதி போன்ற செந்தமிழ் வெள்ளம் கங்கை வெள்ளம்போல் என்றும் அழிவின்றி பொலிவோடு விளங்குவதை இன்றும் காணலாம்.

கந்தரனுபூதியில் அருணகிரியார்தம் அனுபவத்தை நிரம்பவும் தெளிவாகவும் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். மெய்ப்பொருள்பற்றி நாலு பாடல்களில் கூறியுள்ளதைக் கவனிக்க வண்டும். பாடல் எண்கள் 3,11,20,45, மனத்தை விளித்து அறிவுரைகள் 3 பாடல்களில் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். பாடல் 7,14,37, இந்த மூன்று பாடல்களும் பிறவிப் பிணிக்கு அரிய மருந்தாகும். இந்த 3 பாடல்களுக்கும் ஒரு முத்திரை வைத்ததுபோல் வாய் என்ற பதத்தை அல்லது சொல்லை அமைத்துப் பாடியுள்ளது பெருமைக்குரியது.

கந்தரனுபூதியில் சிந்தனைக்குரிய பல அற்புத கருத்துகள் காணுவது அவசியம்.

தாம் அவதரித்த திருவருணைத் தலத்தைப் பற்றியோ, அன்னாருக்குத் திருப்புகழ் பாட வயலூர் பிள்ளையாரே அனுக்கிரகித்ததைப் பற்றியோ, முருகனே அருணகிரியாருக்குத் திருவாவினன் குடியில் ஜபமாலை தந்தருளியதைப் பற்றியோ, அன்னாரால் போற்றப்பட்ட முருகனது 6 திருப்பதிகளைப் பற்றியோ, கந்தர் அனுபூதியில் எங்கும் குறித்துப் பாடாத போதிலும், நாகாசலம் எனும் திருச்செங்கோட்டை மட்டும் குறித்துப் பாடியுள்ளதின் உட்கருத்து விந்தைக்கு உரியதாக இருக்கிறது.

இனி திருமால் மருகன் என மிக அழகாகவும், பெருமையாகவும், திருப்புகழிலும், கந்தரலங்காரத்திலும், திருவகுப்பிலும் பல இடங்களில் இனிக்க இனிக்க நாராயணனுடைய பெருமைகளைப் பாடியிருந்த போதிலும் கூட, அனுபூதியில் திருமாலைப்பற்றி ஒரு பாடலில் கூட பாடியதாகக் காணவில்லை. இதனையும் சிந்தனைக்குரிய கருத்தாகக் கொள்ள வேண்டும். குமர குருபரனாகிய குகனைக் குருமூர்த்தமாகக் கொண்டாலன்றி உண்மைப் பொருளை உணரமுடியாது என்று 13 வது பாடலாகிய ''முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகும் செயல் தந்து உணர்வென் றருள்வாய்'' எனத் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் உணர்த்தி விட்டார். இப்பாடலைத்தான் ஞானியார் சுவாமிகளும் தினமும் காலையில் எழுந்ததும் ஓதுவது வழக்கமாகக் கொண்டிருந்தார்.

''நெஞ்சக் கனகல்லும்'' எனப் பாடியள்ளதை நோக்கின், நெஞ்சத்தைக் கனத்த கல்லுக்கு ஒப்பிடுவர். இக்கல் நெகிழ வேண்டுமானால் இறைவன் திருவருள் வேண்டும். இதைக் குறித்து மகாபவித்துவான். மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய வாட்போக்கி கலம்பகத்தில், ''தழுவுமையின் முன்னும் தமிழிறையால் பின்னும், தொழும் இறையால் மேலும் சுவடு எழும் கீழ் எனும் குறைபோம் என் மனஞ்சேர் வாட்போக்கி

என்றால் அமர்ந்தாய் அடி.'' இதன் கருத்து: இறைவா! உமைத்தழுவினதில் உடலின் முன்புறம் உனக்குத் தழும்பு ஏற்பட்டது. பாண்டிய அரசன் பிரம்பு கொண்டு உன் முதுகில் அடித்ததால் உன் பின்புறத்திலும் தழும்பு ஏற்பட்டது. அருச்சுனன் வில்கொண்டு உன் தலையில் அடித்ததால் உன் தலை மேலே ஒரு தழும்பு ஏற்பட்டது. உன் கீழ்ப் புறத்தில் தழும்பில்லை எனும் குறை நீங்கி விடும். நீ என் மனமெனும் கல்லின்மீது வீற்றிருப்பாயானால் என்பதாகும். இதே கருத்தினை அருணகிரியாரும் சுந்தரனுபூதியில் ''திணியான மனோசிலைமீது உனதுதாள் அணியார் அரவிந்தம் அரும்புமதோ'' எனப் பாடியுள்ளதைக் கவனிக்கற்பாலது. உலக மக்கள் யாவரும் பயனடையவே, சமரச நோக்குடன் பாடியதாகவே கருதுதல் வேண்டும். கந்தரனுபூதிப் பாடல்கள் அனைத்தும் சிந்தனைக்கும், வந்தனைக்கும் உரிய மந்திர நூலாகும் என்பதில் சந்தேகமேயில்லை. இந்தப் பாடல்கள் மட்டுமின்றி சுந்தரனுபூதி எல்லா கவிகளுமே அருணகிரிநாதர் தன் சுயநல நோக்கத்தின் அடிப்படையில் தன் மனத்தை நோக்கித்தான் அறிவுரை கூறிப்பாடினார் எனக் கொள்ளலாகாது.

கந்தரனுபூதி பாடல்களை முழுவதும் ஆராய்வதைவிட ஒரு சில பாடல்களை ஆராய்வதே போதுமானதாகும்.

முதல் பாடல் :

*'' ஆடும்பரிவேல் அணிசேவல் எனப்*
*பாடும் பணியே பணியா யருள்வாய் தேடும்*
*கயமாமுகனைச் செருவில்*
*சாடும் தனியானைச் சகோதரனே... ''*

என்பதாகும்.

இதன் கருத்தைச் சிறிது ஆராய்வோம்.

இதில் மயிலுக்கும் சேவலுக்கும் அடைமொழிக் கொடுத்துள்ளது. ஆனால் வேலுக்கு எந்தவித அடைமொழியும் கொடுக்கப் படவில்லை. பொதுவாக, நாட்டில் எல்லோராலும் அரசியலில்

பாராட்டப்படும் மகாத்மா காந்தி, உயர்பதவி வகித்த நேருஜீ, இந்திரகாந்தி, ராஜீவ் காந்தி, ராஜேந்திரபிரசாத், லால்பகதூர் சாஸ்திரி போன்றோர்கள் வானொலியிலோ, தொலைக் காட்சிகளிலோ, பத்திரிகைகளிலோ சொற்பொழிவாற்றும் நேரத்தில் இவர்களுக்கு எந்த அடைமொழியும் தராது எடுத்த எடுப்பிலேயே வெறும் அவர்களது பெயரையே நேர்முகமாக அறிவிப்பதைக் காணலாம். காரணம் இவர்களைப் போன்றோர் களுக்கு, பெயருக்குமுன் வழங்கும் அடைமொழிக்கு அப்பாற் பட்டவர்கள் என நினைப்பதே காரணம். மக்கள் இவர்களுக்கும் ஏனைய தலைவர்களுக்குக் கொடுக்கும் அந்தஸ்தைக் கொடுப்பார்களோயானால் வித்தியாசமின்றிப் போகும். இப்பாடலில் அருண கிரியார் 500 ஆண்டுகளுக்கு முன்னரே இதனை நடைமுறையில் செய்துகாட்டினராவார். தரத்தில் குறைந்த மயிலுக்கும் சேவலுக்கும் மட்டும் அடைமொழி தந்து, ஞான சக்தியாகிய வேலுக்கு அடைமொழி தராமலேயே தரத்தின் உயர்வினைக் கொண்டு பாடியுள்ளார். அப்படி வேலுக்கும் அடைமொழி கொடுத்துப் பாடியிருந்தால் மற்ற இரண்டோடு இதனையும் ஒப்புவிப்பதாகும்.

உதாரணத்திற்கு, திருத்தலம், திருக்கோயில், திருக்குளம், திருவாயில், திரு அலகு என்று கூறினபோதிலும் அவற்றிற்கு நாயகராகிய மூலப்பொருளுக்கும் அடைமொழி தந்து திரு வினாயகர், திருக்கபாலீஸ்வரர், திருசுப்ரமணியர், திருமதி கற்பகவல்லி என அழையாது நேர்முகமாக வெறும் இறைவனின் திருநாமத்தை அறிவிப்பது போன்று கொள்ளுதல் வேண்டும். பரம் பொருளுக்கு அடைமொழியே தேவையில்லை. இறை அன்பின் ஈடுபாட்டினால் பெருமை குறைந்தவர்களுகளுக்குத்தான் தங்கள் பெயர்களுக்கு முன்னும் பின்னும் அடைமொழிகள் தேவைப்படும், உதாரணம் சம்பந்தர், அப்பர், சுந்தரர், ஆண்டாள், காரைக்கால் அம்மையார் போன்றோர்களுக்குப் பெயர்களுக்கு முன் திரு அல்லது திருமதி என்று கூறப்படுவதில்லை.

பொதுவாகவே நாட்டில் ஒருவருக்கு வாழ்க்கையில் மாதா, பிதா, குரு, தெய்வம் எனும் நான்கும் துணையாக அமைவது இயல்பு. அடியேன் என் மாதா, பிதாவைக் குருவாக ஏற்றதன் பயனே, வள்ளிமலை திருப்புகழ் சச்சிதானந்த சுவாமிகளைப் பரமகுருவாக ஏற்கும் பாக்கியம் பெற்றேன். இம்மூவரது கருணையால் பிரபஞ்சம் என்னும் சேற்றிலிருந்து கரையேற,

*" கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்*

*நற்றுணையாவது நமச்சிவாயவே"*

எனும் அப்பரது வாக்கினிற்கு ஏற்ப, அருணகிரியார் அருளிச் செய்த கந்தரனுபூதி பாடல்களே தெப்பமாக அடியேனுக்கு உதவியது. அடியேன் முதுமையால் உடலால் வலிமை குன்றிய போதிலும், உள்ளத்தால் உறுதி குன்றாது, கந்தரனுபூதி பாடல்களை ஊன்றிப் படிக்கலானேன். கந்தரனுபூதியில் உள்ள பாடல்கள் அனைத்தையும் அறிவதைவிட முக்கியமான சில பாடல்களை அறிந்தாலே போதுமான மனநிறைவு ஏற்படும் எனக் கருதியே இறைவனின் துணைக்கொண்டு எழுத முற்படுகிறேன்.

அருணகிரிநாதர் அருணையில் முருகப் பெருமானால் தடுத்தாட் கொள்ளப்பட்டு திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி, கந்தரனுபூதி போன்றவைகளைப் பாடிப் பிறகு கிளியாய் இருந்து திருவகுப்பு என்ற கவியை இயற்றும் அருளைப் பெற்றவர் ஆவார். அறிவிற்கும் அப்பால் அருணகிரியார் இறைவனது திருவருள் திறத்திலே அனுபவம் செறிந்தவராக விளங்கினார். ஒருவருக்கு நீதிகளைப் பலர் உரைப்பர். நண்பர்களானால் அதையே உரிமையோடு உரைக்கும் முறை வேறு, ஆசிரியரானால் விளங்க வைக்கும் முறை வேறு. ஆனால் காதலி தன் காதலனுக்கு நீதிகளை எடுத்துக் கூறினால் எப்படி இருக்குமோ அந்த முறையிலேதான் இன்பமும், நயமும் கொண்டு கசப்போ,

வெறுப்போ இல்லாது பாடியுள்ளதை அனுபூதி பாடல்களில் காணலாம். அனுபூதி பாடல்களில் உள்ள கருத்துகளை படிக்கும்பொழுது அவர்களையே அறியாமல் உயரிய இறை தத்துவங்களை உணர்ந்துகொள்ள இயலும். காதலி காதலனுக்குக் கூறுவது போல், சுவையும், பக்தியும் பொருந்திய கருத்தக்கள அருணகிரியார் பாடியிருப்பதை கந்தரனுபூதியில் பரக்கக் காணலாம். கந்தபிரான் செய்த உபதேசச் சிறப்பையும் அவனது திருவருள் பிரசாதத்தின் பெருமையும் பேசும் நூலாதலின் இந்நூலுக்குக் கந்தரனுபூதி எனப் பெயர் போந்தது. (அனுபூதி – அருட்பிரசாதம்) முருகப்பிரான் திருவடி தீட்சை செய்து, மௌன உபதேசம் செய்த பிறகே கந்தரனுபூதி எனும் இந்நூலை ஆசிரியர் இயற்றினார் என்பது ஆன்றோர்கள் கருத்து.

அருணகிரியார் தமது குறைகளை எடுத்துக் கூறியும், தாம் தவநிலையில் பெற்ற பேற்றினை எடுத்து ஓதியும், தாம் அடைந்த மௌன நிலையின் பெருஞ்சிறப்பை எடுத்துக் கூறியும், தான் பெற்ற இன்பத்தை மக்கள் யாவரும் பெற்று உய்யுங்கள் என உபதேசித்தும் அருளிச் செய்த நூலே கந்தரனுபூதியாகும். இந்நூலுக்கு உயிர்நிலைப் பாக்கள் ''ஆடும் பரி,'' ''கெடுவாய் மனனே'' எனத் துவங்கும் பாடல்களேயாம்.

அருணகிரியாரின் கந்தர் – அனுபூதி பாடல்களையும், பிற அனுபூதிமான்கள் அருளிய பாடல்களையும் பார்த்ததில் அனுபூதிமான்களுக்குள்ளே வேறுபாடு தோன்றாது போனாலும், அந்த அனுபவத்தைச் சொல்லுகின்ற முறையிலே வேறுபாடு இருந்தது. பொதுவாக எம்.ஏ., பட்டம் பெற்றவர்கள் யாவரும் ஒரே மாதிரியாகவா மாணவர்களுக்குச் சொல்லித் தருகிறார்கள்? அதனால் அவர்கள் பெற்ற கல்வி பட்டத்திலே குறைவு இல்லை. நன்றாகக் கற்றுத் தேர்ந்தவர்களேயாவர், படித்தவற்றைச் சொல்லித் தருவதிலேதான் வேறுபாடு உள்ளதை அறியலாம்.

அதைப்போன்றே அனுபூதிமான்களுக்குள்ளே, நல்ல உயர்ந்த அனுபவத்தை உலக மக்களுக்குச் சொல்ல வேண்டும் என்ற கருணை உள்ளம் இருந்த போதிலும் அதை நிறைவேற்றினவர்கள் மிகச் சிலரேயாவர். அத்தகைய சிலருள் உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கப்படுவரே அருணகிரிநாதர். ஒருவன் குக்கிராமத்தில் இருந்து பட்டணம் சென்று திரும்பி வந்ததும், தான் கண்டதைச் சொல்ல நினைக்கிறான். அங்கே வீடுகள் இருந்தன, வீதிகள் இருந்தன, மனிதர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று கொண்டிருக்கிறார்கள் என்றா சொல்வான், அதற்கு மாறாக அந்த ஊரிலே எவ்வளவு உயர்ந்த கோபுரங்களைக் கொண்ட ஆலயங்களையும், மாடிக் கட்டிடங்களையும், வீதிகளில் செல்லும் வாகனங்களையும், நகை ஆபரணங்கள் கடைகளைப்பற்றியும் தன் கிராமத்தில் காணாததை அல்லவா சொல்லுவான்! அது போன்றே நாம் எத்தனையோ நூல்களைப் படித்திருந்தாலும் கந்தர் அனுபூதியைப் படிக்கும்பொழுது, ஏனையோர் பாடிய பாடல்களில் உள்ள அரிய கருத்துக்களை படித்து அறிந்த போதிலும், அவற்றைப் பெரியனவாகப் பாராட்டாது, இக்கந்தரனுபூதியில் மட்டும் காணப்படுகின்ற அனுபவ துளிகளாகிய பாடல்களை காணலாம். இத்தகை உயர்ந்த பாடல்களைக் கொண்ட நூல் வேறு எங்கு உண்டு? என விம்மிதம் அடைவோம். அப்படி இன்றைய நாளில் விம்மிதம் அடைகிறோமோ, இல்லையோ, பெரியவர்கள் அப்படி விம்மிதம் அடைந்தார்கள். உதாரணத்திற்கு, பெரியவர்களுக்குள்ளே அனுபவசாலியும், இறைவனுடைய அருள் பெற்ற தவச் சீலருமாகிய தாயுமானவர் அப்படி விம்மிதம் அடைந்தார், அதைக் குறித்து அவர் பாடிய பாடல் ''ஐயா, அருணகிரியப்பா, உனைப்போல் மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்?'' என்பதாகும். இறைவனுடைய திருவருள் அனுபவம் பெற்ற அருணகிரியார் அந்த மாபெரும் அழியா அருட்பிரசாதத்தை எளிதில் நாமெல்லாம் பயனடையும்படி பாடி அருளிப்

போந்துள்ளார். அருணகிரிநாதர் உலகமக்களின் பொருட்டு மக்கள் செய்யும் குற்றங்களைத் தாமே செய்ததுபோல் இறைவனிடம் முறையிட்டுள்ளார். அதற்குப் பரிகாரமும் சொல்லியுள்ளார். இவர்கள் எல்லாம் வக்காளத்து பெறாத வழக்கறிஞர்கள் ஆவார்கள், பக்திமான்கள் உள்ளத்தில் கந்தரனுபூதி பாடல்கள் அழுத்தமாகப் பதியவே முருகனது திருக்கரத்திலே இருந்து அவன் சொன்னதைச் சொன்ன கிளியே அருணகிரியாவார் எனச் சொல்லி, மனதை ஒரு நிலைப்படுத்தவே ஆராய்ச்சியாளர்கள் கற்பனை செய்து அல்லது மனதில் தோன்றி யதைக் கூறி இருக்கலாமல்லவா?

அருணகிரிநாதர் இறைவனது பேரின்ப நிலையை அடைந்த பிறகு – பசு கரணம் மாறி, பதிகரணம் ஆன பிறகு பாடிய பாட்டே திருவகுப்பு எனும் நூலாகும். கந்தரனுபூதியை அருணகிரியார், கிளியாயிருந்து பாடியதற்கு எங்கும் குறிப்புகள் காணப்படவில்லை. மேலும் தான் மானுட தேகத்தில் இருக்கும் போதுதான் அனுபூதி பாடப் பெற்றது என்பதற்கு அவரது பாடலிலேயே ஆதாரம் உள்ளது.

*"அடைக்கலப் பொருளாம் நாயெனை அழைத்து*
*முத்தியதாம் அனுபூதி என் அருட்திருப்புகழ் ஓதுக*
*வேல்மயில் அருள்வோனே"*

எனக் கூறியதிலிருந்து அறியலாம். மேலும், பசுகர்ணம் மாறி பதிகர்கணங்களாக மாறிய பிறகு உலகின் சிற்றின்ப வர்ணனைகளையும், வறுமையையும் குறித்து பாடவாய்ப்பே ஏற்பட்டிருக்காது. ஆனால் திருவகுப்பு பாடியிருக்கலாம் எனக் கொள்வதற்கு ஆதாரம் அவரது வாக்கிலிருந்தே அறிய முடிகிறது. மேலும் தாம் மானுட தேகத்திலிருக்கும்போதே, பாடிய பாட்களில் இறவாத இன்ப அன்பை வேண்டி தனக்குச் சுகச் சொரூபம் அருள வேண்டும் என முருகனிடம் விண்ணப்பித்துள்ளதைக் காண

முடிகிறது (சுகம்=கிளி) திருவகுப்பு பாட ஆசைப்பட்டதற்கு அன்னாரது ''நிந்தனையில் பத்தர் வெட்சிமலர் தூவும் நின்பத யுகப் பிரசித்தி என்பென வகுத்துரைக்க நின்பணி தமிழ் த்ரயத்தை அருள்வாயே'' எனும் பாடலே திருவகுப்பு பாட ஒரு எடுத்துக் காட்டாகும். திருவகுப்பில் ஒன்றில்தான் சிற்றின் பவர்ணனையோ, உலக பந்த பாசங்களையோ சிறிதும் கலவாது, பேரின்ப நிலையில் பாடப்பட்டுள்ளதை அறியலாம். திரு வகுப்பில், வேளைக்காரன் வகுப்பில் ''உரை பெற வகுத்தருணை நகரினொரு பத்தனிடும் ஒளி வளர் திருப்புகழ் மதாணிக் கிருபாகரன்'' எனப் படர்க்கை வினையில் பாடியுள்ளதையும், ''ஏழையின் இரட்டை வினையாயதோர் உடற் சிறையிராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்'' எனவும் கூறியதிலிருந்தே அறியமுடிகிறது. ஒருவேளை இறைவனுடைய திருக்கரத்தில் இருந்து அனுபூதி பாடினார் என்று நம்புகின்றவர்களுக்கும் இருக்கலாம். ஆகவே அதை மேலும் ஆராயாது, அவர் பாடிய ஏனைய பாடல்களைக் காட்டிலும் திருவகுப்பு ஞானமணம் நிரம்பியதாக, இறைவனது செறிவை மிக மிக நன்றாக விளக்குவதாக இருக்கிறது என்பதை மாத்திரம் நாம் அறிந்து கொண்டாலே போதும். மானுட தேகத்திலிருந்தே பாடிய பாடல்களாகிய திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி போல கந்தரனுபூதியும் பாடி இருக்க வேண்டும். சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்ற பழமொழி ஒன்று உண்டு. அருணகிரியாகிய கிளிக்குத் தன்னிச்சையாகப் பேசத் தெரியாது. சொன்னதைத்தான் சொல்லும் கிளிப்பிள்ளை எனும் முது மொழிக்கேற்ப, முருகன் சொன்னதைத்தான் திருப்பிச் சொன்னது என்று கருதினால், கந்தரனுபூதியில் வரும் பாடல்களில் சிற்றின்பத்தைப்பற்றிய பாடல்கள் முருகன் கிளிக்குச் சொல்லி அதையே கிளி பாடியது எனக் கருதுவது சிறிதும் பொருந்தாது. கிளியாயிருந்து பாடின பாடல்கள் திருவகுப்பு எனக் கொள்ளலாம். முன்னம் அவர் பாடிய பாடல்களில் மனித உள்ளம்

இருக்கும். ஆனால் திருவகுப்பில் இறைவனே உள்ளத்தில் இருந்து நம்மைப் பாட வைத்தால் எவ்வாறு இருக்குமோ அதே போன்று அரிய தத்துவங்கள் எல்லாம் திருவகுப்பில் நிரம்ப இருப்பதைக் காணலாம். மழையின் காரணத்தால் காட்டாறுகள் பெருக்கெடுத்து ஓடும். சில நேரம் கழித்து வற்றி விடும். அதே போன்று சில பாடல்கள் நம் நாட்டில் எங்கும் முழங்கும், பின்னர் அவை இருந்து அடிச்சுவடுகள்கூட இல்லாமல் மறைந்து விடும். ஆனால் அனுபூதிமான்களில் அருணகிரியார் சிறந்து விளங்கி இறை அருளால் பாடி அருளிய ஞானப் பாடல்களாகிய கந்தரனுபூதி போன்ற செந்தமிழ் வெள்ளம் – கங்கை வெள்ளம்போல் என்றும் அழிவின்றிப் பொலிவோடு விளங்குவதை இன்றும் காணலாம்.

கந்தரனுபூதியில் அருணகிரியார் தம் அனுபவத்தை நிரம்பவும் தெளிவாகவும் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். மெய்ப்பொருள்பற்றி நாலு பாடல்களில் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். பாடல் எண்கள் 8,11,20,45 மனத்தை விளித்து அறிவுரைகள் 3 பாடல்களில் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். பாடல் 7,14,37 இந்த மூன்று பாடல்களும் பிறவி பிணிக்கு அரிய மருந்தாகும். இந்த 3 பாடல்களுக்கும் ஒரு முத்திரை வைத்தது போல் வாய் என்ற பதத்தை அல்லது பாடியுள்ளது பெருமைக் குரியது. கந்தரனுபூதியில் சிந்தனைக்குரிய பல அற்புத கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றைக் காணுவது அவசியம்.

தாம் அவதரித்த திருவருணைத் தலத்தைப்பற்றியோ, அன்னாருக்குத் திருப்புகழ் பாட வயலூர் பிள்ளையார் அனுக்கிரகித்தைப் பற்றியோ, முருகனே அருணகிரியாருக்குத் திருவாவினன்குடியில் ஜபமாலை தந்தருளியதைப் பற்றியோ, அன்னாரால் போற்றப்பட்ட முருகனது 6 திருப்பதிகளைப் பற்றியோ கந்தரனுபூதியில் எங்கும் குறித்து பாடாத போதிலும், நாகாசலம் எனும் திருச்செங்கோட்டை மட்டும் குறித்துப் பாடியுள்ளதின் உட்கருத்து விந்தைக்கு உரியதாக இருக்கும்.

இனி திருமால் மருகன் என மிக அழகாகவும் பெருமையாகவும் திருப்புகழிலும் கந்தரலங்காரத்திலும் திரு வகுப்பிலும் பல இடங்களில் இனிக்க இனிக்க நாராயணனுடைய பெருமைகளைப் பாடியிருந்த போதிலும் கூட அனுபூதியில் திருமாலைப்பற்றி ஒரு பாடலில்கூடப் பாடியதாகக் காணவில்லை. இதனையும் சிந்தனைக்குரிய கருத்தாகக் கொள்ள வேண்டும். குமரகுருபரனாகிய குகனைக் குருமூர்த்தமாகக் கொண்டலன்றி உண்மைப் பொருளை உணரமுடியாது என்று 13ஆவது பாடலாகிய ''முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகும் செயல் தந்து உணர்வென்றருள்வாய்'' எனத் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் உணர்த்தி விட்டார். இப்பாடலைத்தான் ஞானியார் சுவாமிகளும் தினமும் காலையில் எழுந்ததும் ஓதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

''நெஞ்சக்கனகல்லு'' எனப் பாடியுள்ளதை நோக்கின், நெஞ்சத்தைக் கனத்த கல்லுக்கு ஒப்பிடுவர். இக்கல் நெகிழ வேண்டுமானால், இறைவன் திருவருள் வேண்டும். இதைக் குறித்து வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய வாட்போக்கி கலம்பகத்தில், ''தழுவுமையால் முன்னும், தமிழிறை யால் பின்னும், தொழும் இறையால் மேலும் சுவடு எழும்; கீழ் எனும் குறைபோம் என் மனஞ்சேர் அமர்ந்தாய் அடி என்றால்'' இதன் கருத்து இறைவா! உமையைத் தழுவினதால் உடலின் முன்புறம் உனக்குத் தழும்பு ஏற்பட்டது. பாண்டிய அரசன் பிரம்பு கொண்டு உன் முதுகில் அடித்ததால் உன் பின்புறத்திலும் தழும்பு ஏற்பட்டது. அருச்சுனன் வில் கொண்டு உன் தலையில் அடித்ததால் உன் தலை மேலே ஒரு தழும்பு ஏற்பட்டது. உன் கீழ்புறத்தில் தழும்பில்லை எனும் குறை நீங்கி விடும், நீ என் மனமெனும் கல்லின்மீது வீற்றிருப்பாயானால் என்பதாகும். இதே கருத்தினை அருணகிரியாரும் கந்தரனுபூதியில் ''திணியான மனோசிலை மீது உனது தாள் அணியார் அரவிந்தம் அரும்புமதோ'' எனப்

பாடியுள்ள கவனிக்கற்பாலது. உலக மக்கள் யாவரும் பயனடையவே, சமரச நோக்குடன் பாடியதாகவே கருதுதல் வேண்டும். கந்தரனுபூதி பாடல்கள் அனைத்தும் சிந்தனைக்கும் வந்தனைக்கும் உரிய மந்திர நூலாகும் என்பதில் சந்தேக மேயில்லை. இந்தப் பாடல்கள் மட்டுமின்றி கந்தரனுபூதி எல்லாப் பாடல்களுமே அருணகிரிநாதர் தன் சுயநல நோக்கத்தின் அடிப்படையில் தன் மனத்தை நோக்கித்தான் அறிவுரை கூறிப் பாடினார் எனக் கொள்ளலாகாது.

கந்தரனுபூதி பாடல்களை முழுவதும் ஆராய்வதை விட ஒரு சில பாடல்களை ஆராய்வதே போதுமானதாகும்.

முதல் பாடல்,

*"ஆடும்பரி வேல்அணி சேவல் எனப்*
*பாடும் பணியே பணியாய் அருள்வாய்*
*தேடும் கயமாகமுகனைச் செருவில்*
*சாடும் தனியானைச் சகோதரனே..."*

என்பதாகும்.

இதன் கருத்தைச் சிறிது ஆராய்வோம்.

இதில் மயிலுக்கும் சேவலுக்கும் அடைமொழிக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் வேலுக்கு எந்தவித அடை மொழியும் கொடுக்கப்படவில்லை. பொதுவாக, நாட்டில் எல்லோராலும் அரசியலில் பாராட்டப்படும் மகாத்மா காந்தி, உயர்பதவி வகித்த நேருஜீ போன்றோர்கள் வானொலியிலோ தொலைக்காட்சிகளிலோ பத்திரிகைகளிலோ சொற்பொழிவாற்றும் நேரத்தில் இவர்களுக்கு எந்த அடைமொழியும் தராது எடுத்த எடுப்பிலேயே வெறுமனே அவர்களது பெயரையே நேர்முகமாக அறிவிப்பதைக் காணலாம். காரணம் இவர்களைப் போன்றவர்கள் பெயருக்கு முன் வழங்கும் அடைமொழிக்கு அப்பாற்பட்டவர்கள் என நினைப்பதே காரணம். மக்கள் இவர்களுக்கும் ஏனைய

தலைவர்களுக்கு கொடுக்கும் அந்தஸ்தைக் கொடுப்பார் களேயானால் வித்தியாசமின்றிப் போகும். அருணகிரியார் 600 ஆண்டுகளுக்கு முன்னரே இதனை நடைமுறையில் செய்து காட்டினராவார். தரத்தில் குறைந்த மயிலுக்கும் சேவலுக்கும் மட்டும் அடைமொழி தந்து, ஞானசக்தியாகிய வேலுக்கு அடைமொழி தராமலே தரத்தின் உயர்வினை உணர்த்திப் பாடியுள்ளார். அப்படி வேலுக்கும் அடைமொழி கொடுத்துப் பாடியிருந்தால் மற்ற இரண்டோடு இதனையும் ஒப்புவிப்பதாகி விடும்.

உதாரணத்திற்கு, திருத்தலம், திருக்கோயில், திருக்குளம், திருவாயில், திருஅலகு என்று கூறினபோதிலும் அவற்றிற்கு நாயகராகிய மூலப் பொருளுக்கு அடைமொழி தந்து திருவினாயகர், திருக்கபாலீஸ்வரர், திருமதி கற்பகவல்லி என அழையாது நேர்முகமாக வெறும் இறைவனின் திருநாமத்தை அறிவிப்பதுபோன்று கொள்ளுதல் வேண்டும். பரம்பொருளுக்கு அடைமொழியே தேவையில்லை, இறை அன்பின் ஈடுபாட்டினால் பெருமை குறைந்தவர்களுக்குத்தான் தங்கள் பெயர்களுக்கு முன்னும் பின்னும் அடைமொழிகள் தேவைப்படும். உதாரணம் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆண்டாள் போன்றவர்கள் பெயர் களுக்கு முன் திரு அல்லது திருமதி என்று கூறுவது இல்லை.

வேலைப்பற்றி தாம் பாடிய அனுபூதி 51 பாடல்களில் 25 பாடல்களில் வேலின் சிறப்பு வெளிப்படையாகப் பாடப் பட்டுள்ளது. திருப்புகழிலும் ''மந்திரவேல்'' என்றே கூறியுள்ளதால், அத்தகைய வேலின் சிறப்புப்பற்றி நிரம்பப் பாடியதிலிருந்தே கந்தரனுபூதி ஒரு மந்திர நூல் என வழங்குவதில் தவறு ஒன்றும் இல்லை.

மற்றொரு கருத்து ''வேலும் மயிலும் துணை'' எனும் திருமந்திரம் சைவ மக்கள் யாவர்க்கும் மறைப் பொருளாயிருக் கின்றது. சேவல் எனும் சொல்லுக்குத் துணை, காவல் எனப்

பொருள் உண்டு. கந்தர் – அந்தாதிப் பாடல் 15ல் ''திவாகரகன்ன'' எனத் தொடங்கும் பாடலில் ''மறலியிடாது உயிர்ச் சேவலுக்கே'' என பாடியுள்ளதைக் கவனிக்கலாம். ஆகையினால் இப்பாடலில் அணி சேவல் என்பதற்கு ஒப்பற்ற துணை எனப் பொருள் கொள்ளவும் இடமளிக்கிறது. இதனால் ஆடும்பரி வேல் ஒப்பற்ற துணை என்று, அதாவது வேலும் மயிலும் துணை எனப்பாடும் பணியே பணியா அருள்வாய் எனவும் பொருள் கொள்ள இடமளிக்கிறது.

அடுத்து ஒரு பாடல் (3)

*'வானோபுனல் பார்கனல் மாருதமோ*
*ஞானோதயமோ நவில் நான் மறையோ*
*யானோ மனமோ எனை யாண்ட விடந்*
*தானோ பொருளாவது சண்முகனே!''*

இப்பாடலின் பஞ்ச பூதங்களையும் முதல் சீரில் கூறிவிட்டு ''ஞானோதயமோ'' எனக் கூறியுள்ளது. ஆராயற்பாலது. எம்பெருமானின் திருவுருவம் முழுவதும் ஞானம்; அவன் ஞானச்சொரூபன் என்று பண்டைய பாடல்கள் கூறுகின்றது. திருப்புகழிலும் ''ஞானங் கொள் பொறிகள் கூடி'' என்றும் மற்றோர் பாடலில், ''சிவஞான முதே பசியாறி'' என்றும் மணிவாசகப் பெருமானால் மேலும் விரிவாக இதைப்பற்றிப் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். அத்தகைய ஞானம் மட்டும் இறைவனிடம் இருந்தால் போதாது. அந்த ஞானம் உலகத்துக்குப் பயன்பட வேண்டுமானால் அவன் அருளாலே அவன் தாள் வணங்கி எனப் பாடியுள்ளதற்கேற்ப அவனருளும் வேண்டும்.

எத்தனை ஈயக்கட்டியைக் கொண்டு உருக்கினாலும் அது களிம்பேறிய பாத்திரங்களின் மேல் பூச உதவாது. கொஞ்சம் நவரசப் பொடியைத் தூவினால்தான் உருக்கின ஈயம், பாத்திரத்தில் ஒட்டும். அதுபோன்று இப்பொழுது வெள்ளீயம்போல ஞானசொரூபமாகிய இறைவன் வந்து நம்மோடு கலந்து நிற்பதற்கு

அருளாகிய நவாச்சாரம் தேவைப்படுகிறது. அதுதான் அறிவுள்ளோர்கள், புலமையுள்ளோர்கள், அருளாளர்கள், ஞானிகள் போன்றோர் அருளிச் செய்த பாடல்களேயாகும். களிம்பேறிய பாத்திரத்திற்கு நிகரான மும்மலத்தால் அவதியுறும் ஆத்மாவிற்கு அருளாகிய நவரசப் பொடியைக் கொண்டு ஞானசொரூபமாக விளங்கும் பரமாத்வாகிய ஈயத்தோடு கலந்து இறுகும் வகையில் பரமசுகம் அடைய உதவும். அத்தகைய அருள் சிறப்பைக் கந்தரனுபூதி போன்ற பாடல்களில் பரக்கக் காணலாம். மற்றொன்று இப்பாடலில், ''எனையாண்ட இடம் தானோ'' எனக் கூறியுள்ளதை திருவண்ணாமலைத் தலமாகக் கொள்ளவும் இடமளிக்கிறது. ஆனால் இதைத்தான் குறிப்பிட்டிருப்பார் என உறுதியாகக் கொள்ள முடியாது. ஏனெனில், அருணகிரியாரை முருகன் பல இடங்களில் ஆட்கொண்டிருக்கிறார் என்பது இவரது பாடல்களிலிருந்தே அறிய முடிகிறது.

அனுபூதி பாடல் :

*'' யாமோதிய கல்வியும் எம் அறிவும்*
*தாமே பெற வேலவர் தந்ததனால்*
*பூமேல் மயல்போல அறமெய்ப் புணர்வீர்*
*நாமேல் நடவீர் நடவீர் இனியே''*

முதற்கண் இப்பாட்டின் துவக்கத்திலேயே 'யான் ஓதிய கல்வியும் என் அறிவும்' எனப் பாடாது. யாம் என்று கூறி அதிலே தம்மையும் ஏனையரோடு சேர்த்துக் கொண்டு பாடியுள்ளது மிகவும் போற்றத்தக்கது ஒன்றாகும். இப்பாட்டின் கருத்தினை எளிதில் புரிந்துகொள்ளக் கீழே கொடுக்கப்பட்ட நிகழ்ச்சி உதவும். நாட்டில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் வருந்துவதைக் கண்ட அந்நாட்டு அரசன் மக்களுக்குத் தேவையான பஞ்சைத் தந்து நூல் நூற்க கைராட்டினத்தையும் கொடுத்து அதன் மூலமாய் நூற்ற நூலுக்கு ஏற்ப ஊதியம் வாழ வழிச் செய்ததைப்போல், இறைவன் கவிபாடுவதற்குப் போதுமான அறிவைத் தருகிறான். மனம் நாக்கு ஆகிய கருவிகளைத் தந்து உதவுகிறான். நம்முடைய கல்வி

ஞானத்தைக் கொண்டு அவனது புகழைப் பாட நமக்கு நாவையும் கொடுத்ததை உணர்தல் வேண்டும். இதைக் குறித்த கருத்தினைக் கொண்ட பாடல்.

*"பஞ்சின் சொல்லால் பனுவல் இழையாக*
*எஞ்ஞாதகையே வாய் ஆகக்கதிரே மதியாக*
*மையிலா நூல் முடியுமாறு."*

பெரும்பாலோர் கல்வியையும் அறிவையும் கொடுத்த இறைவனைப் பாடாது யார் யார் பெயரிலோ திரைப்படங்களுக் காகவோ பணத்துக்காகவோ பாடல் புனைகிறார்கள். இறைவன் மூலம் பெற்றதை அவனிடமே ஒப்புவிக்க வேண்டும். அதன் மூலம் அருளாகிய ஊதியத்தைப் பெறுவதே சிறந்ததாகும். யாமோதிய கல்வியும் – இறைவன் கலவியும் அறிவும் நமக்கு தந்து நாவினைக் கொண்டு அவனது புகழ்நூலை நாவினால் பாடினால் கல்விச் செருக்கு குறையும் என எண்ணியே தாமே எனக் கூறினார். கல்வி செருக்கு வந்தால், சுகர், நக்கீரர் போன்றோர் அனுபவித்த துயரங்களை நினைவில் கொண்டு, அவ்விதம் துயருறாமல் இருக்கவே எம்மையோ பாடும் என உணர்த்தி அருளினார். அருணகிரியார் ''யாம் ஓதிய கல்வியும்'' என்று தம்மோடு உள்ள புலவர்களையும் தன்னோடு தழுவிக் கொண்டு கூறும் கருணையை எவ்வாறு புகழ்வது?

மற்றுமோர் அனுபூதி பாடலாகிய 'குறியைக் குறியாது குறித்தறியும் நெறி' எனும் பாடலில் புதைந்து கிடக்கும் அற்புதக் கருத்தைச் சிறிது ஆராய முற்படுவோம்.

இறைவனுடைய திருவுருவத்தை 'குறி' என்று கூறியதில் குறிக்கப்படாமல், சுட்டிக்காட்டப் படாமல், பொறிகளுக்கு அகப்படாமல், அறிவுக்குத் தட்டுப்படாமல் உள்ள பரம்பொருளை நினைப்பதற்குரிய அடையாளம்தான் அது. அதனால் கருத்தைக் கொண்டு அதன் பொருளைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது நமக்குப் புலனாகிறது. உதாரணத்திற்கு ஒரு சிறுகோட்டை

வெறும் கோடும் என்கிறோம். பொருள் ஏதுமில்லை. அதே கோட்டையே கணக்கு போடும்போது இரண்டு எண்களுக்குப் இடையே வந்தால் அந்தக் கோட்டிற்கு 'கழித்தல்' எனப் பொருள் அமைந்து விடுகிறது. கணக்கைப்பற்றித் தெரியாதவனுக்கு அது வெறும் கோடாகவே இருக்கிறது. ஆனால் அறிவுடையவனுக்கோ அது கழித்தலக் குறிப்பது என உணர்வு உண்டாகும். மேற்சொன்ன இருவகையினரும் கண்ணால் காண்பது கோட்டைதான். வெறும் கண்ணாலே கண்டவன் வெறும் கோடாகவே நினைப்பான். அதே கோட்டையே கருத்தினால் கண்டவன் பொருள் காணமுறபடும் போது அதன் சிறபபு தெரியும். அதுபோன்று கல்லாகவும், செம்பாகவும் உள்ள இறைவனது திருவுருவங்கள் உரிய இடத்தில் உரிய வகையில் நிறுவப்பெற்றால் தனியான சிறப்பைப் பெறுகின்றன. அதனை இறைவன் வடிவாகப் பாவித்து அதில் குறிக்கப் பெறும் உண்மைகளை உணரும்போது நல்ல பலன் உண்டாகிறது. மற்ற ஏனையோர் பார்வைக்கு அது சிற்ப வேலைப்பாடாகவே தோன்றும். அதன் பாவனையிலேயே சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகப் பெருமான் போன்றோர் தலந்தோறும் சென்று இறைவனது காட்சி கண்டு மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்கள். கல்லினாலும், செம்பினாலும் அமைத்த உருவத்தை அதன் அளவிலே கண்ணால் மட்டும காண்பது என்பது ''குறியைக் குறித்தலாகும்.'' அதையும் கடந்து அவ்வுருவத்தில் இறைவனைப்பற்றி எண்ணத்திலே நிற்றல் ''குறியாது குறித்தல்'' ஆகும்.

மேலும் ஒரு விளக்கம் :

ஒரு பொறியியல் அதிகாரி மின்சாரத் துறையில் பணி செய்யும்போது பழைய நண்பரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருக்கும்போது எல்.கே.ஜி. அல்லது பண்டைய முறையில் அரிச்சுவடி படிக்கும், நண்பருடன் வந்திருந்த சிறுபையன் (அதாவது வெறும் எழுத்துக்களை மட்டும் படிக்கும் பையன்) இவர்களுக்குத் தெரியாமல் உள்ளே இருக்கும் இயந்திரங்களைப்

பார்க்கச் சென்று அங்கே தொங்கவிட்டிருந்த அட்டையை நோக்கிப் பார்த்தான். அட்டையில் கொட்டை எழுத்தில் சிகப்பு மையினால் ''அபாயம்'' என எழுதப்பட்டிருந்ததைக் கண்ட சிறுவன், அதைப் பார்த்து, அதில் உள்ள எழுத்துகளை, அபாயம் என்று படித்துக் கொண்டிருந்தான். பொறியியல் அதிகாரியிடம் பேசிக் கொண்டிருந்த பையனின் தந்தை, உடனே தன் சிறுபிள்ளை ஞாபகம் வரவே உள்ளே சென்றதும் இயந்திரங்களின் பக்கத்திலிருந்ததைக் கவனித்துவிட்டு குழந்தை கையைப் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டு வந்துவிட்டார். தன் குழந்தை அங்குள்ள இயந்திரங்களைத் தொட்டு ஏதாகிலும் விபத்து நேரிடக் கூடாதே என்ற அச்சம். 'அபாயம்' என்று போட்டிருந்த அட்டையைக் குழந்தையும் பார்த்தான். அவன் தந்தையும் பார்த்தான். ஆனால் அந்த அட்டையை இருவரும் பார்த்தவிதம் வேறு. குழந்தையால் அந்த எழுத்துகளைக் கூட்டிச் சொல்லாகப் பார்க்க முடியவில்லை. தந்தையோ எழுத்துகளின் கூட்டமாகப் பாராது அதைச் சொல்லாகப் பார்த்தான். இருவரும் பார்த்தமுறை வேறு. தந்தையோ அந்த அட்டையில் வாசம் எதற்காக எழுதிக் கட்டப்பட்டிருந்ததோ அதன் கருத்தை உணர்ந்தார். அதனால் குழந்தை காப்பாற்றப்பட்டது. தந்தை மகன் கண்ட எழுத்துகளையே சொற்களாகப் பார்த்ததால் அதன் பொருளை உணர முடிந்தது. அந்த அட்டையில் எழுதியுள்ள எழுத்துகளை மட்டும் பார்த்தான் சிறுவன். சிறுவனின் தந்தையோ அதைக் குறியாது, குறித்ததோடு அறியவும் செய்தார். ஆகையினால் முதலில் இறைவனுடைய வடிவத்தைக் குறிக்க வேண்டும். ஆனால் அந்த வடிவத்திலேயே குறித்து நில்லாமல் அதற்குமேல் போக வேண்டும். அதுவே 'குறியாது குறித்தல்.' இன்னும் அதற்கு மேல் உணர்ந்து அனுபவம் பெறுவதுதான் ''குறியாது குறித்து அறியும் நெறி'' எனப்படும் நிலையாகும். இராமாயணம் வாயிலாக சடாயுவின் தமையன் அனுமானுக்குச் சீதையைக் கொண்டுபோன விவரத்தைக் கூற அதையே கருத்தில் கொண்டு, அவன் சொன்ன திக்கை நோக்கியே

இலங்கைக்குச் சென்றதை ''குறிப்பில் குறிகாணும் மாருதி'' என ''உடுக்கத்துகில்'' எனும் பாடலில் அருணகிரியார் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

இதனால் இதுகாறும் கூறின கருத்துகள் யார்வர்க்கும் விக்கிரக அவசியம்பற்றி ஓரளவு உணர முடிந்திருக்கும். நம் புழக்கத்தில் காகிதத்தில் அச்சடித்த பணநோட்டு என்பது (On Demand or pronote) போன்றது. உலோகத்தால் ஏற்படுத்திய காசுக்குத்தான் நாணயம் எனும் சொல் முதன் முதலில் வழங்கலாயிற்று. அது எவ்வாறு எவ்விடத்தும் எக்காலத்தும் யாவரிடத்தும் தன் மதிப்பை மாற்றிக் கொள்ளாதோ, அதேபோல் இன்றும் மக்களிடம் நாணயமாக நடந்துகொள் எனக் கூறுகிறோம். பணநோட்டுக்கும் நாணயத்துக்கும் வித்தியாசம் இல்லாதிருந்த போதும், நாணயத்தைப் பெற பண நோட்டுக்களே உதவிடும். ஆகையால் பண நோட்டையே அதிகமாக வைத்துக் கொள்கிறார்கள். இந்தப் பணநோட்டு, பணத்தைக் குறிக்கும் அடையாளம் அல்லது குறி. அதுபோலவே இறைவனைக் குறிக்கும் அடையாளங்கள் விக்ரங்களாகும். குறி என்பதற்கு நாமம் அல்லது சின்னம் எனும் பொருள் உண்டு. உருவமும் பெயரும் இல்லாத ஒருவனுக்கு உருவமும் பெயரும் வைத்து வணங்குகிறோம். அவை இறைவனை நினைவூட்டும் அடையாளங்கள், ரூபாய் நோட்டைப் போன்றே விக்ரகங்கள் இறைவனாகவே எண்ணி வழிபடுவதற்குரியனவாகும். அவனருளாலேயே கண்ணாரக் கண்ட பெரியோர்கள் நமக்கு அவற்றைப்பற்றிச் சொன்னார்கள். அவற்றையேதான் இன்று வழிபட்டு வருகின்றோம். இதனையே அப்பர், ''உயிரா வணம் இருந்து உற்றுநோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி'' என்று வெகு சிறப்பாகப் பாடியுள்ளார். அதனைக் கருத்தில் கொண்டே அருணகிரியார் திருப்புகழ் பாடல் ஒன்றில் ''உள்ளக்கண் நோக்கும். அறிவூறி உள்ளத்தை நோக்க – அருள்வாயே'' என்பதாகக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம்.

உருவ வழிபாடு அவசியமா எனக் கேட்போருக்கு ஒரு பரம்பொருளை வழிபடுவதற்காகவே அவனுடைய அடையாளங் களை அவனருளாலே கண்ணாரக் கண்டு அனுபவித்த பெரியோர்கள், நமக்கு அவற்றினைப்பற்றி விளக்கம் அளித்துள்ளார்கள். அத்தகு அடையாளங்களின் அடிப்படையிலே தான் உருவங்களை அமைத்து வணங்குகிறோம். அப்பொழுது நாம் அப்பரம்பொருளை வணங்குவதாகவே பாவித்து அன்பு செய்ய வேண்டும். இதனை விளக்குவதே மேலே சொன்ன கருத்துகளாகும். அரசாங்கம் வெளியிடும் நோட்டைப் பார்த்தால் அதில் அச்சிடப்பட்டுள்ள வாசகத்தை நோக்கில் "On Demand" என்று எழுதப்பட்டுள்ளதைப் பார்க்கலாம். இதுபோன்றே பக்தர்கள் இறைவனைக் காண, பண நோட்டுக்களைப் போன்று தேவாரம், திருவாசகம், திருப்புகழ், பிரபந்தம் போன்றவைகளை மக்களுக்கு அளித்து, அதன் வாயிலாக நாணயமாகிய இறைவனைக் காணும்பொருட்டு ("I Promise to pay") என்று பணநோட்டில் எழுதியுள்ள வாசகத்தைப் போன்று. தங்களது பெயர்களைப் பதித்து வழங்கியுள்ளனர். இதனால்தான் நம் முன்னோர்கள் செல்வத்தை நாணயமாகத்தான் வழங்கினர். பிற்காலத்தில்தான் காகிதத்தில் அச்சடித்து வழங்கலாயிற்று இதைக் குறித்த காந்தியடிகள் 'வாக்குறுதி' ஆண்டவனுக்கு நாம் கொடுக்கும் (Promissary Note) க்கு ஒப்பாகும்'' எனக் கூறியுள்ளார். விக்ரக ஆராதனை பண்ணுவது தேவ நிந்தனை என்பர் சிலர். விக்கரம் மூலமாக ஆராதிப்பது சிறந்ததொரு சாதனம் என்பர் சிலர். இதன் மூலமாக நமக்கு ஓர் உண்மை விளங்குகிறது. ஒருவருக்கு உடலுக்கு அமிர்தம் போன்ற உணவானது, மற்றொருவருடைய உடலுக்கு ஏற்றுக் கொள்ளாது கேட்டை விளைவிக்கலாம். அதேபோல் அவரவர் நிலைக்கேற்ப சமயங்களையோ மன ஒருமைப்பாட்டையோ குறிக்கோளாகக் கொண்டு முன்னேற்றம் அடைவது மாந்தர்க்கு அவசியம். அதனால் ஒரு சாரரின் சமயமும், உணவு வகைகளும் மற்றொருவரின் கொள்கைக்கு அளவை

ஆகாது. உடல் உறுப்புக்கு ஏற்றவாறு உணவு பலதரப்படுகிறது. ஒரு சாராரின் சமயமும் மற்றோர் சமயத்துக்கு அளவை ஆகாது. இதுவரை கொடுத்த விளக்கங்கள் ''குறியைக் குறியாது குறித்தறியும் நெறி'' என்னும் பாடலுக்கு என்றே கொள்ளவும். அதனால் சமயங்களைச் சீர்தூக்கிப் பார்ப்பது எளிதல்ல. அதன்படி அதே போன்று அவரவர் நிலைக்கேற்ப சமயக்கொள்கைகளும் பலதரப்படுகிறது.

இதனை உணர்த்துவதே,

*" குறியைக் குறியாது குறித்து அறியும்*
*நெறியைத் தனிவேலை நிகழ்த்திடலும்*
*செறிவற்று உலகோடு உரைசிந்தையும் அற்று*
*அறிவுஅற்று அறியாமையும் அற்றதுவே!"*

இன்னுமொரு பாடல் – ''மெய்யேயென வெவ்வினை வாழ்வை உகந்து.'' உலகில் மக்கள் பெரும்பாலும் இவ் வாழ்க்கையே நிரந்தரம் என எண்ணி, இறைவனால் கொடுக்கப்பட்ட ஆயுள் நாளில் கல்விச் செல்வத்தால் ஆன்றோர்களின் உரைகளைக் கற்றுணராது புறவாழ்க்கையே விஞ்ஞானத்தால் வகுத்துக் கொண்டதுபோல் அகவாழ்க்கையில் ஈடுபட்டு வாழ வழிவகுத்துக் கொள்ளத் தவறிவிட்டனர். ஒருவன் புகைவண்டியில் இருக்கையோடு படுக்க நல்ல மெத்தை கொண்ட முதல் வகுப்பில் பிரயாணம் செய்யும்போது, அதே வண்டியில் பிரயாணம் செய்யும், மற்றுமுள்ள நண்பர்களிடம் பேசிவிட்டு இரவு வந்ததும் தன் படுக்கையில் சென்று படுத்துத் தூங்குகிறான். அதனால் வசதியாயுள்ளது என்று அதிலேயே இருந்து விடுவானா? இருந்தாலும் அதிகாரிகள் இருக்கத்தான் விடுவார்களா? எந்த ஊருக்கு போகப் பயணச்சீட்டை வாங்கியுள்ளானோ அதுவரையில் தன் பயணம் முடிந்ததும் அவன் இறங்க வேண்டும், இறங்கும் போது, ''ஐயோ இந்தச் சுகமான முதல் வகுப்பை விட்டு இறங்க வேண்டி இருக்கிறதே?''

என்று வருந்த மாட்டான், அவ்வாறே முன் செய்த வினைப்பயனால் வந்த வாழ்வில் அந்தத் தேகம் உள்ளவரை நேர்மையாகவும் அன்பாகவும் நடந்து எந்தச் சமயத்திலும் இந்தத் தேகத்தையும் இதனோடு சார்ந்த சுகதுக்கங்களையும் விட்டு விட சித்தமாக இருக்க வேண்டும். நிலைபேறுடையதாகக் கருதி மகிழ்ந்து உழலாமல் மனத்தை ஒருநிலைப்படுத்தி வாழத் தயாராகப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். இதற்கு ஒரு பழமொழியும் உண்டு. ''எண்ணெய் உள்ளவரை தீபம், வினை உள்ள வரை தேகம்'' என்பதாகும்.

இன்னொரு பாடல் :

***"கூகாஎன என்கிளை கூடி அழப்போகா வகை"***

இந்த அழியக்கூடிய உடம்பாகிய வீட்டில் நாம் வாழும் போதே இறப்பு எனும் வேதனையால் அவதியுறாவண்ணம், இறைவன் எழுந்தருளி வந்து காப்பாற்ற வேண்டும். அவ்விதம் வேண்டிக் கொண்டது, கந்தரலங்காரம்.

***"தெய்வத் திருமலை செங்கோட்டில் வாழும் செழுஞ்சுடரே"***

எனும் பாடலில், அங்ஙனம் செய்தால் உனை மறக்க மாட்டேன். இந்த உடலை எப்படி வளர்த்துக் காப்பாற்றி னாலும் நிச்சயம் ஒரு நாளைக்கு அழிந்து விடும் என்பதை அறிவிக்கவே இந்த அல்லலை நீக்கி நான் உடலை உதறிவிட வேண்டும் என இறைவனிடம் வேண்டிக் கொள்கிறார். அதனால், ''உனது கருணையை நான் என்றும் மறவேன். கூகா என அழும் என் சுற்றத்தாரும் ஏனையோரும் அழாது, போகா வகையை எனக்கு அருள வேண்டும்'' என்பதே இப்பாடலின் கருத்து. இதனைக் குறித்து பட்டினத்தடிகள் வாழ்நாளில் நிகழ்ந்தததை உங்களுக்கு இது சமயம் நினைவுப்படுத்துவது சாலப் பொருந்தும் என நினைக்கிறேன்.

ஒரு மரணவீட்டில் எல்லோரும் இறந்தவரை சுற்றி அழுது கொண்டிருந்ததைப் பார்த்துப் பட்டினத்தடிகளும் அவர்களோடு சேர்ந்து அழுதார். இது அங்குள்ளோருக்கு வினோதமாக இருந்தது. உறவினர்கள் இவரைப் பார்த்து நீங்கள் ஏன் அழுகிறீர்கள் எனக் கேட்டதற்கு, பட்டினத்தார் ''நான் இறந்தவருக்காக அழவில்லை, இவ்வளவு அறிவீனர்களாக நீங்கள் இருப்பது குறித்து உங்களுக்காக அழுகிறேன். செத்த பிணத்திற் காகச் சாகப்போகும் பிணங்கள் அழுவது மூடத்தனம் அல்லவா? அழுகிற உங்களுக்கு மட்டும் சாவு இல்லையா? ஜனனம் – மரணம் என்பது நிகழ்ச்சிகளாகும். துக்கம், ஆனந்தம், இன்பம், துன்பம் என்பது அதன் அனுபவம். மரணம் என்பது தற்காலிகமானது, அது உடம்பும் உயிரும் பிரிந்து போகும் நிலை.

எது அழிவற்ற ஒன்றோ அதுவே மெய்ப்பொருள், சத்தியமாகிய மெய்ப்பொருளைத் தேடுவதே வாழ்வின் நோக்கமாக இருக்க வேண்டும். மரணம் எனும் சம்பவத்தைச் சம்பவமாகப் பாராது அதன் உண்மை என்ன என்று தேட ஆரம்பித்தால் மெய்ப்பொருள் பிறக்கும். இதைத்தான் அருணகிரியார் தமது பாடலில் மெய்ப்பொருள் அறியும் திறனை இறைவன் அளிக்கவேண்டும் எனக் கூறி உள்ளார். சாவுக்கு அபழுவது என்று வைத்துக் கொண்டால், எத்தனை பேருக்கு அழுவது, அப்படி அழுவதால்தான் என்ன பயன். இறந்தவர் உடனே எழுந்து விடுவாரா? அப்படியே உயிரரோடு வந்தால்தான் நமக்கு என்ன நன்மை விளையப் போகிறது. ஆகவே நன்கு ஆராய்ந்து மெய்ப்பொருளை நாடி, பக்தியும் ஞானமும் பரவிடும் மார்க்கங்களை அனுதினமும் உணர்ந்து, கண்மலராலும், மனமலராலும், கைம்மலராலும் துதி செய்து வருவோமாக.

மற்றுமொரு பாடல் :

*"கார்மாமிசை காலன்வரில் கலபத்தேர் மாமிசை வந்து எதிர்ப்படுவாய்."*

மாணவன் விடியற்காலையில் எழுந்து படிக்க நினைத்துக் காலை 5 மணிக்கே கடிகாரத்தில் அதாவது அலாரம் முள்ளைத் தள்ளி வைக்கிறான். தான் இரவு 10 மணிக்குப் படுக்கைக்கு போகும் முன், கடிகாரத்தில் உள்ள முள்ளை காலை 5 மணிக்குப் பொருத்தி வைக்கிறான். அப்போது அலாரம் அடிப்பதற்கு முன்னால் இரவு 10 மணிக்கு ஏன் திருப்பி வைக்க வேண்டும் என்று நாம் கேட்கலாமா? அவனுக்குக் காலை 5 மணிக்கு அலாரம் அடிக்க வேண்டுமானால் தூங்கப் போகும் தருணத்தில் கடிகார முள்ளை முன்கூட்டியே பொருத்தி வைக்க வேண்டுமென்று அவன் விரும்புவதை, முள்ளை பொருத்தி அமைத்ததிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். அப்படியே எப்போதோ வரும் காலனை முன்கூட்டியே (அப்போதே) நினைத்துத்தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆதலால் காலனை மட்டும் அறிந்திருந்தால் மட்டும் போதாது. காலனது கொடுமையும் மற்றும் மேலான காலகாலனையும் உடன் நினைக்கச் செய்யவே கடிகாரத்தில் அலாரம் ஒலிக்கும் முள்ளை பொருத்தி வைப்பதுபோல் நம் முன்னோர்கள், வாழ்நாளில் தேவாரம், திருப்புகழ் போன்ற முள்ளை முன்கூட்டியே மனதாகிய கடிகாரத்தில் பொருத்தி வைக்க வழிகாட்டியுள்ளார்கள். காலத்தை எல்லோருக்கும் உணர்த்த சூரியன் பயன்பட்டாலும் அவனது மகன் எமனோ வரப் போகும் காலத்தை யாவர்க்கும் தெரிவிப்பதில்லை. ஆகையால் முருகனுடைய கையில் உள்ள வேலாயுதம் உதவ, 3 கரணங்களாலும் சீலத்தை மெள்ளத் தெளிந்தறிவார் சிவயோகிகளே காலத்தை வென்றிருப்பார்'' எனக் கந்தர் அலங்காரப் பாடல் ஒன்றில் அறிவுறுத்தி உள்ளதைக் கவனிக்கலாம்.

சிவபெருமானே மணிவாசகருக்குக் குருவாகக் காட்சி அளித்ததும், நாயன்மார்களை எமனது பிடிக்கு ஆளாகாது வலிய காட்சி தந்து ஆட்கொண்டதும், மெய்ப்பொருளை நாடி வாழ்ந்ததேயாகும். இவைகள் புராண வாயிலாகக் கேட்டறிந்த போதிலும், அண்மையில் திருமுருக கிருபானந்த வாரியார்

சுவாமிகளையும் முருகப்பிரான் அந்த மறலியிடம், நமக்கு உகந்த, மனிதன் – நமது அன்பன் என மொழிந்து ஏனையோர்போல் மண்ணிலே இறவாமல் இயற்கைக்கு மாறாக விண்ணிலேயே அஞ்சல் என வலிய வந்து ஆட்கொண்டார். அன்னார் இறுதி மூச்சு வரை திருப்புகழின்மேல்கொண்டிருந்த மெய்ப்பொருளின் ரகசியமேயாகும். இச்செய்தி இன்றைய விஞ்ஞான உலகிலும் சரி மெய்ஞ்ஞான மார்க்கத்திலும் சரி, கேட்டிராத ஓர் அற்புத நிகழ்ச்சியாகும்.

கந்தர் அனுபூதியில் இன்னுமொரு பாடலின் நயம் காண்போம்.

*" செவ்வான் உருவில் திகழ்வே லவன்அன்று*
*ஒவ்வா ததென உணர்வித் ததுதான்*
*அவ்வா றறிவார் அறிகின் றதலால்*
*எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே!"*

**சுருக்க உரை :**

முருகவேள் உணர்த்திய ஞானோபதேச நிலையை அனுபவிக்கலாமே ஒழிய, பிறருக்கு எடுத்துச் சொல்ல இயலாது. இக்கருத்தினைத் தழுவியே, ஏனைய புலவர்களும் சுட்டிக் காட்டியுள்ளதைப் பார்ப்போம்.

*" அதுவானால் அதுவாவர் அதுவே சொல்லும் "*

(தாயுமானவர்)

**கருத்து :**

அவரவர்கள் அனுபவத்தாலே தெரிந்துகொள் வேண்டுமேயன்றி, பிறருடைய முயற்சியால் ஒருவர் பெறமுடியாது. என்பதாகும். மேலும் இதே கருத்தினைத் திருமூலர் கையாண்டுள்ளதைக் கவனிக்கலாம்.

*" மகளுக்குத்தாய், தன் மணாளனோடு ஆடியசுகத்தைச்*
*சொல்லெனில் சொல்லுமாறு எங்ஙனே!"*

மதுரகவி ஆழ்வார், சடகோபரையே குருவாக ஏற்று, அவரிடம், ''செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் அது எத்தைத் தின்று எங்கே கிடக்கும்'' என வினவியதற்கு, ''அது அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'' என்பதாகப் பதிலளித்தையும் இங்கு ஒப்பிட்டுப் பார்ப்பது சிறப்பாகும். சடகோபர் கூறியதின் உட்கருத்தை வார்த்தைகளால் சுட்டிக் காட்டுவது அவ்வளவு எளிதல்ல என்பது புலனாகிறது.

கந்தர் அநூதி ஆசிரியர், தாம் பாடிய திருப்புகழிலும் கந்தரலங்காரத்திலும் விரிவாகப் பாடியுள்ளதைக் காண்போம்.

திருப்புகழ் பாடல்

*'' வாசித்துக் காணொணாதது*
*பூசித்துக் கூடொ ணாதது*
*வாய்விட்டுப் பேசொ ணாதது – நெஞ்சினாலே,*
*மாசர்க்குப் தோணொணாதது*
*நேசர்க்குப் பேறொ ணாத்து*
*மாயைக்குச் சூழொ ணாதது – விந்துநாதம் ;*
*ஓசைக்குத் தூர மானது*
*மாகத்துக் கீற தானது*
*லோகத்துக் காதி யானது – கண்டுநாயேன்*
*யோகத்தைச் சேரு மாறுமெய்ஞ்*
*ஞானத்தைப் போதி யாயினி*
*யூனத்தைப் போடி டாதும யங்கலாமோ?''*

முதல் 3 சீர்களில் முருகன் உணர்த்திய ஞானோபதேச நிலை எத்தன்மையது என்பதுபற்றிக் கூறியள்ளதை ஒப்பிட்டுப் பார்ப்பது சிறப்பாகும்.

திருப்புகழ் பாடல் 'ஓலமறைகள் அறைகின்ற' எனத் துவங்கும் பாடலின் முதல் 3 சீர்களில் பாடியுள்ளது கீழே கொடுக்கப்பட்டுள்ளதைக் கவனிக்கலாம்

*'' ஓல மறைகள் அறைகின்ற வொன்றது*
*மேலை வெளியிலொளிரும் பரஞ்சுடர்*

*ஓது சரியைக் கிரியையும் புணர்ந்தவ – ரெவராலும்*
*ஓது அரிய துரியங் கடந்தது*
*போத அருவ சுருபம் ப்ரபஞ்சமும்*
*ஊனுமுயிரு முழுதுங் கலந்தது. சிவஞானம் ;*
*சாலவுடையதவர் கண்டுகொண்டது*
*மூலநிறைவு குறைவின்றி நின்றது*
*சாதிகுலமுமில தன்று...''*

இத்தகு அரிய ஞானோபதேச நிலையைக் குறித்து எவ்வாறு அடியேனால் பகர முடியும் என்கிறார் ஆசிரியர் அருணகிரியார். இனி, கந்தர் அலங்காரத்தில் இதே கருத்தினை அருணகிரியார் பாடியுள்ளதைச் சிறிது ஆராய்வோம்.

**கந்தர் அலங்காரம்**

*'' வேலே விளங்குகையான் செய்யதாளினில் வீழ்ந்திறைஞ்சி*
*மாலே கொள விங்ஙன் காண் பதல் லான்மன வாக்குசெய*
*லாலே யடைதற்கரிதாய்அ ருவுருவாகியொன்று*
*போலே இருக்கும் பொருளை எவ்வாறு புகல்வதுவே!''*

அருவுருவாகி ஒன்றே போலே இருக்கும் அப்பரமானந்த பொருளை எவ்வாறு எடுத்துச் சொல்ல இயலும் என்று முருகனிடமே முறையிடுகிறார். மேலும் ஒரு கந்தர் அலங்காரப் பாடல் :

*'' போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்புமுள்ளும்*
*வாக்குமடை வடிவு முடிவுமில்லாதொன்று வந்து வந்து*
*தாக்கும் மனோலயம்தானே தரும் எனைத் தன்வசத்தே*
*ஆக்கும் அறுமுக வாசொல்லொணாதிந்த ஆனந்தமே!''*

இப்பாடலின் இறுதியிலும், அனுபூதிப் பாடலில் பாடியுள்ளதைப்போல், அந்த ஞானோபதேசத்தை எவ்வாறு சொற்களால் வடிவமைத்துக் கூறப்படும் என்றது ஈன்று உணரற்பாலது.

அருணகிரியாரது அனுபூதிப் பாடலின் கருத்தை யொத்தே, அப்பரடிகள் திருவினாத்தாண்டகம் – பதிகத்தில் – 10–வது செய்யுளில் பாடியுள்ளதை மேற்கோளாக ஒப்பிட்டுப் பார்ப்போம்.

*" மைப்படிந்த கண்ணாளுந் தானும் கச்சிமயானத்தான்*
*வார்சடையான் என்னினல்லான்*
*ஒப்புடையனல்லன் ஒருவனல்லன் ஒரூரனல்லன் ஒருவமனில்லி*
*அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்*
*அவனருளே கண்ணாகக் காணில் அல்லால்,*
*இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்*
*இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே!"*

அப்பரடிகள், திருப்பூவணம் திருத்தாண்டகத்தில் 3–வது செய்யுளில் மணிவாசகரைப்பற்றி வரும் குறிப்பொன்றில் பாடியுள்ளதையும் நோக்குவது அவசியம் :

*" கல்லாலின் நீழலில் கலந்து தோன்றும்*
*கவின் மறையோர் நால்வர்க்கு நெறிகளன்றிச்*
*சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்*
*சூழரவும் மான்மறியுந் தோன்றும் தோன்றும்*
*அல்லாத காலனை முன்அடர்த்தல் தோன்றும்*
*ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்*
*பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்*
*பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனாரே"*

தட்சீணாமூர்த்தி குறித்த பாடிய பாடல் ஒன்றில் :

*" கல்லாலின் புடை அமர்ந்து நான்மறை ஆறங்க*
*முதலகற்றகேள்வி*
*வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த*
*பூரணமாய் மறைக்கு அப்பாலாய்*
*எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி*
*இருந்துகாட்டிச்*
*சொல்லாமல் சொன்னவரை நினையாமல்*
*நினைந்து பவத்தொடக்கை வெல்வாம்"*

இதில் சொல்லாமல் சொன்னவரை எனும் பதத்தைக் கூர்ந்து கவனித்தால், அருணகிரியார் கூறிய, ''அவ்வாறறிவார் அறிகின்ற தலால்'' என்று கூறியதின் பொருள் ஒருவாறு ஊகித்தறியலாம்.

முதல் பாடல் :

*'' உதியா மதியா உணரா மறவா*
*விதிமால் அறியா விமலன் புதல்வா*
*அதிகா அநகா அபயா அமரா*
*பதிகாவல சூர பயங்கரனே''*

*சுருக்க உரை*

பிறப்பு இறப்பு, நினைப்பு மறப்பு இல்லாதவனும் பிரமன் மாலுக்கு எட்டாத சிவகுமாரனே, மேலோனே, பரிசுத்தனே! புகலிடமே! தேவரூரைப் புரந்தவனே! சூரனுக்கு அச்சம் தருபவனே – என்பதாகும். இப்பாடலில் ஒரு விசேடம் என்னவெனில், கந்தரனுபூதி பாடல்கள் ஏனையவற்றில் விண்ணப்பமும், விளியும் அமையப் பாடியிருப்பினும் இப்பாடலில் மட்டும் முழுவதும் விளியாகவே பாடியுள்ளதின் கருத்தை நோக்கின் இதற்கு அடுத்த பாடலிலே முழுவதும் விண்ணப்பமாகவே கூறி, நிறைவு செய்த விதத்தினைச் சிந்தித்தல் அவசியம்.

அடுத்த பாடலைப் பார்ப்போம் :

*'' வடிவும் தனமும் மனமும் குணமும்*
*குடியும் குலமும்குடி போகியவா*
*அடியந்தமிலா அயில்வேல் அரசே*
*மிடியென்றொரு பாவி வெளிப்படினே!''*

*சுருக்க உரை*

வறுமை தோன்றின் வடிவு, தனம், மனம், குணம், குடி, குலம் எனும் ஆறும் நம்மைவிட்டு அகலும் என்பதாகும். இப்பாடலில் விண்ணப்பிக்கப் போகும் தம் கருத்தை நன்றாகக் கவனத்திற்குக் கொண்டுவரும் பொருட்டே, ஒரு முழுப்பாட்டையே

விண்ணப்பமாகவே அமைத்துப் பாடி உள்ளார் எனக் கொள்ளுதல் சிறப்பாகும். இப்பாடலில் மிகவும் துயரம் தரும் செய்தியை விண்ணப்பிக்கும் முன்பே, மேற்சொன்ன முதல் பாடலாகிய,

*"உதியா மரியா உணரா மறவா"*

எனும் பாடலில் விளியாகக் கூறியதை உளக்கண்ணால் உணர்ந்து படித்து, இதில் உள்ள சுவையை உணரலாம்.

பொதுவாக, மக்கள் துயரம் தரும் செய்தியை முதலிலே கூறுவதற்கு முன்னம், "ஐயோ! அப்பா! கடவுளே! இந்த அநியாயத்தை என்னவென்று சொல்வேன்? இது தெய்வத்துக்கே அடுக்குமா?" என்றெல்லாம் முறையிட்ட பின்னரே, தமக்கு நேர்ந்த துன்பச் செய்தியைக் கூறுவது இயல்பு.

அதுபோன்றே உளது, மேற்கூறப்பட்ட பாடல்கள் இரண்டும்.

முதற்பாட்டில் வெறும் விளியாகவே கூறிவிட்டு, அதற்கடுத்தப் பாடலிலேயே, மிடி எனும் பாவியைப்பற்றி முருகனிடம் விண்ணப்பித்ததாகப் பாடியுள்ளது சிந்திக்கத்தக்கது.

அருணகிரியார் தாம் பாடிய திருப்புகழ் பாடல்களில் நமக்குக் கிடைத்த 1340 பாடல்களிலும், வெறும் விளியாகவே அமைத்துப் பாடியுள்ளது மிக மிகக் குறைவே. அதேபோன்று, 51 பாடல்கள் அடங்கிய கந்தரனுபூதியிலும் ஒரே ஓர் இடத்தில் மட்டும் விளியாகப் பாடிவிட்டு, அடுத்த பாடலிலேயே வெறும் விண்ணப்பமாகப் பாடியுள்ளது ஒப்பிட்டு நோக்கற்பாலது. மிடி எனும் துன்பத்தினால் வெளிப்படும் இன்னலைப் பாடியது போன்று, கந்தர் அலங்காரத்திலும்,

*"முடியாப் பிறவிக்கடலிற் புகார், முழுதும் கெடுக்கும்*
*மிடியாற்படியில் விதனப்படார் வெற்றி வேல் பெருமாள்*
*அடியார்க்கு நல்லபெருமாள், அவுணர்குலமடங்கப்*
*பொடியாக்கிய பெருமாள் திருநாமம் புகல்பவரே"*

எனவும், திருப்புகழில்,

*"திமிரவுததியனைய நரக*
*ஜெனனமதனில் – விடுவாயேல்*
*செவிடு குருடு வடிவு குறைவு*
*சிறிதுமிடியும் – அணுகாதே*
*அமரர் வடிவும் அதிக குலமும்*
*அறிவு நிறையும் – வரவேநின்*
*அருளதருளி எனையுமனதோடு*
*அடிமை கொளவும்– வரவேணும்"*

என்பதாக முதல் 4 அடிகளிலும் விண்ணப்பமாகவே கூறியுள்ளதை யும் கவனித்தல் சிறப்பு.

*மேலும் ஒரு பாடலைக் கவனிப்போம்.*

*"கலையே பதறிக்கறித் தலையூ*
*டலையே படுமா றதுவாய் விடவோ*
*கொலையே புரிவேடர் குலப்பிடி தோய்*
*மலையே மலை கூறிடு வாகையனே!"*

**பாடலின் சுருக்க உரை**

வேற்கடவுளே! நான் கலைகளைக் கற்று அச்சூழலில் அலைச்சல் படவேண்டுமா? வேண்டவே வேண்டாம் என்றபடி இப்பாடலில் கலையின் தன்மையையும், அதன் பயனையும் குறித்துப் பாடியுள்ளதைக் கவனிப்போம்.

மனிதனுக்குப் பெரும்பாலும் 3 காரணங்களால் செருக் குண்டாகும். பணத்தாலும், உடல் பலத்தாலும், கற்ற கலையி னாலும் ஏற்படும். செல்வம் ஒருவனிடத்தில் எப்போதும் நிலைத்து நிற்பதில்லை. அதனால் விளையும் செருக்கு பல காலம் இருக்க நியாயமில்லை. உடல் பலத்தால் வரும் செருக்கு நாளடைவில் உடல் தளரும்போது குன்றி விடும். மனித உடம்பு எப்போதும் பலத்தோடு இருப்பதில்லை. வயது முதிர முதிர பலம் குன்றித் தளர்ச்சி உண்டாவது இயற்கை. ஆதலின் பலத்தினால் விளைந்த செருக்குச், சிலகாலம் இருந்து குன்றி விடும். ஆனால் கலையினால் உண்டாகும் செருக்கு அத்தகையதன்று. பணத்தைப் போலவும்,

உடல் பலத்தைப் போலவும் சிலகாலம் சென்றதும் குறைந்துபோய் விடும் என்று கல்வி மூலம் கிடைத்த செருக்கைச் சொல்ல முடியாது. ஒரு முறை கல்வியினால், கலையில் தேர்ச்சி உண்டானால், அது ஆயுள் உள்ளவரை விட்டு நீங்காது. இப்பிறவி போய் மறு பிறவி வந்தாலும் இந்தக் கல்வியின் பயன் தொடரும். இக்கருத்தினையே.

*"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவர்க்கு*
*எழுமையும் ஏமாப்பு உடைத்து"*

எனத் திருவள்ளுவரும் கூறியுள்ளார். செல்வமோ, உடல் பலமோ ஒருகாலத்தில் குன்றின போதிலும், கற்ற கல்வி மட்டும் அவன் ஆயுள் உள்ளவரை பிரிந்து செல்லாது. அத்தகு கல்வி, பிறர்க்குப் போதிப்பதால், மென்மேலும் பெருகுமே தவிர குன்றாது. மேலும் எக்காலத்தும், எவ்விடத்தும் யாவராலும் கொள்ளை போகாது. இதனால் பணச் செருக்கு, பலச் செருக்கு எனும் இரண்டையும்விட கல்விச் செருக்கு மிகவும் கொடுமையானதும் ஆற்றல் உள்ளதெனவும் தெரியப் படுகிறது, இக்கருத்தினை மனத்தில் கொண்ட மணிவாசகர், திருவாசகத்தில்,

*"கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்"*

என ஒரு பாடலிலும்,

*"உற்றாரையான் வேண்டேன்*
*ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்*
*கற்றாரையான் வேண்டேன்*
*கறபனவும் இனியமையும்*
*குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தாவுன் குரைகழலுக்கே*
*கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே"*

என மற்றோர் பாடலிலும் பாடியுள்ளார்.

இக் கருத்தை மனத்தில் கொண்டே அருணகிரியாரும், "கலையினால் பதற்றமும் வீண் ஆரவாரமும் தலைக்கனமும் — வரலாமோ!"

எனும் கருத்தமைய பல பாடல்களில் பாடியுள்ளார்,

அடுத்து ஒரு கந்தரனுபூதிப் பாடல் :

*" மட்டூர் குழல் மங்கையர் மையல் வலைப்*
*பட்டூசல் படும் பரிசென் றொழிவேன்*
*தட்டூடற வேல் சயிலத் தெறியும்*
*நிட்டூர நிராகுல நிர்ப்பயனே!"*

## சுருக்க உரை

கிரௌஞ்சத்தை அட்ட வேலனே! மங்கையர்மீதுள்ள என் மோகம் என்னை விட்டு என்று அகலும்? என்பதாகும். இப்பாடலில் முதல் இரண்டடிக்கும், பின் இரண்டடிக்கும் பொருத்தமாகப் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். கிரௌஞ்சத்தின் மாயையை வேல் கொண்டு ஒழித்தனையே; மாதர்மீதுள்ள என் மோகமாயை ஒழித்தருள உன் திருவருள் எனறு எனக்குக் கிடைக்குமோ எனும் விதத்தில் அமைந்துள்ளது.

## விளக்க உரை :

காமத்தினால் விசுவாமித்திரர் நெறி தவறினார். அதே சிற்றின்பத்தால் இராவணன் மதியிழந்தான். காம மயக்கத்தால் சூர்ப்பணகை இலட்சுமணனைக் காதலித்ததன் விளைவே மூக்கறுக்கப்பட்டாள். மாதவியின் தொடர்பாலே கோவலன் முறையான இல்லற வாழ்க்கையை அனுபவிக்காது போனான். திரு நீலகண்டரும் இளமை மூதூற இன்பத் துறையில் எளியரானதால், இல்வாழ்க்கை இனிதே நடத்த இயலாது போயிற்று. வாழ்க்கையை உணர்ந்தோர் செல்ல வேண்டிய துறைகளில், பதியிலார் மையல் வலை அவர்களைச் செல்லாமல் தடுத்து ஊசலாடச் செய்து விட்டது. இப்பாடலில் மட்டூர் குழல் மங்கையர் மையல் வலை எனக் குறிப்பிட்டது விலை மகளிர்களையே குறித்துப் பாடப் பட்டதாகக் கொள்ளவும்.

## இன்னுமோர் பாடல் :

*" பேராசை எனும் பிணியிற் பிணிபட்*
*டோரா வினையேன் உழலத் தகுமோ?*
*வீரா முதுசூர் படவேல் எறியுஞ்*
*சூரா சுர லோக துரந்தரனே!"*

## பாடலின் சுருக்க உரை

தேவர் உலகைப் புரந்தவனே! பேராசை என்னும் பிணியில் யான் துன்புறலாமோ?

நாம் இதுகாறும் உடம்பு உடம்பாகப் புகுந்து புறப்பட்டு இருக்கின்றோம். இந்த அலைச்சல் எப்போது தொடங்கியது என்பது நமக்கே தெரியாது. இதைக் குறித்துத் திருப்புகழில், ''திமிரவுததியனைய நரக ஜனன மதனில் விடுவாயேல்'' என முதலில் துவக்கத்திலேயே பாடியுள்ளார். '' எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனத் திடர் பிறவி'' எனவும் கூறியுள்ளார். ''மாதா உடல் சலித்தாள், வல்வினையேன் கால் சலித்தேன், வேதாவும் கை சலித்து விட்டானே'' எனப் பட்டினத்தடிகளும் பாடியுள்ளார். இதை விட பெரிய அலைச்சல் வேறெதும் இருக்காது. இதனால் இப்பாடலில் ''உழலத் தகுமோ'' என்று மனம் சலித்து இறைவனிடம் குறைபட்டுக் கொள்கிறார்.

ஆசைகள் இரண்டு வகை. ஒன்று சிறிய ஆசை மற்றொன்று பெரிய ஆசை அல்லது பேராசை, ஒருவர் உணவு, பழம் பலகாரம் போன்றவைகளைச் சாப்பிட ஆசைப்படுவது சிறிய ஆசை. பணம் கொடுத்து வாங்கிச் சாப்பிட முடியும் அல்லது வேறு நண்பர்கள், உறவினர்கள் மூலமாகப் பெற்றும் பயனடையலாம்.

பேராசை அல்லது பெரிய ஆசை என்பது நம்மிடம் போதுமான பணவசதி இருந்தும் பிறருடைய பொருளை அபகரித்து நாம் அனுபவிக்க வேண்டும் அல்லது மற்றவர்கள் நம் எதிரில் பொருளை இழந்து வறுமையினால் கஷ்டப்பட வேண்டும்

என்ற எண்ணமோ, ஆசையோ எழுந்தால் அது நியாயம் அற்றது எனக் கொள்ள வேண்டும்.

இதைத்தான் அனுபூதிப் பாடலில் ஓராவினையேன் எனக் கூறியுள்ளார். நல்லது இன்னதென்பதைத் தெளியாத செயலாளனாகிய நான் என அழுத்தமாகக் காண்பித்துள்ளார்.

பேராசையே பிறப்பீனும் வித்து ஆதலின் அவா ஒழியில் பிறப்பு ஒழியும் என உணர்க.

*"அற்றவர் என்பார் அவா அற்றார்"*

*"அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்"*

*"இனம் இடையறா தீண்டும் அவா... கெடின்"*

என்றெல்லாம் திருக்குறள் பாடல்கள் (361, 365, 368, 369) தெரிவிக்கின்றன.

சூரன் நீண்ட ஆயுளைக் கொண்டிருந்தான். ஆதலின் 'முது சூர்' என்றார். ஆசையும் அளவற்றதாதலின் முது சூருக்கு நிகராயிற்று.

ஆராய்ந்து நல்லது இது என்று தெளிந்துணர விடாது பேராசையானது நல்லறிவை மறைக்கும். அதனால் 'ஓரா வினையேன்' என்றார். ஓர்தல் ஆராய்ந்து தெளிதல் எனும் பொருள்படும்.

## மற்றுமோர் பாடல் :

*" நாதா குமரா நமஎன் றரனார்*
*ஓதாய் என ஓதியதெப் பொருள்தான்*
*வேதா முதல் விண்ணவர் சூடுமலர்ப்*
*பாதா குறமின் பதசே கரனே. "*

***சுருக்க உரை***

வள்ளிதாசனே! நீ சிவபிரானுக்கு உபதேசித்த உபதேசம் யாதோ – அதை எனக்கு உபதேசித்தருளுக.

அருணகிரியார் மேற்சொன்ன ஆசையை அடியேனுக்கும் உபதேசிக்க வேண்டுகோள் விடுகிறார், தாம் பாடிய திருப்புகழ் பாடல்கள் பலவற்றுள். அவ்விதம் கேட்ட வினாவுக்கு விடை பின் இரண்டடிகளில் குறிப்பாக உள்ளது. எவ்வாறெனில், வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப்பாதனாய் இருந்தும் – நீ வள்ளி நாயகியின் பதசேகரன் என்றாரே அதுதான் விடையான் எனது எனும் இரண்டு நிலையும் அற்று நின்ற காரணத்தால் முருகன் தானே வள்ளியை நாடி வரச் செய்தது. அதனால் குறமின் பதசேகரன் ஆனார். இதனால், தன்னை இழந்தால் தலைவனைக் காணலாம் என்பதே இதன் ரகசியப் பொருள் ; இதுவே வள்ளி அனுஷ்டித்த சன்மார்க்க நெறி என அறியலாம்.

இத்தகு ரகசியத்தான் முருகப்பெருமான், சிவபிரானுக்கு உபதேசித்தனர். இவ்வுண்மையை.

*"வள்ளிச்சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க*
*வல்லைக்குள் ஏற்றும் – இளையோனே"*

எனவரும் ''கள்ளக்குவாற்பை'' திருப்புகழில் 7வது அடியில் பாடியுள்ளதிலிருந்து அறியமுடிகிறது.

விள் ஐக்கு எனப் பிரித்து, வினவிய தாதைக்கு எனப் பொருள் கொள்ள வேண்டும். வல்லைக்குள் ஒரு நொடிக்குள் எனப் பொருள். இதனால் யான், எனது அற்ற நிலையில்தான் உண்மை அறிவு துலங்கும். அத்தகு உண்மை அறிவை அறிவதுதான் ரகசியப் பொருள். இதைத்தான் தன் தந்தைக்கு முருகர் உபதேசித்தார் என்பதும் மேற்கூறிய கருத்து விளக்கும். இக்கருத்தையே ஊர்ஜிதம் செய்யும் வகையில்,

*"அரவுபுனைதரு புனிதரும் வழிபட*
*மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்*
*அறிவை அறிவது பொருளென அருளிய குரு"*

எனும் திருவண்ணாமலை தலத்துப் பாடலில், 8வது அடியில் பாடியுள்ளதிலிருந்து நமக்குத் திட்டவட்டமாகப் புலனாகிறது.

## மற்றோர் பாடல்

*"அமரும் பதிகேள் அகமாம் எனுமிப்*
*பிமரம் கெடமெய்ப் பொருள் பேசியவா*
*குமரன் கிரிராச குமாரிமகன்*
*சமரம்பொரு தானவ நாசகனே"*

**சுருக்க உரை :** அருணகிரியார் உபதேசம் பெற்ற வரலாற்றைக் குறிக்கின்றது. முருகவேளின் உபதேசச் சிறப்பே சிறப்பு; அது சகமாயையை அடியோடு ஒழித்து விட்டது. பாடலில் பிமரம் என்பதற்குப் பொருள் விளங்காது அடியேன் கவலைப்படும் நாளில், ஒரு சமயம் மணிமேகலை நூலைப் படிக்கும்போது, அதில் "அரூப பிடமரும் உரூபபிடமரும்" என்று பாடியுள்ளதை கவனித்து, இதற்கு பொருள், பிரம்மாக்களின் வகைகள் என அறியப்பட்டேன். இந்நூல் பௌத்த மதத்தைத் தழுவிய பாடலாகும். இதைப்பற்றித் தமிழறிஞரிடம் கேட்டதில், இலக்கணத்தில் "ஏ" காரத்திற்கு "ட" கரம் வரலாம் எனவும், அதனபடிப்படையிலேதான் மேலே சொன்ன சீரை வைத்துப் பொருள் கொள்ள வேண்டும் என்றனர்.

உதாரணத்திற்கு, முகரி என்பது முகடி என வருவது இயல்பு. மேலே சொன்ன பாடலில் "பிரம்மம்" என்று கூறவேண்டிய இடத்தில் "பிமரம்" என்று எதுகையை நோக்கி இப்படி எழுத்து மாறி அமைந்துள்ளதை அறிய முடிந்தது. பிரமம் என்பது ப்ரமம் என்ற வடசொல்லின் திரிபு, மயக்கம் என்பது பொருளாகும். பிமரம் – பிரமம் (கலக்கம்) என்பதன் மரூஉ, நன்னூல் சூத்திரம் 239, 267.

இதற்குச் சில உதாரணங்கள் கூறக் கேட்டேன்.

வைகாசி என்பது இயல்பான பெயரானாலும், வைசாகி என்பதே சரியான பெயராகும். விசாக நட்சத்திரத்தில் இந்த மாதம் சிறப்பு பெற்றதால், அப்பெயர் வழங்கலாயிற்று. பிற்காலத்தில் அப்பெயரே எழுத்து மாறி வைகாசி என மருவியது.

சிவிறி என்பது விசிறி என்று மருவி வந்துள்ளது. மிஞிறு என்பது ஞிமிறு என வரும், இரண்டு வார்த்தைக்கும் பொருள் ''வண்டு'' என்றே பொருள் கூறப்பட்டுள்ளது. பவழத்தை – பழவம் என்று வழக்கத்தில் கூறுவது போன்றது.

கடைசியாக ஒரு பாடலைப் பார்ப்போம்.

*'' மதிகெட் டறவா டிமயங்கி, அறக்*
*கதிகட் டவமே கெடவோ கடவேன்*
*நதிபுத் திரஞான சுகா திபவத்*
*திதிபுத் திரர்வீ றடுசே வகனே.''*

சு.உரை: முருகா! கங்கா நதிக்கு மைந்தனே! ஞானசுகத் தலைவனே! அதிகபாவங்களைப் பண்ணியுள்ள திதி என்பவளின் புத்திரர்களின் கீர்த்தியைக் கெடுத்து அழித்த பராக்ரமசாலியே! அறிவிழந்து கெட்டழிதலோ என் தலை எழுத்து என மனம் நொந்து கூறியுள்ளார். இதற்கு மூலகாரணம் பிரம்மாவே. அவன் மேல் பழிபோட்டு, அவனைச் சாடுகிறார் அருணகிரி. திருச்செங்கோட்டுக்குச் சென்று, மலைமீதுள்ள முருகனைத் தரிசித்ததும், பேரானந்தம் கொண்டு, உனைக் கண்டு தொழ நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகன் எனக் கீழ்வரும் கந்தரலங்காரப் பாடலால் பாடியுள்ளதைப் பார்க்கலாம்.

''மாலோன் மருகனை, மன்றாடி மைந்தனை, வானவர்க்கு மேலான தேவனை, மெய்ஞானத் தெய்வத்தை, மேதினியில் சேலாற்றுவயற் பொழிற் செங்கோடனைச் சென்றுகண்டு தொழ நாலாயிரம் கண் படைத்திலனே'' எனப் பிரமனைச் சாடுகிறார்.

**தன் குறைகூறி மனம்புழுங்கிக் கதியிலி தனக்கும் கதியுளதோ – எனல் (16 பாடல்கள்)**

1. வளைபட்டகை – பாடல் எண் 4
2. மகமாயை – பாடல் எண். 5

3, திணியானமன – பாடல் எண் 6

4. மட்டூர் குழல் – பாடல் எண் 9

5. பேராசை எனும் – பாடல் எண் 16

6. அடியைக் குறியா – பாடல் எண் 23

7. கூர்வேல் விழி – பாடல் எண் 24

8. மெய்யேயென – பாடல் எண் 25

9. ஆதாரமிலேன் – பாடல் எண் 26

10. மின்னேநிகர் – பாடல் எண் 27

11. கலையேபதறி – பாடல் எண் 32

12. சிந்தாகுல – பாடல் எண் 33

13.. மாவேழ்சனனம் – பாடல் எண் 39

14. வினையோடவிடும் – பாடல் எண் 40

15. ஆறாறையும் நீத்து – பாடல் எண் 47

16. மதிகெட்டறவாடி–பாடல் எண் 50

**யான் செய்த பிழையென்னோ என நொந்து தொழுதிரங்கல் (இரு பாடல்கள்)**

1. இல்லையெனுமாயை – பாடல் என் 29

2. பாழ்வாழ் எனும் – பாடல் எண் 31

**நெஞ்சோடு கிளத்தல் (3 பாடல்கள்)**

1. கெடுவாய் மனனே – பாடல் எண் 7

2. கைவாய் கதிர்வேல் – பாடல் எண் 14

3. கிரிவாய் வடிவிக்ரம – பாடல் எண் 37

**வறுமையின் கொடுமை**

1. வடிவும் தனமும் மனமும் குணமும் – பாடல் எண் 19

**உலகினர்க்கு உபதேசம்**

1. யாமோதிய கல்வியும் எம் அறிவும்–பாடல் எண் 17

கந்தரனுபூதியில் ஆழ்ந்த கருத்துகள் கொண்ட ஒரு சில பாடல்களுக்கு, அடியேனது சிற்றறிவுக்கு எட்டியவரை கருத்துகளைக் கூறியுள்ளதில், சொற்குற்றம், பொருட்குற்றம் ஏதேனும் அறியாமல் எழுதியிருந்தால், எனது முதுமை பிதற்றல் எனக் கொள்ளவும். குணம் காணின் இறைவன் திருவருள் எனக் கொள்ளவும். மந்திர மாலையாகிய கந்தரனுபூதி பாடல்களைத் தினமும் கருத்துணர்ந்து ஓதி, வருவினைகளைத் தீர்ப்போமாக.

*"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!"*



# 28. திருஞானசம்பந்தரும் அருணகிரியாரும் !

இறைவனால் தோற்றுவிக்கப்படட நாயன்மார்களுள் சிறப்பாகப் போற்றப்படும் நால்வர்களான சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகப் பெருமான் போன்றோர்கள் பரம் பொருளையடைய பின்பற்றிய வழிகளான, புத்திரமார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம், சீடமார்க்கம் மூலமாக வாழ்ந்து காட்டிய நான்கு வகை மார்க்கத்தினையும், ஒருங்கே அனுஷ்டித்தவர் அருணகிரிப் பெருமான்.

பிள்ளையைப்போல் அன்பு செலுத்தியும், தாசனைப்போல் ஊழியம் செய்தும் நண்பனைப்போல் நட்புப் பாராட்டியும், சீடனைப்போல் உபதேசம் பெற்று அன்புடன் பரவியும், முருகனிடம் பக்திபூண்டவர் அருணகிரிநாதர்.

புத்திரமார்க்கத்தின் அடிப்படையில் ஞான சம்பந்தரையும் அருணகிரியாரையும் ஒப்பிட்டு,அவர்களின் பாடல்களிலிருந்தே இங்கு ஆராய்வோம்.

ஞானசம்பந்தரது பாடல்களுக்குப் பண்வகுக்கப்பட்டது போன்று, அருணகிரியார் திருப்புகழ்ப் பாடல்களுக்குச் சந்தம் வகுக்கப்பட்டுள்ளது.

சம்பந்தப்பெருமான், அம்மையையும், அப்பனையும் முதற்கண், சீர்காழி குளக்கரையில் கண்டு, ஞானப்பால் உண்டு திருக்கடைக் காப்பு பாடியது போன்றே, அருணகிரியார், திருவண்ணாமலை கோபுரத்தினின்று வீழ்ந்தவுடனே முருகனால் தாங்கிக் கொள்ளப்பட்டு, அவரை நேரில் தரிசித்த பிறகே அவனருளால் திருப்புகழ் போன்ற பாடல்களைப் பாடத் வங்கினார். என்பதில் உள்ள ஒற்றுமை நயத்தை அறிய முடிகிறது.

ஞானப்பால் உண்ட சம்பந்தர் முதன்முதலாக, ''தோடுடைய செவியின் விடையேறியோர் தூடுவண்மதி சூடி'' எனப் பாடிய திலிந்தே இடப்பாகத்திலிருக்கும் உமாதேவியை முதலில் குறித்துப் பாடியது போன்று, அருணகிரியாரும் முருகனால் தடுத்தாட் கொள்ளப்பட்டபோது முதன் முதலில்,

*" முத்தைத்தரு பத்தித்திருநகை*
*அத்திக்கிறை "*

என்று பாடி, இடப்பாகத்தில் வீற்றிருக்கும் தேவசேனை அம்மையாரைப் புகழ்ந்து பாடினார்.

அருணகிரியாருக்கு சம்பந்தப் பெருமானிடத்தில் உள்ள அன்புப் பெருக்கினை, திருப்புகழிலும், கந்தரந்தாதியிலும் பார்க்கலாம்.

சம்பந்தர், இறைவனையும், இறைவியையும், அம்மை அப்பனாகக் கருதி புத்திரபாவத்தைக் காட்டியது போன்று அருண கிரியாரும், முருகனை, ''எந்தாயும் எனக்கருள் தந்தையும் நீ'' எனக் கந்தரனுபூதி பாடலிலும் அருணகிரிநாத எனும் அப்பனே போற்றித் திருப்புகழிலும் ''அமுதமதை யருளி எமையாளும் எந்தை'' எனவும், ''சதாசிவக் கடவுள் எந்தையர்'' என்பதாகவும் திருப்புகழில் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

ஞானசம்பந்தர் கோளறு பதிகம் பாடிய ''தாக்கில் ஞான சம்பந்தரென'' புகழப் பட்டதற்கேற்ப, அருணகிரியாரும், கோளறு பதிகத்துக்கு இணையாக, ''நாளென்செயும் வினைதான் என் செய்யும், எனை நாடி கோள் எனச் செய்யும், கொடுங் கூற்று என் செய்யும் '' எனக் கந்தர் அலங்காரத்துப் பாடலின் முதற் பகுதியிலும், ''சேயவன் புந்திவன வாசமாதுடன் சேர்ந்த செந்திற்சேய்'' எனத் தொடங்கும் பாடலிலும் கவனிக்கத்தக்கது.

ஞானசம்பந்தர் புத்திரமார்க்கத்தையன்றி, கிரியா மார்க்கத்திலும் வாழத் தலங்கள்தோறும் சென்று இறைவனை, தரிசித்துப் பிறகு, திருக்கடைக்காப்பு எனும் தேவாரம் அருளிச் செய்தது போன்று, அருணகிரியாரும்.,

*'' ஆடும்பரிவேல் அணிசேவல் எனப்*
*பாடும் பணியே பணியா – யருள்வாய்''*

எனக் கந்தரனுபூதியில் பாடியதிலிருந்து இருவரும், இறைவனது தலங்களுக்கெல்லாம் பாடும் பணியை மேற்கொண்டனர் என அறியப்படுகிறது.

சம்பந்தர், ''பிடியதனுருவுமை கொள்மிகு கரியது'' எனும் பாடலில் நெட்டெழுத்து வராமலேயே, பாடியதற்கு ஏற்ப அருணகிரியாரும்.

*'' அமிர்தகவி தொடைபாட*
*அடிமைதனக்கு – அருள்வாயே''*

என சம்பந்தரைப் போற்றி செய்து, ''கைத்தல நிறைகனி'' எனும் பாடலிலும் தாம் அவதரித்த தலமான திருவண்ணாமலை தலைப்பாடல் ''குமரகுருபர குணதரநிசிசா'' எனத் தொடங்கும்

பாடலிலும் நெட்டு எழுத்து வராமலேயே பாடியுள்ளதன் ஒற்றுமை நயத்தைக் காணலாம்.

சம்பந்தர் திருக்கோலக் காவில், இறைவனால் பொற்றாளம் பெற்றதுபோல், அருணகிரியாரும், திருவாவினன் குடியில் முருகனால் ஜபமாலை பெற்றதை,

*"ஜபமாலை தந்த சற்குருநாதா*
*திருவாவினன் குடிப் பெருமாளே"*

என "அபகாரநிந்தை" எனும் திருப்புகழில் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். சம்பந்தர், 16,000 பாடல்கள் பாடியதற்கேற்ப, அருணகிரி யாரும் 16,000 திருப்புகழ் பாடல்கள் பாடியருளினார்.

திருவீதிமிழலையில் பஞ்சம் ஏற்பட்டபோது, இறைவனால் சம்பந்தருக்குப் படிக்காசு தந்தருளியதுபோன்று, அருணகிரி யாருக்கும், சென்னிமலையில் முருகன் படிக்காசு தந்தருளினார் என "சென்னி மலையாண்டவன் காதல் " எனும் நூலில் பாடியுள்ளதை நினைவில் கொள்ள வேண்டும். ஒருவேளை, அருணகிரியாரால் பாடப்பெற்று கிடைக்கப் பெறாத ஏனைய பாடல் களில் இதைக் குறித்துப் பாடியுமிருக்கலாமென தோன்றுகிறது.

இன்றையநாளில், அடியார் பெருமக்களுக்குக் கிடைத்துள்ள 1340 பாடல்களும், அமரர் வ.த. சுப்ரமணிய பிள்ளையின் அயராத உழைப்பினால்தான் கிடைத்துள்ளது என்பதைக் கூறிக் கொள்வதில் பெருமிதடையலாம். சம்பந்தர் அருளிச் செய்த க்ஷேத்திரக் கோவையில், "ஆரூர் தில்லையம்பலம்" எனத் தொடங்கி பாடியதுபோன்று, அருணகிரியாரும் க்ஷேத்திரக் கோவையாகப் பாடிய பாடலில் "கும்பகோணமோடாரூர் சிதம்பரம்" என ஆரூரையும், தில்லையும் முதற்கண் குறித்துப் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

ஞானசம்பந்தர் சிவனருளால், சமணர்களால் இழைக்கப்பட்ட பல துன்பங்களிலிருந்தும் வென்று, பாண்டியனின் இரு கூன்நிமிர்த்தி, திருநீறிட்டு வெப்பு நோயைத் தணித்தருளி, சமணர் தாங்கள் சபதம் செய்த வாக்கின்படி கழுவேறச் செய்தார். இதனால் சைவசமயம் தழைக்க மூலபுருஷராக விளங்கினார். அருணகிரியாரும் சமணமதத்தைத் தழுவிய பிரபுதேவரா நூனையும், அதற்குதவியாயிருந்த சம்பந்தாண்டான் என்பவனை யும் வாதில் வென்று, முருகப் பெருமானைத் திருவண்ணா மலையில் கம்பத்திளையனாராக, எல்லோர் முன்னிலையிலும் வரச் செய்து காண்பித்தார். மேலும் இந்த ஜோதியைக் கண்ட அரசனது கண்கள் பார்வை இழந்தபோது தேவலோகத்தில் உள்ள பாரிஜாத மலரை அருணகிரியாரே கொண்டு வர வேண்டும் எனச் சமணர்கள் விண்ணப்பித்தனர். இதனை ஏற்றுக் கொண்ட அருணகிரியார் கிளி உருவம் பெற்று தேவலோகத்திலிருந்து பாரிஜாத மலரைக் கொண்டு வந்து, அரசனும் பார்வை பெற உதவினார்.

இதனால் அரசரும் சைவ சமயத்தைச் சேர்ந்த, அருண கிரியாரையே குருவாகவும் ஏற்றார். அதனால் சம்பந்தரைப்போல் இறைவன் அருளைப் பெற்றதோடன்றி, சைவசமயத்தை வளர்த்தவரும் ஆகிறார்.

சிறுத்தொண்டர் பொருட்டு, அவர் பெயரையும், அவர் ஆற்றிய திருப்பணியையும் குறித்து ஞானசம்பந்தர் தமது பாடலில்,

*" செங்காட்டங்குடி மேய சிறுத்தொண்டர் பணி செய்ய*
*வெங்காட்டின் அனல் ஏந்திவிளையாடும் பெருமானே"*

எனப் பாடியுள்ளது போன்று,

அருணகிரியாரும், வீரையில் வீற்றிருக்கும் பழநி நாதரையும், பழநிமுருகனின் பரமபக்தரான கலிசை சேவகனார் அன்பையும் குறித்து, ''கோலமதிவதனம்'' எனும் பாடலில் ''சீயுதிரமெங்கம்'' எனும் பாடலிலும் பாடியுள்ளார்.

திருஞானசம்பந்தர் சமணர்களை வாதில் வென்றதுபோல், அருணகிரியாரும் வில்லிபுத்தூராரை, ''கந்தரந்தாதி'' பாடலாகிய, ''திதத்தித் தத்திதாதை'' எனத் துவங்கும் தகாவர்க்கத்திலேயே பாடி வென்றவராவார்.

மேலும், விரிக்கின் கட்டுரை நீளும் எனக் கருதியே, இத்துடன் நிறைவு செய்யப்படுகிறது.

# 29. தமிழ்ப் பாடல் செய்த அற்புதம் !

அடியேன், பள்ளியில் படித்து வரும் நாளில், Magic மந்திரவாதி செய்யும் வித்தைகளிலும், சர்க்கஸ் விளையாட்டு களைப் பார்ப்பதிலும் மிகுந்த ஆர்வமுடையவனாயிருந்தேன். மந்திரவாதி செய்யும் கண்கட்டி வித்தையில்தான் மிகுந்த ஆர்வம் இருந்தது.




நம் கண்கள் பார்த்தபடி இருக்கும்போதே, செய்யமுடியாது என்று எண்ணிக் கொண்டிருப்பதை நடத்திக் காட்டுவதுதான் மந்திரவாதியின் கலைத்திறன், நம்மிடையே இருப்பவர்

ஒருவரிடம் ஒரு பேனாவைக் கொடுத்து விட்டு, பின்வரிசையில் அமர்ந்திருக்கும் மற்றொருவரிடம் இருந்து எடுத்துக் காட்டுவர். காலியாக உள்ள அட்டைப் பெட்டியிலிருந்து, பலவிதப் பூக்களையும் பழங்களையும் தோன்றச் செய்வர். இதுபோன்ற வித்தைகள் யாவும் நாகரீகமந்திரவாதியின் வேலை.

ஒரு சமயம் தெருச்சந்தியில், எந்த ஆடம்பரமும், விளம்பரமுமின்றி ஒரு கழைக் கூத்தாடி செய்யும் வித்தைகளை அடியேனால் காண நேர்ந்தது. இவனது வித்தைகள் ஏனையோர்களது வித்தைகளை விஞ்சி விடு விதத்தில் இருந்ததைக் கண்டு வியந்தேன்.

ஒரு சிறு மாங்கொட்டையை மண்ணில் புதைத்து அதன் மேல் கூடையைப் போட்டு மூடிவிடுவான். சிறிது நேரம் கழித்து, மந்திர உச்சாடனம் வேறே, மக்கள் நம்பும் பொருட்டுச் சொல்வான். பிறகு கூடையை எடுத்துக் காட்டுவான். அந்த மாங்கொட்டை செடியாக வளர்ந்து பூத்துக் காய்த்து விளங்கும், இதுபோன்று பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுவான். கடைசியாக, தன் மகளைத் தரையில் உட்காரச் செய்து, ஒரு கூடையால் மூடுவான், பிறகு கூரிய குச்சியால் கூடையை நாலாபக்கத்திலும் குத்துவான். பார்ப்பவர்களுக்கு உடல் பதறும். பிறகு கூடையைத் திறப்பான். பெண் இருக்கமாட்டாள். "என் கண்ணே என் அருமை மகளே ஓடிவா" என்பான். அப்பெண் தெருக்கோடியில் இருந்து ஓடிவருவாள். இதுதான் கடைசியில் செய்யும் வித்தை. பார்ப்பவர்கள் பணம், காசு நிறையப் போடுவார்கள். இதனைக் கண்கட்டு வித்தை எனலாம்.

இதை ஒரு வித்தையாகச் செய்யாமல் வாழ்விலே ஒரு நிகழ்ச்சியாகவே 1300 ஆண்டுகளுக்கு முன் செய்து காட்டியவர் ஞானசம்பந்தர்.

கழைக்கூத்தாடி கூடைக்குள் சென்று மறைய, உயிருடன் கூடிய பெண்ணைப் பயன்படுத்தினான். ஆனால் ஞான

சம்பந்தரோ, எலும்புக் குவியலுக்குள்ளிருந்தல்லவா ஓர் அழகிய இளம் பெண்ணை வரவழைத்தார்.

இவ்வற்புதம் நிகழ்ந்த தலமே, சாந்தோம் கடற்கரையில் அப்போதுள்ள கபாலீசுவர ஆலயமாகும், ஞானசம்பந்தர் காலத்தில் சாந்தோம் கடற்கரையில் இருந்ததாகவும், கி.பி– 1566ல் இப்பகுதி போர்த்துகீசியர்களால் சூறையாடப்பட்டது எனவும் ஆராய்ச்சி யாளர்கள் தெரிவிக்கின்றனர். இன்றுள்ள கபாலீசுசுர ஆலயம் சமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர்தான் நிர்மாணிக் கப்பட்டதாகும். இதனைக் குறித்து, ''மடலார்ந்த தெங்கின் மயிலை'' எனச்சம்பந்தரால் பாடப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. மயிலையில் சிவனேசஞ் செட்டியார் எனும் சிவனடியார் இவரது காலத்தில் வாழ்ந்தவராவார். ஞானசம்பந்தரின் அருமை பெருமைகளைக் கேள்வியுற்று, அவரை மானசீகக் குருவாக ஏற்றார். மேலும் தன்னுடைய ஒரே மகளை இவருக்கே திருமணம் செய்விக்கவும் எண்ணம் கொண்டார். சிவநேசம் செட்டியாரோ வணிகக் குலத்தைச் சேர்ந்தவராவார் சம்பந்தப் பெருமானோ ஸ்மார்த்த பிராமணர். அந்தணர், சமயப் பற்றும், ஒழுக்கமும் விஞ்சிய இடத்தில், ஜாதிமதப் பூசல்கள் தோன்றாது என்பதனை அன்றே நம் முன்னோர்கள் அறிந்திருந்தனர் என்பது புலனாகிறது.

துரதிர்ஷ்டவசமாக, அப்பெண்ணை அரவம் தீண்டி இறக்கவும், அவளது அஸ்தியை ஒரு மட்குடத்தில் பாதுகாத்து, அதனை ஞானசம்பந்தரிடமே ஒப்புவிக்க எண்ணம் கொண்டார். ஞான சம்பந்தர் தலயாத்திரை செய்து கொண்டு, திருவொற்றியூரை அடைந்தார். இதனைக் கேள்வியுற்ற செட்டியார், மிக்க ஆனந்தம் மேலிட, திருவொற்றியூரிலிருந்து திருமயிலை வரை பந்தலிட்டும், சம்பந்தரோடு வந்த சிவனடியார்களையும் சேர்த்து, மேளதாளத்தோடும் அழைத்து வந்தார். தன் மகளின் அஸ்தியை அவர் முன் வைத்து, உயிர்ப்பிக்க வேண்டிக் கொண்டார். அம்மட்குடத்தைக் கோயில் மதிற்புறத்துக்கு வெளியே கொண்டு

வரச் சொல்லி, அப்பெண்ணை உயிர் பித்து எழு 11–பாடல்கள் பாடியருளினார். சுந்தரரைப்போல்,''கரைக்கால் முதலையை பிள்ளைதரச் சொல்லு காலனையே'' என உத்தரவு போடும் பாணியில் பாடாது, இறைவனிடமும் விண்ணப்பமும் செய்யாது இறந்த பெண்ணையே உயிர்ப்பித்துவர, தமிழர்கள் கொண்டாட வேண்டிய விழாக்களின் சிறப்புகளைப் பொருத்திப் பாடியருளியதைக் கவனிக்கலாம்.

ஞானசம்பந்தரையும், அவருடன் வந்த சிவனடியார் களையும் மயிலைக்கு வரவழைத்த நிகழ்ச்சியின் அறிகுறியாக இன்றும் மயிலையில் பங்குனி மாதத்தில் நடக்கும் திருவிழாவில், ஒரு நாளாக 63 நாயன்மார்கள் வீதிவுலா உற்சவம் நடைபெறுவதைக் கண் கூடாகக் காணலாம். இவ்விழாவினுக்கு வித்திட்டவர் சிவனேசஞ்செட்டியாரே என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. எல்லாச் சிவாலயங்களிலும் 63 நாயன்மார் களுக்கு உருவச்சிலை இருந்தபோதிலும், மயிலை ஆலயத்தில் மட்டும் தான், 63 நாயன்மார்கள் உற்சவம் நடத்தி வருவது, ஞான சம்பந்தருக்கு மேலும் பெருமை சேர்க்கும் விதத்தில் அமைந்ததாகும்.

எலும்பைப் பெண்ணுருவாக்கிய இச்செயலை ''கன்னித் தமிழ்'' செய்த நிகழ்ச்சி என ஆன்றோர்கள் கருதிய போதிலும் தமிழ் மொழியைவிட ''தமிழ்ப் பாடல் செய்த அற்புதமே'' இது எனக் கருதுகிறேன்.அருணகிரிப் பெருமான் தாம்பாடிய திருப்புகழில்,

*''அளகை வணிகோர் குலத்தில் வனிதை உயிர்மீள*
*அழைப்ப அருள் பரவு பாடல் சொற்றவரே ஞான சம்பந்தர்''*

எனப் பாடியுள்ளார்.

எலும்புகள் அடங்கிய மட்குடத்தை எதிரில் வைத்து, தைப்பூசம் காணாதே– போதியோ பூம்பாவாய், எனப் பூம்பாவையிடமே (எலும்பு உருவாக இருப்பவர் இடத்திலே தான்) தமிழர்கள் கொண்டாட வேண்டிய விழாக்களின்

சிறப்புக்களைக் காண அழைப்பதுபோல் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

கபாலீச்சுரத்தில் வீற்றிருக்கும் இறைவன் என்ன அவ்வளவு விதரணை தெரியாதவரா? தைப்பூசம், கார்த்திகை விளக்கீடு விழா போன்றவைகளைக் காணவும் வகை செய்து எலும்புக்கே உயிர் கொடுத்து விடுகிறார். இதனால் சம்பந்தரது பாடல் அன்றுதொட்டு இன்று வரை மங்காது, தெய்வப் பொலிவோடு விளங்குவதைக் காணலாம். உமையவளிடம் கபாலம் ஏந்திய கையனாய்க் காட்சி கொடுத்து ஆட்கொண்ட பெருமானை, கபாலி எனும் பெயரால் அழைக்கப்பட்து, ஞானசம்பந்தரது காலத்தில்,

ஞானசம்பந்தர் திருமயிலையில் பாடிய 11 பாடல்களிலும் கபாலீஸ்வரரையே, முதன்மையாக வைத்துப் பாடியுள்ளார். கற்பகவல்லிமீது சம்பந்தர் இலக்கியம் படைத்ததாகத் தெரிய வில்லை. சம்பந்தரது காலத்திலேயே வாழ்ந்த நாவுக்கரசரும் கற்பகவல்லிமீது பாடல்கள் புனைந்ததாகத் தெரியவில்லை. அதன்பின்னர் 20–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் சக்தி வழிபாடு மிகுந்ததால், கற்பகவல்லிமீது பாடல்கள் புனையும் பழக்கம் ஏற்பட்டது எனக் கருத முடிகிறது.

## 30. ''ஞானசம்பந்தரால் கூறப்பட்ட விழாக்களின் சிறப்புகள்!''

சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கண்டது சைவ சமயம். அச்சமயத்திற்கு, புறச்சமயங்களால் ஊறுவிளைந்தபோது, ஏற்பட்ட இன்னல்களைக் களையும் பொருட்டே, நம் நாட்டில் இறைவனது அருளால் தோன்றியர்கள் தாம், சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகப் பெருமான் ஆவார்கள். பொதுவாக 3 நாயன்மார்கள் ஆகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடியதைத் தேவாரம் எனக் கூறப்பட்டாலும், குறிப்பாக, அப்பர் பாடியதற்குத்தான் தேவாரம் எனும் பெயர் பொருந்தும், சம்பந்தர் பாடியவை ''திருக்கடைக் காப்பு '' எனவும், சுந்தரர் பாடியதை ''திருப்பாசுரம்' எனவும் பெயரிடப்பட்டன. மாணிக்கவாசகர் அருளிச் செய்ததை ''திருவாசகம்'' எனவும் அழைக்கலாயினர்.

ஞானசம்பந்தர் 7–ஆம் நூற்றாண்டில் தோன்றியவராவார். அவர் மயிலைக்கு வந்து பாடிய 10 பாட்டுக்களில் தமிழர்கள் கொண்டாட வேண்டிய விழாக்களின் சிறப்புக்களைப்பற்றி வர்ணித்துள்ளார்.

சித்திரை மாதம் : அஷ்டமி விழாவும், வைகாசியில் – ஊஞ்சலாட்டு விழாவும், ஆணியில் – திருமஞ்சன விழாவும், ஆடி மாதத்தில் – பூரத்தன்றும், வெள்ளிக்கிழமைகளிலும், ஆவணியில்

– சிவராத்ரி விழாவும், புரட்டாசியில் – நவராத்திரி விழாவும், ஐப்பசியில் – ஓண விழாவும், கார்த்திகையில் – தீபத் திருவிழாவும், மார்கழியில்– ஆதிரையையும், தை மாதத்தில் – தைப்பூச விழாவையும், மாசியில் – கடலாட்டு விழாவையும், பங்குனியில் – பங்குனி உத்திரத் திருவிழாவையும் கொண்டாடத் அறிவித்துள்ளார்.

கி.பி. 1566ல் மயிலாப்பூர் பகுதி போர்த்துகீசியர்வசம் சிக்கியபோது, அப்பொழுது செந்தோம் கடற்கரையில் அமைக்கப்பட்டிருந்த கபாலீஸ்வரர் ஆலயம் சூறையாடப்பட்டது. இப்போதுள்ள கபாலீஸ்வரர் ஆலயம் 300 ஆண்டுகளுக்கு முன்புதான் புதிதாகக் கட்டப்பட்டதாகும்.

சம்பந்தரது காலத்தில் வாழ்ந்த மயிலையைச் சேர்ந்த சிவனேசம் செட்டியார், தனக்குப் பிறந்த ஒரே மகளை ஞானசம்பந்தரையே சமயகுருவாகவும், மானசீகமாக மாப்பிள்ளையாகவும் வரித்துவிட்டதின் அடிப்படையிலே, ஸ்மார்த்த பிராமணக் குலத்தில் பிறந்த சம்பந்தருக்கு, வணிகர் குலத்தில் பிறந்த தன் பெண்ணைத் திருமணம் செய்விக்க எண்ணியதைப் பார்த்தால், அக்காலத்தில் ஜாதிமத பேதமின்றி ஆன்மீக நெறியிலே வாழ்வதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பது புலனாகிறது.

இதனால், சமய உணர்வும், ஆன்மீக ஒழுக்கமும் மிஞ்சிய இடத்தில், ஜாதிமத பேதங்கள் தோன்ற வாய்ப்பிருக்காது என்பது புலனாகின்றது. சிவநேச செட்டியார் மகளை, சோதனையின் காரணமாக அரவம் தீண்டி இறந்துபோகவும், அப்பெண்ணின் அஸ்தியை ஒரு மண் கலசத்தில் வைத்து, ஞானசம்பந்தரிடமே ஒப்புவிக்க எண்ணினார். சிறிது காலம் சென்று, ஞானசம்பந்தர் க்ஷேத்திராடனம் செய்து கொண்டு, திருஒற்றியூர் அடைந்ததும், இதைக் கேள்வியுற்ற சிவநேச செட்டியார் மிகுந்த ஆவல் கொண்டவராய், ஒற்றியூரிலிருந்து, திருமயிலை வரை பந்தலிட்டு,

அவருடன் வந்த சிவனடியார்களையும் அழைத்து வந்து, மண் கலசத்தை ஞானசம்பந்தர் எதிரில் வைத்து, தனது விருப்பத்தைத் தெரிவித்ததும், திருமயிலையில் கபாலீஸ்வரரைக் குறித்துப் பாடிய 10 பாடல்களே, நாம் கொண்டாட வேண்டிய விழாக்களின் சிறப்புகளை அறிய முடிகிறது.

ஞானசம்பந்தரையும் அவருடன் வந்த அடியார்களையும் சேர்த்து திருமயிலைக்கு வரவழைத்து நிகழ்ச்சியின் அறிகுறிதான் இன்றும் திருமயிலையில் 63–நாயன்மார்கள் உற்சவம் கொண்டாடி வருவதற்குச் சான்றாகும். ஞானசம்பந்தர், மயிலையில் கபாலீஸ்வரரை முதன்மையாக வைத்து, அவர் பெயரிலேயே 10 பாடல்களும் பாடி அருளினார். கற்பகவல்லிமீது சம்பந்தப் பெருமானால் இலக்கியம் படைத்ததாகத் தெரியவில்லை. அவர் காலத்தவராகிய நாவுக்கரசராலும் கற்பகவல்லிமீது பாடல் புனைந்ததாகத் தெரியவில்லை.

பூம்பாவையை உயிர்ப்பிக்க வேண்டி, பாடிய 10 பாடலில், முதல் பாட்டு ''மட்டிட்ட புன்னையும்'' எனத் தொடங்கி, தொண்டை மண்டலத்தை வர்ணிக்கின்ற பாடல்களில் பெரும்பாலும் புன்னை மரம் வரும் என்பதைக் கருத்திலே கொண்டு முதல் பாட்டிலேயே புன்னை மரத்தை அமைத்துப் பாடி, அப்பெண்ணை உயிர்ப் பிக்கச் செய்தார். ஞானசம்பந்தர், அப்பரைத் திருமுருகநாயனார் திருமடத்தில் சந்தித்தபோது, அப்பரடிகள், திருவாரூரில் திருவாதிரை விழா கொண்டாடும் சிறப்பை உணர்த்தியதைக் கருத்தில் கொண்டே, தாம் பாடிய 10 பாடலில், மார்கழி மாதத்தில் ஆதிரை விழாவைக் கொண்டாடச் சொல்லியுள்ளார்.

''ஊர் திரை வேலையுலாவும்'' என வரும் பாடலில் ''ஆதிரை நாள் காணாதே போதியே பூம்பாவாய்' எனப் பாடியுள்ளார். இப்பொழுது மார்கழி மாத ஆதிரையின் விழாச் சிறப்பைப்பற்றி ஆராய்வோம்.

மார்கழியில் பௌர்ணமியன்று ஆதிரை நட்சத்திரம் சேர்வதால் இதற்கு விசேடம். பிரதி மாதத்தில் பௌர்ணமியன்று எந்த நட்சத்திரம் சேர்கிறதோ, அதற்கு விசேஷம்.

நம் போன்றவர்களுக்கு மார்கழியில் அதிகாலை 4 மணியிலிருந்து 6 மணிவரை பிரம்ம முகூர்த்தம். கடவுள் வழிபாட்டிற்குச் சிறந்த நேரமாகும். அதேபோன்று தேவர்களுடைய நாளில் மார்கழி முழுவதும் பிரம்ம முகூர்த்தம். ஆதலால் மாதங்களில் சிறந்தது மார்கழி மாதம். மக்கள் யாவரும் அம்மாதத்தில் அதிகாலையில் எழுந்து நீராடி வழிபாடு செய்கின்றனர். ஆண்டாள் நாச்சியார், மார்கழிப் பௌர்ணமி தினத்தை, தாம் பாடிய திருப்பாவையில், முதல் பாட்டிலேயே,

''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால், நீராட போதுவீர்! போதுமினோ நேரிழையீர்'' என்ற, பாடலில் மதி நிறைந்த நன்னாள் என்று அத்தினத்தைச் சிறப்பாகப் பாடியுள்ளார். முழுமதி நாள் வரும்போது, நிலா பால்போல் பிரகாசமாயிருக்கும். மேலும், சரித்திரவாயிலாக, அண்மையில் வாழ்ந்த மகான் சேஷாத்ரி சுவாமிகளும் (4–12–1929) மார்கழி திருவாதிரையில் தான் கைவல்யமுக்தி அடைந்ததும், இதன் முக்கியத்தைத் தெரிவிக்கிறது. பொதுவாக, ஆடியையும், மார்கழியையும் பீடை மாதங்கள் என ஒதுக்கி, திருமணம், கிரகபிரவேசம் முதலிய நற்சடங்குகள் செய்வதில்லை. உண்மையில் அந்த மாதம் பீடமாதம் என்று தான் பொருள் கொள்ளுதல் வேண்டும். இறைவனை, இம் மாதத்தில் அதிகாலையில் எழுந்து நீராடி, துதிசெய்து, மனதில் பீடமாக வைத்து வழிபடுதற்குரிய மாதமாகும். இன்னும் சிலர் இம்மாதத்தை பீடு மாதம் என்றும்' பெருமையுடைய மாதம் என்பதாகவும் விளக்கம் கூறுவர்.

# 31. திருவண்ணாமலையும், திருஞானசம்பந்தரும்

பொதுவாக, மக்களை அவலமும் ஆணவமும் எப்படி எல்லாம் ஆட்டிப் படைக்கிறது என்பதனைச் சிந்தித்துப் பார்த்தல் அவசியம். இவ்விரண்டும் களைய வேண்டுமானால், இறைவுணர்வில் மனதைப் பதிய வைத்து ஆன்றோர்களின் பாடல்களைப் பாடி வருவதே சிறந்த சாதனமாகும்.

அடியேன் பல வருடங்களாகத் திருவண்ணாமலையில் நிகழும் ஸ்ரீ அருணகிரிநாதர் விழாவில் (ஆகஸ்டு 15–தேதி) கலந்து கொண்டு திருப்புகழ் பாடி வீதிவலம் வருவது வழக்கம். அது சமயம் திருவண்ணாமலையில் கார்த்திகை தீப விழாவினைக் காணும் அவா, அடியேன் மனத்தில் உறுத்திக் கொண்டேயிருந்தது. கடந்த ஆண்டில் (2001) கார்த்திகை தீபத்தைக் காணும் பாக்கியம் கிட்டியது என் பெற்றோர்கள் செய்த தவப் பயனேயாகும்.

மலை உச்சியில் தீபம் ஏற்றும் தருணத்தில் அடியார்களின் கூட்டம் சொல்ல முடியாது. நாம் மண்ணில் இருக்கிறோமா, விண்ணில் இருக்கிறோமா எனும் ஐயம் ஏற்படும், பஞ்சாட்சர

நாமம் ஒலிக்கும் சத்தம் எல்லோருடைய காதிலும், வாயிலும் சொல்ல ஒலித்தது.

அது சமயம் ஞானசம்பந்தர், கார்த்திகை தீப விழாவைப் பற்றிப் பாடிய பாடல் அடியேனுக்கு ஞாபகத்துக்கு வரவே அதையே ஓதிக்கொண்டிருந்தேன். 1400 ஆண்டுகளுக்கு முன்னர் ஞானம்பந்தர் பாடிய பாடல்கள் எந்த அளவுக்கு ஜீவன் கொண்டுள்ளது என்பது பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்தாக இருக்கவா போகிறது?

திருவண்ணாமலை தீபவிழா (ஒளி விழா) வெறும் பௌதீக ஒளிமட்டுமல்ல. 1968ல் அமெரிக்க விண்வெளி வீரர்கள் (**Cosmonauts**) விண்வெளிப்பயணம் செய்து சந்திரனில் கால் வைத்து, பூமிக்குத் திரும்பிய சமயம் பூமியில் ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து ஒரு மாபெரும் ஜோதி பிரகாசிப்பதைக் கண்டார்கள். பின்னர் அந்த ஜோதி எங்கிருந்து வந்தது என ஆராய்ச்சி செய்தபோது, அந்த இடம் திருவண்ணாமல எனத் தெரிந்து கொண்டனர். அன்று கார்த்திகைத் தீபத் திருவிழா நாளாகும். இதற்கு ஆதாரம், ''அண்ணாமலை எனும் கிரி உருவாகிய கிருபைக் கடல்'' எனும் நூலில் கூறப்பட்டுள்ளது.

திருஞானசம்பந்தர் திருத்தல யாத்திரையின்போது அடியார்கள் புடை சூழ, அறங்கண்ட நல்லூர் வந்திருந்தார். அங்கிருந்தே திருவண்ணாமலை சிகரத்தைக் கண்டார். கண்டதும் புளகாங்கிதம் அடைந்து பாடித் தொழுதார். அங்குள்ள மண்டபத்தில் தங்கியிருந்த சமயம் ஒரு ஜோதி தரிசனம் கண்டார். பின்னர், அண்ணாமலையாரே ஒரு சிவமுனிவராய் வந்து, தான் திருவண்ணாமலையில் இருந்து வருவதாகவும் சொன்னார். என் கிராமம் அருகில்தான் உள்ளது. தான் தவறாது திருவண்ணாமலை

சென்று, இறைவனுக்குப் பூமாலை தொடுத்து வருவதாகவும் கூறினார். உடனே, ஞானசம்பந்தர் அச்சிவனடியாரோடு திருவண்ணாமலைக்குச் செல்ல ஆர்வம் கொண்டார். அம்முதியவரைப் பின்பற்றியே சம்பந்தர் சென்றார். அவ்வாறு செல்லும்போது நடுவழியில் மறைந்து விட்டதை அறிந்தார்; அன்னாரைச் சம்பந்தர் தேடிக் கொண்டிருந்த சமயம், ஒரு கொள்கைக் கூட்டம் இவர்களைச் சூழ்ந்துகொண்டு, முத்துச் சிவிகை, முத்துப்பந்தல், பொற்றாளம் முதலிய எல்லாவற்றையும் களவாடி ஓடிவிட்டார்கள்.

ஞானசம்பந்தர் இறைவனைத் தியானித்து, இந்தக் கடுஞ்சோதனைக்கு ஆட்படுவதைப்பற்றி எனக்கு ஆட்சேபணை ஒன்றுமில்லை. ஆனால் என்னுடன் வந்த உன் அடியார்களைச் சோதிப்பது என்ன காரணமோ என இறைவனிடம் வேண்டினார்.

''திருவண்ணாமலையைத் தரிசிக்க ஆடம்பரமும், ஆரவாரமும் வேண்டாம் என்பதை உமக்கு உணர்த்தவே சிவகணங்களால் அவைகளைப் பறிக்கச் செய்தோம். நீங்கள் யாவரும் பஞ்சாட்சரத்தை உச்சரித்துக் கொண்டே திருவண்ணாமலையை அடைந்ததும், உங்களது உடமைகள் யாவும் உங்களை வந்தடையும். இது சமயம் உச்சிப் பொழுதாகையால், உங்களது களைப்பு தீரும் பொருட்டு, இங்கேயே உணவருந்திவிட்டுச் செல்லுங்கள்'' என வானொலி வாயிலாகக் கேட்டறிந்தார் சம்பந்தப் பெருமான். இவரோடு வந்த சிவனடியார்கள் ஒரு கூடாரத்தைக் கண்டனர். அக்கூடாரத்தில் இருந்தவர்கள் இவர்கள் யாவரையும் உள்ளே அழைத்து விருந்தளித்து உபசரித்தார்கள். சிறிது நேரம் ஓய்வு எடுத்து விட்டு திருவண்ணாமலையை நோக்கிப் புறப்பட்டுச் சென்றதும்,

கூடாரமும் அங்குள்ளோர் யாவரும் மறைந்துவிட்டதைக் கண்டு சம்பந்தர் வியப்படைந்தார் ஒரு வழிகாட்டியின் உதவியினால் திருவண்ணாமலையை அடைந்ததும், வழிகாட்டியும் மறைந்தார். அதே நேரத்தில் பறிபோன பொருள்களை யாவும் சிவகணங்களோ மற்றோர் உருவத்தில், சம்பந்தர் தங்கியிருந்த மடத்திலேயே வைத்து விட்டுப் போயினர்.

ஞானம்பந்தர், அண்ணாமலையாரே நிகழ்த்திய இவ்வதிசயைத்தைக் கண்டு, கண்களில் நீர் மல்க, எம்பெருமானை தொழுதும் பாடியும் பரவசமடைந்தார். அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்து அண்ணா மலையாருக்கு பாமாலை சூட்டி மகிழ்ந்தார். பின்னர் பிரியாவிடை பெற்று, தலயாத்திரையைத் தொடர்ந்தார்.

ஞானசம்பந்தரின் இந்த அரிய வாழ்க்கை நிகழ்ச்சிகள், உபமன்யுவின் ''சிவபக்த விலாசம்'' எனும் வடமொழி நூலில் குறிக்கப்பட்டுள்ளதை, நமக்கு அறிவித்தவர் பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி ஆவார்.

# 32. திருநீலகண்டர் வாழ்க்கை சொல்லும் நீதி

இல்லறத்தே துறவியான திருநீலகண்ட குயவனார்

**வா**ழ்க்கையை 2 வகையாக உணரலாம் 1. இன்பத்தை தேடும் முயற்சி. 2. உண்மையைத் தேடும் முயற்சி. பெரும்பாலான மக்கள் இன்பத்தைத் தேடும் முயற்சியிலேயே, துன்பம், துயரம், துக்கம், சலிப்பு, வெறுப்பு என்னும் வேதனைகளை அனுபவிக்கின்றனர்.இடை இடையே இன்பத்தின் சுவையும் அவர்கள் மனத்தாக்குகளில் தட்டுப்படும்போது அதுதான் தமது நோக்கம் என்னும் முடிவு வலுப்படுகிறது. ஆனால் உண்மையைத் தேடி உணருவதுதான் வாழ்க்கை என்பது அடியேன் அபிப்பிராயம்.



அவிழ்த்து விடப்பட்டு வெறிநாய்களைப்போல பொறிப் புலன்களை அலைய விட்டு கண்ணால் இன்பம், காதால் இன்பம், வாய்க்குச் சுவையான உணவு, உடல் உணர்ச்சியை அனுபவிக்க விதவிதமான உடம்புகள் என்று இன்பத்தைத் தேடித்தேடி அலைகிற வர்கள் என்றைக்கு நிறைவடையப் போகிறார்கள்? சலிப்படைவது வேண்டுமானால் சாத்தியம். நிறைவடைவது என்பது சாத்தியம் இல்லை. இதுதான் உண்மை. இவற்றினை உணர திருநீலகண்ட நாயனார் வரலாற்றை அறிந்தாலே போதும்.

சுந்தரர் பரவை நாச்சியாரைப் பிரிந்த தலையாத்திரை செய்ததைப் போன்று, நாமும் அடியார்களின் வாழ்க்கையில் தலயாத்திரை செய்யப் புறப்படுவோம். பெருங்காட்டை எரிப்பதற்கு அதிக நெருப்பு தேவையில்லை. சிறிய தீப்பொறியே போதும், குடத்தில் உள்ள பாலைத் தயிராக்க ஒரு சொட்டு உரைமோரே போதுமானது. நம் ஜென்மத்துப் பாவங்களை போக்க நிறைய தெய்வங்கள் தேவையில்லை. ஒரு முறை அன்பினால் உருகிச் சொல்லும் இறை நாமம் ஒன்றே போதுமானது.

*“முருகா என ஓர் தரம் ஓதும் அடியார்*
*முடிமேல் இணைதாள் – அருள் வோனே”*

என்பது திருப்புகழ், இது அருணகிரியாரின் அத்தாட்சி பத்திரம், தருவதோ திருவடி இரண்டு. கூறுவதோ ஒரு திருநாமம்! இது எப்படிச் சாத்தியம்? இது ஞானிகளின் வாழ்க்கை அனுபவம், ஆன்மாவைச் சுற்றியுள்ள அழுக்குச் சுமைகளை ஞானக் கனலாகிய இறைவனது திருநாமங்களில் ஒரு திருநாமம் என்னும் சிறு பொறியே எப்படி எரிக்கின்றது என்பதை அருள் பெற்ற அடியார்களின் வாழ்க்கையை உணர்ந்தாலே போதுமானது.

## திருநீலகண்ட குயவனார் வரலாற்றுக்கு வருவோம்

சுந்தரரால் புகழ்ந்து பாடப்பட்ட அறுபது நாயன்மார்களில் ஒருவரான திருநீலகண்டர் என்னும் சிவனடியார் வேதியர்கள் நிரம்பி வாழும் தில்லைமூதுரில் குயவர் குலத்திலே தோன்றியவர் ஆவார். பிற பல நாயன்மார்களது இயற்பெயர்கள் பெரிய புராணத்தில் கூறினபோதிலும் இவரது இயற்பெயரும், பெற்றோர்களின் பெயரும் என்ன என்று அறியப்படவில்லை, சிலர் பெரிய மனிதர்களாகப் பிறக்கிறார்கள். சிலர் முயற்சியால் பெரிய மனிதர்களாகிறார்கள். இன்னும் சிலர் பெரிய மனிதர்களாக ஆக்கப்படுகிறார்கள் என்பது ஓர் ஆங்கில கவிஞனின் விளக்கம். இது மனிதர்களுக்கு மட்டும் இருக்கும் சிறப்பு அல்ல, கிராமங்களுக்கும், நகரங்களுக்குமே இச்சிறப்பு உண்டு.

அரியக்குடி, செம்மங்குடி, முசிறி, சித்தூர் முதலிய கிராமங்கள் சரித்திரப் பிரசித்தியோ, புராணப் பிரசித்தியோ உடையவை அல்ல என்றாலும், மேற்சொன்ன நான்கு ஊர்களையும் இசையுலகில் அறயாதவர்கள் இல்லை. இசை மேதைகள் தோன்றியிருக்கிறார்கள் என்பது சொல்லாமலே விளங்கும், நீலகண்டம் – நீலகண்டம் என்னும் நாமத்தையே இவர் உச்சரித்து வருவதால், இவரைக் காரணம்பற்றியே திருநீல கண்டர் என்றே அழைக்கலாயினர், இவர் பெயர் குறிக்கப்படாது போதிலும் இவர் குலாலர் குலத்திலே தில்லைமூதுரில் பிறந்தார் என்பதில் ஐயம் ஒன்றும் இல்லை. ஆதாரம்திருத்தொணிடத் தொகையில் இவரைக் குறிக்க வரும் பெயரலே இவரது குலத்தை உறுதி செய்கிறது. மட்பாண்டம் செய்பவரை மதுரை பக்கம் வேளார் என்பர். இவர்களை வேட்கோவர் எனச் சேக்கிழாரால் கையாளப்பட்டுள்ளது. மண் கலயங்கள், அடியார்களுக்குத் திருவோடு முதலியன செய்து சிவனடியே சிந்தித்து வாழ்ந்தார் என்பது சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்னரே சுந்தரது திருத்தொண்டர் தொகை மூலம் உறுதி செய்யப்படுகிறது. சென்னையில் இக்குலத்தொழிலை நாளது வரை கடைப்பிடித்து வாழும் பகுதிகளில், சென்னையைச் சேர்ந்த, சூளை–1

குயப்பேட்டை என்ற பகுதியும் ஒன்றாகும். மண்பாண்டம் செய்யும் தொழிலுக்குப் பெருமை சேர்த்தவர் திருநீலகண்டரே ஆவார், மண்ணை மூலப்பொருளாகக் கொண்டு எவ்வித ரஸாயன சேர்க்கையும் இன்றி எந்த சீதோஷ்ண நிலைக்கும் பொருந்தும் வகையில் அன்றும், இனி எக்காலத்தும் சிறப்போடு விளங்குவதற்கு திருநீலகண்டரால் கையாளப்பட்ட மண்பாண்டம் செய்யும் குயவர் தொழிலே எடுத்துக்காட்டு ஆகும்.

முருகப் பெருமானின் திருஅவதாரத்தைப்பற்றிக் கூற வந்த கச்சியப்பர்,

*“ ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலக முய்ய ”*

என்ற அளவிலேதான் கந்தபுராணத்தில் பாடியுள்ளார், இவரது பாடல் சேக்கிழார் பாடலைவிட இரண்டு மாற்று குறைவு. சேக்கிழாரோ சுந்தரது ஜனனம்பற்றிக் கூறுகையில் ''தீதகன்று உலகமுய்ய திரு அவதாரம் செய்தார்'' என்கிறார். என்ன தீது? அடியார் பெருமையை அறியாத பெருந்தீங்கு அன்றைய நாளிலே உலகில் இருந்தது. இதனைக் களையும் பொருட்டு விறல் மீண்ட நாயனாரைக் கருவூலமாகக் கொண்டு, தொண்டர்களின் பெருமைகளைப் பாடி அருள, இறைவனே சுந்தரரைத் திரு அவதாரம் செய்வித்தார் எனக் கருத தோன்றுகிறது.

''சிறப்புடைப் பொருளை முன்வைத்துக் க்ழறல்'' எனும் வாக்கினுக்கேற்ப நாயன்மார்களைக் குறித்துப் பாட வந்த சுந்தரர் முதலில் பாடும் தனி அடியார் திருநீலகண்ட குயவனார் ஆவார். இதனை நோக்கின் ஏனைய அடியார்களின் தொண்டினைவிட இவரது வாழ்க்கைத் தொண்டு சிறப்பெனக் கருதப்படுகிறது.

சுந்தரர் திருநீலகண்டரைக் குறித்து பாடிய போது எதற்காக அவரது குலத்தையும் சேர்த்து பாடினார் எனும் ஐயம் தோன்றலாம். இவரது பெயரைக் கொண்ட இன்னொரு அடியார் திருத்தொண்டர் தொகையில் வருவதால் வாசகர்களுக்குச் சந்தேகம் தோன்றாமல்

இருக்கவே, இவரது பெயரோடு குலம் சேர்த்துப் பாடியுள்ளார். சுந்தரரோ இறைவனது திருவுள்ள நோக்கின்படி மண்ணுலகில் பரவையாரையும், சங்கிலியாரையும் காதலித்து வாழ்க்கை நடத்தியவராவார். திருநீலகண்டரோ துறவு பூண்டு காடு செல்லாது இல்லறத்திலேயே வாழ்ந்து பெண் நலமுறாது வாழ்ந்தார். இதனால் இவரது பெருமையைக் குறித்துப் பாட வந்த பட்டினத்து அடிகளும் ''மாது சொன்ன சூளால் இளமை துறக்க வல்லேன் அல்லேன்'' என்று தாம் பாடிய மூன்று நாயன்மார்களில் திருநீலகண்டரை நடுவே வைத்துப் பாடியதால் இவரது தியாகம் சிறப்புப் பெறுகிறது. நரம்பு முறுக்கேறிய காளைப் பருவத்தில் இல்லறத்தில் இருந்து கொண்டே கட்டிய மனைவியிடமே இன்பம் துய்க்காது வைராக்கியமாக வாழ்ந்து காட்டியவரின் சரித் திரத்தையே முதலில் பாடுவது சிறப்பாகும் எனக் கருதியே திருநீலகண்ட நாயனாரைக் குறித்து முதலில் சுந்தரர் பாடியுள்ளதில் வியப்பொன்றும் இல்லை.

ஆடவர்கள் தங்கள் மனைவியைத் தவிர; மற்றைய மங்கையர்களைக் காதல் நோக்கோடு பார்ப்பது கூடாது. சுந்தரர், கயிலையில் பூந்தோட்டத்தில் இருமாதர்களையும் , ஒருவரோடு ஒருவர் காதல் நோக்கோடு பார்த்ததின் விளைவே, பூலோகத்துக்கு வரநேர்ந்தது என்றால் இங்கிருந்தே வேற்று மங்கையர்களை மாறு பட்ட நோக்குடன் பார்ப்பவர்கள் எங்கே போவது? மூவாசை களில், பெண்ணாசை ஒன்று மட்டும் எல்லா ஜீவராசிகளுக்கும் உண்டு.

இந்திரன், சந்திரன், விசுவாமித்திரர், காசிபர் போன் றோர்கள் எல்லாம் கெட்டது பெண்கள் மயக்கிலேதான் எனப் புராணம் கூறுகிறது. இவர்களின் வரலாறுகளைக் கேட்டறிந் தாவது, ஆடவரும், பெண்களும், இனியாவது உணர்ந்தாலே போதும்.

ஒரு சமயம் கயிலையில் உமாதேவியே, சிவனிடம் ஏன் உங்களைச் சதாகாலமும் தொழும் சிவனடியார்களுக்கு எந்த வரமும் கொடுக்கக் கூடாதா? என வினவ, எம்பெருமான்,

இவர்களுக்கு இந்திரபதவியும் நீண்ட ஆயுளையும், புத்திர பாக்யமும், நோயற்ற வாழ்வும் தருகிறேன் என்று திருவாய் மலர்ந்துள்ளார். என்ற போதிலும், எல்லாச் சிவனடியார்களும், இறைவரிடம் அவரவர்க்கேற்ற வரத்தினை அருள வேண்டு மென்று கேட்டுக் கொண்டதாகப் பெரிய புராணத்தில் எங்கும் குறிப்புகள் காணவில்லை, அதற்கு மாறாக, இறைவனது திருடிகளில் இரண்டறக் கலந்து, மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்ததாகவே அறியப்படுகிறது.

உழைப்பின் அலுப்பால் மக்கள் உறக்கத்தில் தம்மை மறந்து இறைவனையும் கனவில்கூட காண இயலாது மறந்து விடு கின்றனர். திருநீலகண்டரோ எல்லாவற்றையும் மறந்து தன்னுள் தலைவனைக் (இறைவனை) கண்டு அவன் திருவடிக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டு வாழ்ந்தவராவர். அங்ஙனம் அவர் வாழ்ந்து காட்டியதால் அவரைப்பற்றித் தெய்வச் சேக்கிழார் ''நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கார்'' எனக் கூறுகின்றார். ஐம்புலன்களையும் அடக்கி வாழ்ந்ததோடு, தம் மனைவியிடம் அன்புறு புணர்ச்சியின்மை, அயலறியாமை வாழ்ந்தார், இவர் சிற்றின்ப வாழ்க்கையை வெறுத்ததாலேயே, அதோடு தொடர்புடைய பொன்னாசையும், மண்ணாசையும் இவரிடம் தோன்ற வாய்ப்பில்லாது போய்விட்டது.

இதனைக் குறித்து, ''எல்லாம் அற என்னையிழந்த நலம் சொல்லாய் முருகா'' என அருணகிரியார் கந்தரனுபூதியில் பாடியுள்ளது, எப்படி எனத் தோன்றும், எல்லாவற்றையும் மறந்து உறங்கும்போது, நமக்கு ஆறுதல் கிடைப்பதைக் கண்கூடாக அறிகிறோம். எத்தனையோ வேதனைக்களுக்கிடையே நின்று புழுவைப்போல் துடிக்கும் ஒருவன் கண்ணயரும்போது ஆறுதல் பெறுகிறான்.

பசியில்லாத ஒருவனை நோக்கி, இந்த உணவை அருந்தாதே என ஆணையிட்டால், அவனுக்கு அது சிரமமாகுமா?

மிகப் பசித்த ஒருவனை நோக்கி இந்த உணவைச் சாப்பிடாதே என்று ஆணையிடும்போது அவன் உணவை வெறுத்திருப்பதே பெருமையும், அருமையும் ஆகும். நீலகண்டர் திருவினும் உருவின் மிக்க மனைவி இருந்தும்கூட ஒரு பரத்தையை விரும்பினார். திருநீலகண்டர் மனைவி இயல்பான தோற்ற முடையவள் எனக் கூறாது, திருவினும் மிக்க அழகுடையவள் என இதையும் சேக்கிழார் குறிப்பிட்டதற்குக் காரணம் உண்டு. ஆண்களின் ஒழுக்கக் கேட்டை நியாயப்படுத்த நினைக்கும் பலர் "மனைவியிடத்து உள்ள குறையே காரணம் எனப் பழிச்சுமத்துவது இயல்பாகவே அமைந்துவிட்டது. இப்படி ஒரு பழி வரக் கூடாது என்று எச்சரிக்கையாகவே, அவரது மனைவியைப்பற்றி விளக்கம் முதலிலேயே கொடுத்து விட்டார். அவருடைய சிற்றின்ப உணர்ச்சியெனும் புயலினால் அலைந்தது நம் கதாநாயகருக்கு ஒரே ஒரு பலவீனம், எந்த உயிரின் தலையிலும் இயற்கை எழுதி வைத்த இயல்பான சபலம். ஒழுக்கம் என்பதாகச் சமூகம் கட்டி வைத்த வேலிகளை விலக்கிக் கொண்டு வெளியே போய் வருகிற வெள்ளாட்டுப் புத்தி. ஆண்மை அக்ரமம் பரத்தையை அணைந்ததால்தானே, வாழ்நாள் முழுவதும் பெண்நலமுறாது நிற்கும் தன்மை ஏற்பட்டது, இருப்பினும் அதனினும் பன்மடங்கு பக்தி இறைவன்மீது இருந்தது, அதனால் அவருடைய இறையன்பு வேகம் மாதர்பால் இருந்த சிற்றின்ப வேகத்தை வென்றது, இவரைப்போன்று புலன்களை வென்றவர், 5 கண்டத்திலும் இல்லை. அதனால் அவரை "பேதியா ஆணை கேட்ட பெரியவர்" எனச் சேக்கிழார் புகழ்கின்றார். இறைவனும், "வென்ற ஐம்புலனால் மிக்கீர்" என இவரை அழைத்துப் பெருமை செய்கின்றார்.

நரை, தீரை, மூப்பு என்பது தேவர்கட்கும் உண்டு, அவைகளை நீக்கப் புலன்களை அடக்க வேண்டும், இதனை அருணகிரியார்,

*" யானாகிய என்னை விழுங்கிவெறும்*
*தானாய் நிலைநின்றது தற்பரமே"*

எனக் கந்தரனுபூதியில் பாடியுள்ளதைக் கவனிக்கலாம். இனி கதைக்கு வரலாம்.

ஒரு நாள் , நீலகண்டர் ஆலயம் சென்று திரும்பிய சமயம், பொது மகள் ஒருத்தி எச்சில் பாத்திரம் கழுவி, வெளியே ஊற்றினது அவ்வழியே சென்ற திருநீலகண்டர்மீது பட்டது, அதைக் கண்டு மனம் தாளாது, அவரை உள்ளே அழைத்து அவர் மேல் பட்டிருந்த எச்சில் உணவை நீக்கி, புத்தாடை அணிவித்து சந்தனம் போன்ற வாசனைப் பொருள்களைப் பூசி அனுப்பினாள். இப்படி கதை வளர்கிறது. உபமன்யூ விலாசம் இதன் பிறகு அன்னாரின் மனைவி அவரை ஒதுக்கினாள் என்கிறது. அவ்வாறு ஆசையைத் துறப்பது திருநீலகண்டருக்குப் பெருமையாகாது என்பதே சேக்கிழாரின் கருத்து, குற்றமே புரியாத திருநீலகண்டரைக் குற்றம் புரிந்ததாக மனைவி நினைத்து வெறுத்திருந்தால் அவரது கற்பு நெறி என்னவாகும்? சேக்கிழார் தமது வரலாற்றில் இவ்வாறு கூறவில்லை. இன்பத் துறையில் எளியரான திருநீலகண்டரின் உள்ளம் உண்மையாகவே ஒரே ஒரு முறை தவறி விட்டது எனப் பெரியபுராணம் கூறுகிறது. வீட்டில் விதவிதமான சாப்பாடு ருசியாகச் செய்திருந்தாலும், ஓட்டல் சாப்பாடு என்று நாக்கைச் சப்புகொட்டும் நபர்கள் மாதிரி, திருநீலகண்டரும், இளமை மீதூற இன்பத்துறையில் எளியரானார், அதாவது வேலியைத் தாண்டும் வெள்ளாடு, இதுதான் தெய்வச் சேக்கிழாரின் எழுத்தாளர் பண்பு, திருநீலகண்டர் பரத்தையர்கள் மேல் விருப்பமுடையவர் என்பதைக் கொச்சையாகக் கூறாது கோடிட்டுக் காட்டி விட்டு அடுத்த செய்திக்குப் பயணமானார்.

இவர்களிருவரும் இவ்வழக்கை நீதிமன்றத்தில் வாதாட நேர்ந்தால், இன்றைய துப்பறியும் நாவலாசிரியர் யாரேனும், திருநீலகண்டர் கதையை எழுத நேர்ந்தால், அவர் எங்கே எப்படி

எப்படி கெட்டுப் போனார் என்பதை விவரமாக, சுவைப்பட குறைந்தது 20 வாரங்கள் எழுதி இலக்கியச் சேவை புரிந்துவிட்டு, படிக்கிறவன் மனம் பாழான பிறகு இறைவனருளால் திருநீல கண்டர் ஞானியானார் என்று கடைசி வாரம் கதையை முடிப்பார். சேக்கிழார், வாசகர்களின் வாழ்வை வீணாக்கித் தம் வயிறு வளர்க்கும் நாலாந்தர எழுத்தாளர் அல்லவே. இன்ப நாட்டம் வலிமை பெற்றது, அவர் மன உறுதி எளிமை பெற்றது எனும் வார்த்தைக் கோவையில் வழுக்கி விழுந்த வரலாற்றை ஒளித்து வைத்தார். அதேசமயம் வாசகர்களை உணரவும் செய்தார், ஒரு நாள் திருநீலகண்டர் பரத்தைபால் நண்ணி, பொருளையும், மகிழ்ச்சியையும் பண்டமாற்று செய்து கொண்டு வீட்டுக்குள் நுழைந்தார், சாமர்த்தியமாக அவர் மறைத்துக் கொண்டாலும், இவரது மனைவியின் உள்ளுணர்வே கண்டு பிடித்துக் கொடுத்து விட்டது. பரத்தையரிடம் சென்று வந்த கணவனை விழிகளால் அளந்தார். விலகினார். விலகினார் உடலாலும், உள்ளத்தாலும்; காரணமமான உணர்ச்சி என்கிறார் சேக்கிழார். அழகில் மிகுந்த தாம் இருக்க தம்மை விலகி வேறொருத்தி அழகு தேடி அணைத்தது தம் அழகுக்கு அவமானம் என்ற மான உணர்ச்சியா? தன்னிடம் உள்ள உணர்ச்சி கணவன்பால் அந்த நாணம் இல்லையே என்கிற அவமான உணர்ச்சியா? இல்லற நெறியில் கணவனது அவமானம். தன்னுடைய அவமானம், கணவன் பழி தன் பழி என்றாகிறபடி மேலிட்டுக் கொண்ட மான உணர்ச்சியா? இது கணவனிடம் குற்றம் காணும் மனைவியை நீதிபதி ஸ்தானத்தில் நிறுத்துமே தவிர, நெருக்கத்துக்கு உதவாது.

இவர்களது வாழ்க்கை வைராக்யத்தோடு பல ஆண்டுகள் கழிந்தன. முதுமையும் தேடி வந்தன, இதனை அறிவிக்க வந்த சேக்கிழார் ஒரு புரட்சி செய்கிறார்.

*" வளமலி இளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து*
*தளர்வொடு சாய்ந்தும் அன்பு தம்பிரான்*
*திறத்துச்சாயார்"*

இப்பாடலில் வடிவுறு மூப்பு வந்து எனப் பாடியதில்தான் சேக்கிழாரின் புரட்சி வெளிப்படுகிறது. மூப்பு என்றால் முதுமை. அழகு இளமையில் இருக்கும். இதுதான் உலக நியதி, ஆனால் சேக்கிழாரோ, நீலகண்டரை மூப்பில் அழகு எனக் கூறியதில் உள்ள கருத்தை ஆராய்வோம், தெய்வத் தமிழில் பாடிய பாடல் அல்லவா அது? உதாரணத்திற்கு வாழைக்காயையும், வாழைப்பழத்தையும் பார்த்தால் விளங்கும், காய அழகாய் இருக்கிறதா? பழம் அழகாய் இருக்கிறதா? இதே போன்று மாங்காய் அழகா? மாம்பழம் அழகா? ஆகவே பழம் என்றால், அழகாயிருக்கும். கிழம் என்றால் எப்படி இருக்கும்.

காந்தியடிகள் சிறுவயதிலிருந்து கிழவராக உள்ளது வரையில் உள்ள புகைப்படங்களைப் பாருங்கள், அவருக்கு இளமையில் அழகு இல்லை, முதுமையில் பொக்கை வாயராக இருக்கும்போது அழகாய் இருக்கிறார். அதே போன்று இராமகிருஷ்ணர் பட்டினத்தடிகள், தபோவனம் ஞானானந்த ஸ்வாமிகள் பாம்பன் குமரகுருதாஸ் சுவாமிகள் போன்றோர் முதுமையில் தரும் காட்சியே ஓர் அலாதி.

பண்பட்ட வாழ்வியலில் இளமையைவிட முதுமையில் கனிவு இருக்கும். பழுப்பது வேறு, வெம்புவது வேறு. இன்றைக்கு உலகத்தில் பழுத்தவர் குறைவு. வெம்பியவர் அதிகம். சிலர் முதுமையில் அழகாயில்லை என்றால் நன்றாகப் பழுக்கவில்லை ; வெம்பல் என்றே சொல்லலாம்.

சிவனே இவரது வாழ்க்கையின் திறத்தை உலகுக்கு உணர்த்தவே, புதுவிதமாக ஒரு நாடகம் நிகழ்த்த எண்ணினார். தாமும் மனைவியும் தீண்டுவதில்லை என்பது யாவர்க்கும் தெரியக்கூடாது என எண்ணியே வாழ்ந்ததை உலகுக்கு

அறிவிக்கவே, வயோதிக சிவயோகிபோல் வந்து, தமிமிடமிருந்த ''திருவோட்டைப் பத்திரமாக வைத்திரு, திரும்பி வந்து கேட்டதும் கொடு'' எனச் சொல்லி விட்டு மறைந்தார். பின்பு அவ்வோட்டை அவரிடம் இருந்து மறைக்கவும் செய்தார்.

பொதுவாக மனைவியின் சிறுமையைப் பறைசாற்றி மகிழும் ஆண்களும், கணவனின் கொடுமையைத் தூற்றி இகழும் பெண்டிர்களும், திருநீலகண்ட நாயனார் தம்பதிகள் தங்களுக்குள் ஏற்பட்ட மனித்தாபம் அயலார்க்குத் தெரியாது இரகசியமாகக் காத்த பெருமையை ஒரு பாடமாக உணர்ந்து வாழ்க்கை நடத்துவதே சிறப்பு, திருநீலகண்டருக்கு உடலுறவு கொள்ள அழகே வடிவான மனைவியிருந்தும் கூட, பரத்தையர்பால் மனம் நாடினார். இதனையே கருவூலமாகக் காட்டி இவரது பக்தியின் பெருமையை உலகவர் அறியவே, இறைவனே ஆடிய நாடகமா? தில்லையில் ஆடியது போதாது என்று, இவரிடமும் ஆடிய நாடகமா? எது எவ்வாறாயினும், அதனுடைய விளைவேதான் தன் வாழ்நாள் முழுவதும் பெண்ணலமுறாது வாழ வேண்டி ஏற்பட்டது. இருப்பினும் நீலகண்டர், சிற்றின்பத்தைவிட பல மடங்க எம்பெருமான் மீது அன்பு செலுத்தியதால் சிற்றின்பத்தை எளிதில் வெல்ல முடிந்தது. திருநீலகண்டர் மனைவி, கணவனையே குருவாகவும்,தெய்வமாகவும் பாவித்து, காலை எழுந்ததும் கணவனைத் தொழுது எழுவாள் என்கிற தமிழ் மறைக்குப் பொருந்தும் வகையில் வாழ்ந்து வரலானார்.

இன்று அப்படி மனைவிமார்கள் கணவனை வணங்கு கிறார்களா என்று யாரும் என்னைக் கேட்க வேண்டாம் வணங்கத் தக்க நிலையில் கணவன் இருக்கிறானா என்று கேட்டுப் பார்த்தால் சரியான விடை கிடைக்கும். கோபப் புண் என்றால் 'காலம்



அருமருந்தாகும்' எனக் காத்திருந்தது, இளமையில் அனுபவிக்கும் சுகத்தைத் துய்க்காது காத்திருந்தார். ஒரு நாள் முறுக்கேறிய காளைப்பருவம் ஆனதால், நீலகண்டர் சிற்றின்ப வேட்கை எனும் உணர்ச்சிப் புயலில் சிக்குண்டு, ஊடல் தீர்த்தாள் என்ற வார்த்தையால் சேக்கிழார் கூறுகிறார். திருநீலகண்டரிடம் இன்ப உணர்வுவயப்படும் ந்துதலே குறையாக இருந்தது. இவ்வியாதியை மனைவியைத் தவிர வேறு யாரால் தீர்க்க இயலும், அதனால்தான் நீலகண்டனர் மாற்றுக்குறையாக மனம் கொண்டவார்க்க, சிவனார், அருந்தததிக்குக் கற்பினுக்கு மேலான அழகு பொருந்திய மனையைக் கருவூலமாக ஆக்கினார், திருநீலகண்டர், மனைவியின் கற்பே காரணமாக இறைமோட்சம் கிட்டியது என்றால் மிகையாகாது.

இல்லற வாழ்வில் மனைவியரின் ஒத்துழைப்பு இருந்தால்தான், இகவாழ்விலும், பாவாழ்விலும் மேன்மை யடைய முடியும் என்னும் மனையாளது மாட்சியை திருநீலகண்டர் வரலாறு

# 33. மூர்த்தி, தலம், தீர்த்தம்

*" மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்*
*வார்த்தை சொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே!"*

என்பார் தாயுமான சுவாமிகள்.

முக்திக்குத் தடையாக இருக்கும் மும்மலங்களை எரித்து மானிடப் பிறவியை உய்விக்கும் முழுமுதற் கடவுளாகிய சிவன் கோயில் கொண்டுள்ள புனிதத் தலங்களுள் காசித் தலம் இம்மூன்றாலும் தனிச் சிறப்பு பெற்றுள்ளது. இத்தகு சிறப்புவாய்ந்த காசியை அடியேனும், என் மனைவியும் சென்றுவர உத்தேசித்து, கடந்த நவம்பர் 29ம் தேதி திங்கள் வாரணாசிக்குப் புகைவண்டி மூலம் பயணமானோம்.

இந்தியா மட்டுமின்றி, அமெரிக்கா, கம்போடியா போன்ற நாடுகளிலும் சிவலிங்க வழிபாடு பரவியிருந்தமைக்கு, மாணிக்கவாசகரே

*" தென்னாடுடைய சிவனே போற்றி*
*எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"*

எனப் பாடியுள்ளமை சான்று.

வாரணாசியை 31-10-2001 அன்று அடைந்தோம். இத்தலம் 'உ.பி.'யில் உள்ளது. கண்ணன் பிறந்த மதுராவும், இராமர்

பிறந்த அயோத்தியும் பாண்டவர்கள் ஆண்ட அஸ்தினாபுரமும் உ.பி.யில்தான் உள்ளது. காசிமுத்தி தலங்களில் ஒன்றாகும். 12 ஜோதிர்லிங்கங்களுள் ஒன்றாகும்.

பண்டைய நாளில் காசிக்குச் செல்லப் போக்குவரத்து வசதிகள் இல்லாததால், கால்நடையாகப் போவார்கள். வழியில் திருடர்கள் பயமும், உடல் நலத்தாலும், மொழிப் பிரச்சினைகளாலும் பல இன்னல்களுக்கு ஆளாக நேரிடுவதை, 400 வருடங்களுக்கு முன்னரே, நடைப்பயணமாகச் செல்லும் அடியார்கள் திருப்பனந்தாள் மடத்தில் பணத்தைச் செலுத்தி, காசியில் குமர குருபரர் மடத்தில் பெற்றுக் கொள்ள அன்றே வசதி ஏற்படுத்தியிருந்தது. இதற்கு "தரிசன உண்டியல்" எனப் பெயரிடப்பட்டது. இன்றைய நாளில், உள்ளூரிலேயே பணத்தை வங்கியில் செலுத்தி வேற்றூருக்கு வங்கி வரைவோலை பெற்றுச் செல்லும் வசதிகளுக்கு முன்னோடியாக நம் முன்னோர்கள் பழக்கத்தில் கொண்டிருந்தனர் என்பதை நினைத்தாலே உள்ளம் மகிழ்கிறது.

இன்றைய நாளில் சொல்வழக்கில் காசி–ராமேஸ்வரம் எனக் கருதப்பட்ட போதிலும், காசி, கன்னியாகுமரி என்று கருதுவது தான் மரபு. இதனைப்பற்றி சிலப்பதிகாரம், மணிமேகலையில் காணலாம். அப்பர் தேவாரம், "கங்கை ஆடில் என், குமரி ஆடில் என்" கூறுகிறது. வடக்கே மூன்று ஆறுகள் கலப்பதற்கு இணையாக தெற்கேயும் கன்னியாகுமரியிலும் 3 கடல்கள் கலக்கின்றன. இதனால் வடக்கும் தெற்கும் மக்களால் இணைக்கப்படுவதே இத்தல யாத்திரையின் நோக்கம் ஆவதை அறியலாம். இதனை உறுதி செய்ய, அரு. சோமசுந்தரனார் "காசி முதல் குமரி வரை உனது எல்லையே, கால் நடந்து வந்தவருக்குக் கவலை இல்லையே" எனப் பாடியுள்ளமை கவனிக்கத்தக்கது.

1-11-2001 வியாழனன்று காலை கேதாரகட்டத்தில் ஸ்நானம் செய்துவிட்டு, கேதாரீஸ்வரரை எங்கள் கையினாலேயே

அபிஷேகம் செய்தது, கிடைத்தற்கரிய பாக்யமேயாகும். அங்குள்ள குமரகுருபரர் மடத்துக்குச் சென்று குமரகுருபரர் பாடிய சகலகலாவல்லி பாடல்களைப் பாடினேன். என்னையுமறியாது கண்களில் நீர்மல்கியதைக் கண்ட ஏனையோர் காரணம் கேட்டனர் – விளக்கமாகக் குமரகுருபரர் சரிதத்தைச் சுருங்க சொன்னேன்.

குமரகுருபரர் தலயாத்திரையின்போது, காசிக்கு வந்ததும், மடம் நிறுவ முகலாய அரசரிடம் நிலம் கேட்டார். ஹிந்தி தெரியாத அவர் இவரைச் சிறிதும் பொருட்படுத்தாது அனுப்பியதும், ஸரஸ்வதியைத் துதிசெய்து, சிங்கத்தின் மேல் ஏறி, அரசனிடம் ஹிந்தியில் பேசியதும், அரசனே வியந்து, வேண்டுவேனவற்றைக் கேளுங்கள் தருகிறேன் என்று கூறத் தனக்கு மடம் கட்ட நிலம் தேவை என்றார். எவ்வளவு என்று கேட்டதும், என்றுமே பறக்காத கருடன் ஆகாயத்தில் பறந்து சுற்றி வந்ததைக் கண்டு அரசன் அவ்வளவு பரப்பு நிலத்தையும் தந்தான் என்றே கூறினேன்.

அன்று மாலை அருத்தஜாம பூஜைக்குச் சென்றோம். இரவு திரும்பும்போது மணி 10.30க்கு மேல் ஆகிவிட்டது. ஒரே இருட்டு. பயந்தோம். காசி என்றால் ஒளி என்று பொருள். ஆனால் இருட்டாக இருந்ததை நினைத்து, காசி மயானத்தில் நடனம் புரிவதை யாவரும் பார்க்கக் கூடாது என நினைத்து, மின்விளக்குகள் எல்லாம் எரியாது செய்து விட்டானோ என்னவோ?

மேலும் பிரகாரத்தில் வலம் வரும் சமயம் பிரகாரத்தில் தரையிலே வெள்ளிக் காசுகளையும், பொன் காசுகளையும் பதித்து இருந்ததைக் கண்டதும், என்னுடன் வந்த அடியார்கள் இது என்ன அதிசயம்? இலட்சுமியைக் காலில் மிதிக்கலாமா? என வினவ, அடியேன், ''காசு கால்தூசுக்குச் சமம்'' என்பதை உலகினர்க்கு அறிவிக்கவே இவ்வாறு காட்டியுள்ளனர் என விளக்கம் கூறினேன். எல்லோரும் உண்மையை உணர்ந்து பெருமிதமடைந்தார்கள்.

2-11-2001 வியாழனன்று, மணிகர்ணிகா கூட்டத்தில் ஸ்நானம் செய்வது மிகவும் விசேடம் எனக் கூறக் கேட்டு அங்கு சென்று நீராடினோம். மஹா விஷ்ணு சக்கரத்தால் ஒரு திருக்குளத்தை உண்டாக்கி, அங்கு சிவனை நோக்கித் தவம் செய்ததாக வரலாறு கூறினர். அத்தவத்தை ஏற்று சிவனே மெச்சிச் சிரக்கம்பம் செய்தார். அத்தருணத்தில், அவருடைய திருச் செவியில் இருந்த குண்டலத்தின் நாகமணி நழுவி குளத்தில் விழுந்தது. அதனால் இக்குளத்தை மணிகர்ணிகா என அழைக்கலாயினர் என அறியக் கேட்டேன். உடனே அவ்விடத்தில் ஸ்நானம் செய்தோம். அதன் பின்பு கங்கையும் மணிகர்ணிகாவில் கலந்ததால் மேலும் சிறப்பு பெற்றது என்றனர். இவ்விடத்தில் உச்சி வேளையில் தேவர்கள் நீராட வருவதாகவும் கூறியதைக் கேட்டு, நாங்களும் கடும் வெப்பத்தைத் தணிக்க முடியாது, தூய்மையான உள்ளத்தோடு உச்சி வேளையில் நீராடினால், நாமும் தேவர்களாக மாறாவிட்டாலும், ''பெற்றலும் பிறந்தேன், இனி பிறவாத் தன்மை வந்து எய்தினேன்'' எனும் தேவாரத்திற்கு ஏற்ப இறைவன் அருள் புரிய வேண்டும் எனப் பிரார்த்தித்துக் கொண்டு நீராடினோம்.

3-11-01 அன்று துண்டி விநாயகரைத் தரிசித்து விட்டு காசியில் பார்க்க வேண்டிய முக்கிய இடங்களையும், காசிராஜா கோட்டையையும், சாரனாத் என்ற இடத்தையும், வாடகைக் காரில் சென்று கண்டோம். மேலும், காசி விஸ்வநாதர் ஆலயத்திற்கு எதிர் புறத்தில் சற்றுத் தள்ளி, மேற்கு நோக்கி வீற்றிருக்கும் விசாலாட்சியையும் தரிசனம் செய்தோம். அந்தச் சிறிய பாதையில், ஜன நெருக்கடியில் இவ்வாலயம் மிகவும் சிறிய கட்டிடத்தில் அமைந்துள்ளதைக் கண்டு வியந்தேன். மதவெறி கொண்ட வேற்று அரசர்களின் ஆட்சி நிகழ்ந்த காலத்தில் அச்சத்தினால் கீர்த்தி வாய்ந்த மூர்த்திகளை ஆங்காங்கு அஞ்ஞாதவாசம் போல் ஒளித்தும், மறைத்து வைத்தும் வழிபட்ட காரணத்தினால் ஆங்காங்குள்ள சக்திவாய்ந்த மூர்த்திகளின் கோயில்கள்

தென்னாட்டில் உள்ளது போன்று விசாலம் இன்றி, கருங்கிய இடத்தில் அமைந்திருக்கிறார்கள்.

காசியில் 5 அதிசயங்கள் உள்ளதைக் கூறுவது இங்கு மிகவும் அவசியமாகும் 1. பிணம் நாறாது. 2. பூ மணக்காது, 3. மாடுகள் முட்டாது, 4. பல்லி சொல்லாது, 5. கருடன் பறக்காது.

அன்று மாலை 6.30 மணி அளவில் விஸ்வநாதர் கட்டத்தில் நிகழும் ஆர்த்தி பூஜையைக் காணும் பாக்யம் பெற்றோம். இது போன்று காட்சி இந்தியாவில் எங்கும் நிகழ்வதாகத் தெரியவில்லை. கங்கையின் கரையில் சுமார் 400 அல்லது 500 அகல் விளக்குகள் தொன்னை இலையில் இட்டு ஆற்றில் விட்டதும், வரிசையாக எரிந்து கொண்டு செல்வது, அனைத்து விளக்குகளும் எம் பெருமானையே சரணடைவதுபோல் தோன்றியது. இது காண வேண்டிய இறைக்காட்சியில் ஒன்று.

4–11–01 ஞாயிறு காலை கேதாரீஸ்வரரைத் தரிசித்து விட்டு, பேருந்து மூலம், விந்தியாசல வாஹினி என்னும் தலத்தை மதியம் 2.30 மணிக்கு அடைந்தோம். அங்கு சிறிய மேட்டுப்பாங்கில், பார்வதியின் அங்கத்திலிருந்து மூக்குபாகம் விழுந்ததாகவும், சத்தி பீடங்களில் ஒன்று எனவும் கேள்விப்பட்டு, ஆலயம் சென்று வணங்கி விட்டு, மறுபடியும் மற்றோர் பேருந்து மூலமாக அலகாபாத்துக்குப் பிரயாணம் செய்து, இரவு 7 மணிக்கு நகரத்தார் சத்திரத்தில் தங்கினோம்.

மறுநாள் 5–11–01 அன்று திங்கள் காலையில், திரிவேணி சங்கமத்தில் ஸ்நானம் செய்ய, படகில் ஓர் ஆளுக்கு ரூ. 5–/ வீதம் கொடுத்து, கங்கையும் யமுனையும் கலக்குமிடத்தில் ஸ்நானம் செய்தோம். அங்கு சரஸ்வதி நதி கண்ணுக்குத் தெரியாமல் ஓடி அந்தர்வாஹினியாக ஊற்று எடுத்து வந்து கலப்பதாக அறிந்துகொண்டோம். பிறகு கரையில் உள்ள, காஞ்சிப் பெரியவர் நிறுவியுள்ள ஆலயத்தையும், அனுமார் ஆலயத்தையும் தரிசித்துச்

விட்டு, அன்று மாலை 6.30 மணி அளவில் இரயில் மூலமாகச் சித்ர கூடத்துக்குப் புறப்பட்டோம்.

6-11-01 அன்று காலை, தனியார் ஆட்டோ ரிக்ஷா ஒன்றை ஏற்பாடு செய்து கொண்டு, காம்தாநாத் ஆலயத்தையும் மலையையும் (5 கிலோமீட்டர் தூரம்) கிரிவலம் வந்து விட்டு, இங்குதான் பரதர் இராமரைச் சந்தித்தாக இராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது.அடுத்து பயஸ்வினி நதிக்கரையில் இருந்து சிறிது தூரத்தில் உள்ள ஜானகி குண்டம் அடைந்தோம். ஜானகி குண்டம்தான் ஜானகி குளித்த இடம்.

இதற்கு அருகில் உள்ள அகண்ட பாறையின் மீதுதான் இராமபிரானும் சீதாப் பிராட்டியும் ஏகாந்தமாக அமர்ந்து இருந்தனர். அச்சமயம், காகம் ஒன்று சீதையின் தொடையைக் கொத்தி, பிறகு ஸ்ரீராமனின் அஸ்திரத்தால் ஒரு கண்ணை இழந்ததாகக் கேள்விப்பட்டேன். இங்கு இராமபிரானின் பாத சின்னம் தெரிவதைக் கண்டு, புளகாங்கிதமடைந்தேன். அடுத்து ஜடாயுதவம் செய்த ஆஸ்ரமமும், ஹனுமான் தாரா என்ற இடத்தையும் கண்டு வணங்கிவிட்டு, அதற்கு மேல் பாகத்தில் சீதையின் சமையலறையும் பார்த்தோம்.

அடுத்து 14. கி.மீ. தூரத்திலுள்ள அனுசூயா ஆஸ்ரமம் சென்றேன். இங்கு 3 சக்திகள் சோதிக்க எண்ணி, மும்மூர்த்திகளையும் அநுசுயாவிடம் அனுப்பி, நிர்வாணமாக வந்து உணவு ஊட்ட கேட்டதும், மூவரையும் குழந்தைகளாக்கி, அநுசுயா உணவு ஊட்டியதையும், மேலும் நாரதர், இரும்புக் கடலையைக் கொடுத்து வேக வைத்து வாங்கிய இடமும் கண்டேன். அடுத்து, 19 கி.மீ. தூரத்திலுள்ள குப்த கோதவரி எனும் அருவி நீர் சுரந்து கொண்டிருக்கும் மலைக்குகைக்குச் சென்றேன். கையில் டார்ச்சு விளக்கின் உதவிகொண்டு தரிசித்தேன். அங்கு இடையில் ஒரு பெரிய பாறை உள்ளதையும், இங்கு, சீதை குளித்த இடம் மிகவும் மறைமுகமாக இயற்கையில் அமைந்திருந்ததையும்

கண்டு வியந்தேன்.

இவைகள் யாவையும் காணக் காண, இந்த இடத்தைச் சித்திரகூடம் எனக் கூறுவதைவிட விசித்ரக் கூடம் என்றே கூறினால் பிழை என்ன இருக்கப் போகிறது எனத் தோன்றிது.

7–11–01 அன்று மாலை சித்ர கூடத்திலிருந்து புகைவண்டி மூலமாக போபால் சென்றடைந்தோம். 8–11–01 காலை 6.30 மணிக்குச் சென்றடைந்ததும், அங்கிருந்து உஜ்ஜயினிக்குப் புறப்பட இருக்கும் இரயிலில் புறப்பட்டு 11–30 மணி அளவில் சேர்ந்தோம், இந்த உஜ்ஜயினியே மகாபாரதத்தில் அவந்தி எனக் கூறப்பட்டுள்ளது. உடனே ஷிப்ர நதியில் ஸ்நானம் செய்துவிட்டு, மகாகாலேஸ்வரர் ஆலயத்திற்குச் சென்றோம்.

ஆதிகாலப் பூகோள சாஸ்திரப்படி பூமியின் முதலாவது தீர்க்கரேகை, உஜ்ஜயினியில் மகாகாலேஸ்வரர் நிலை கொண்டுள்ள புள்ளியின் வழியாகத்தான் செல்கிறது. இதை வைத்துத்தான் காலக்கணக்கீடு செய்யப்பட்டது. பாரதத்தைப் பொறுத்தவரை உஜ்ஜயினியில் உள்ள நேரத்தின் அடிப்படையில் தான் மணிப்பொழுது கணக்கிடப்பட்டது. அதாவது, உஜ்ஜயினிதான் பாரதத்தின் கிரீன்வீச்சாக விளங்கி வந்தது. பழைய காலத்தில் பாரதம் ஞானத்திலும், கலாசாரத்திலும் மற்ற நாடுகளுக்கெல்லாம் வழிகாட்டியாக விளங்கியதால் மேற்காசிய நாடுகளும், 'கிழக்காசிய நாடுகளும்கூட உஜ்ஜயினி தீர்க்க ரேகையையே அடிப்படையாக ஏற்று, நேரக் கணக்கை அமைத்துக் கொண்டன. இதன் காரணமாகத்தான் உஜ்ஜயினியில் சுயம்புவாக எழும்பிய ஜோதிர்லிங்கம் காலத்தின் சின்னமாக மகாகாலேஸ்வரர் என்ற பெயரில் வழிபாட்டுக்கு உரியதாயிற்று. இவைகளை எல்லாம் இறைவனே, மகாஞானேஸ்வரராக அடியேனுக்குத் தோன்றி அருள் புரிந்தான் என எண்ணியே பெருமிதமடைந்தேன்.

அங்கிருந்து சென்று கபாலிகள் வழிபடும் காலபைரவர் கோயிலையும், விக்ரமாதித்தன் வழிபட்ட ஹார்சித்தி தேவியின் ஆலயமும் தரிசித்தோம். தட்சயக்ஞத்தின்போது சிவபெருமான் வீசி எறிந்த தேவியின் விலா எலும்பு விழுந்த இடம்தான் ஹார்சித்தி தேவி ஆலயமாக இன்று விளங்குவதைத் தரிசித்தேன். கவி காளிதாசன் வழிபட்ட கர்காளிகா தேவியை ஊருக்கு வெளியே 2 மைல் தொலைவில் கண்டு தரிசித்தோம். கண்ணபிரான் பிரம்மசாரியாகக் குருகுலவாசம் புரிந்த – சுதாமருடனும், பலராமருடனும் கல்வி பயின்ற சந்தீபனி மகரிஷியின் ஆஸ்ரமத்தையும் கண்டுகளித்தோம்.

பிறகு அன்றிரவு 9–மணி அளவில் போபாலுக்கு வந்து, இரவு தங்கிவிட்டு, மறுநாள் 9–11–01 காலை தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் புகைவண்டி மூலம் சென்னைக்குப் புறப்பட்டு 10–11–01 அன்று காலை இனிதே வந்தடைந்தோம். இவ்வாறு வடநாட்டு யாத்திரை இறைவன் அருளால் இனிதே முடிவுற்றது.

—

# 34. இமாலயச் செலவு

அடியேன் இளமையிலிருந்து, வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளைக் குருவாக ஏற்று திருப்புகழ் பாடும் பணிய பணியாகப் பெற்றதன் பயனே, தன் நிழலைத் தானே தாங்கிக் கொண்டிருக்கும், தஞ்சைகோபுரம் போல், முதுமையில் அடியேன் உடலம் தன் ஊழ்வினையைத் தானே அனுபவித்துக் கொண்டிருக்கும் வேளையில், இறை உணர்வு மலர ஆரம்பித்தற்கு அறிகுறியாக ஆன்மீக அரிச்சுவடி ஏட்டில் அடியெடுத்து வைக்கும் பாக்கியம் பெற்றேன்.

இந்தியாவில் வடபகுதியான இமாச்சலப் பிரதேசத்தில் முக்கியத்துவம் வாய்ந்த நவசக்தி பீடங்களை நவராத்திரியில் தரிசிப்பது விசேஷம் என ஆன்றோர்களால் அறியக் கேட்டதன் பயனே, ஒன்பது சக்திப் பீடங்களையும் அடியேன் என் மனைவியுடன் சேர்ந்து தரிசிக்கக் கிடைத்த பேறாகும்.

இமாச்சலப் பிரதேசத்தில் சக்திப் பீடங்களைத் தரிசிக்கச் செல்லும் மார்க்கத்தில் உள்ள புராதனச் சிறப்பு வாய்ந்த சில இடங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்ததால் அவைகளையும் தரிசித்துவிட்டு அதன் அருமைப் பெருமைகளை உங்கள் நினைவிற்குக் கொண்டுவருவது சிறப்பாகும் எனக் கருதுகிறேன்.

முதற் கண் 1997–ஆம் ஆண்டில் அடியேன் என் மனைவியோடு கல்கத்தா செல்ல நேர்ந்த சமயம் கீர்த்தி வாய்ந்த

காளி தேவியையும் தட்சணேஸ்வரத்திலுள்ள இராமகிருஷ்ண பரமஹம்சரின் மடத்தையும் தரிசிக்கும் வாய்ப்பு கிட்டியது, இங்கு வீற்றிருக்கும் கல்கத்தா காளி நவசக்திகளில ஒன்று என்பதாகவும், இங்குதான் சக்தியின் முடிகள் வீழ்ந்த இடம் என்றும் அறியலானோம். அண்மையில் தெய்வீகப் பொலிவோடு வாழ்ந்த ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரும், காளிகாதேவி ஆலயத்தோடு தொடர்பு கொண்டிருந்தார் என்பதையும் அறிந்து கொண்டோம்.

கல்கத்தா – தட்சிணேசுவரத்தில் பவதாரணி என்னும் காளிகோயிலில்தான் இராமகிருஷ்ண பரமஹம்சர் பூஜை செய்யும் பணியை ஏற்றார். இவர் காளி தேவியை நேருக்கு நேர் தரிசிக்க எண்ணம் கொண்டு அக்கோயிலைச் சேர்ந்த பஞ்சவடி என்னும் இடத்தைத் தேர்ந்தெடுத்து அழ்ந்த சிந்தனையோடு இரவென்றும், பகலென்றும் பாராது தியானம் செய்தும் தரிசனம் கிடைக்கப் பெறாததை எண்ணி, காளி கோயிலில் இருந்த வாளால் தன்னை மாய்த்துக் கொள்ள முற்பட்டதும், காளிதேவி கதாதரர் என்னும் இராமகிருஷ்ணருக்குத் தரிசனம் தந்து அருளியதாகச் சரித்திரம் கூறுகிறது. இவ்வரலாற்றினைப் புராணம் எனக்கொள்ளாது, சரித்திரவாயிலான அண்மையில் நடந்து நிகழ்ச்சியாகவே கொள்ள வேண்டும். காளி தேவியையே தன் இதயக்கமலத்தில் வைத்துத் தியானம் செய்ததால் இவருக்கு ஏற்றமும், தோற்றமும் தோன்றலாயின.

4–10–99–ஆம் ஆண்டில் அடியேனும், என் மனைவியும் இறையருள் கூட்ட சென்னையிலிருந்து ஜம்முவிற்குப் புகைவண்டி மூலமாய்ச் சென்றடைந்தோம் அங்கிருந்து 52 கி.மீ. தூரத்திலுள்ள கட்ரா என்னும் இடத்திற்குப் பேருந்து மூலமாய் இரண்டு மணி நேரத்தில் போய்ச் சேர்ந்தோம், அதனருகிலுள்ள திரிகூட மலையில் வைஷ்ணவி தேவியைத் தரிசிக்க எண்ணம் கொண்டோம். திரிகூட மலைமீதுள்ள வைஷ்ணவி தேவியைத் தரிசிக்கும் வாய்ப்பு எங்களுக்கு முதுமையில் கிட்டியது பெரும் பாக்கியம் என்றே கருதினோம். இம்மலைக் குகையில் வீற்றிருக்கும் தேவியின் பீடமும் நவசக்தி பீடங்களில் ஒன்றாகும்

என அங்குள்ளவர்களால் கேட்டு அறியலானோம், மேலும், இவ்விடத்தில்தான் சக்தியின் கரங்கள் வீழ்ந்த இடம் என்றும் கூறக் கேட்டோம்.

இங்குள்ள கர்ப்பக்கிரகம், கற்குகையில் இயற்கையாய் அமைந்துள்ளதைக் கண்டு வியந்தோம், சுமார் 30 அடி தூரம் வரை குகைவழியாய்த் தலையைக் குனிந்தே தரையில் முழங்கால் வரை ஓடும் குளிர்ந்த நீரையும் சகித்துக் கொண்டு சென்றதும், மறுபடியும் இப்பாதையின் நடுவே சுமார் 3 அடி உயரம் உள்ள சிறிய மேடான காற்பாறையின் மேல் ஏறி இறங்கிச் சிறிதும் தூரம் சென்றபிறகே தேவியைத் தரிசிக்கும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்தது. கர்ப்பக்கிரகத்தில் சுயம்பு வடிவத்தில் இருக்கும் மூன்று பிண்டிகளை யே மகாலட்சுமி, மகா காளி (வைஷ்ணவி தேவி), மகா சரஸ்வதி என்பதாக அங்குள்ள பட்டர்களால் அறியக் கேட்டோம்.

இதுபோன்று குகை வழியாக செல்லும்போது முதற்கண் தேவியை வணங்கத் தலைதாழ்த்தியே செல்லும் சம்பிரதாயத்தையும், ஆலயம் செல்லும் முன் கை, கால்களைச் சுத்தம் செய்துகொண்டு செல்லும் முறையினையும் நமக்கு முன் கூட்டியே அறிவிப்பது போன்று இவ்வாலயம் இயற்கையாய் அமைந்துள்ளது நினைக்குந்தோறும் உள்ளம் புல்லரிக்கச் செய்கிறது. தேவியைத் தரிசனம் செய்ய எங்களுக்கு 4 அல்லது 5 நிமிடமே கிடைத்தது, தரிசனம் முடித்து குகையிலிருந்து வெளியே வந்ததும், காரைக்கால் அம்மையார் கைலாயத்துக்குச் சென்று திரும்பியதை நினைவூட்டும் பாணியில் எங்களுக்கும் ஒரு பிரேமை உண்டாயிற்று. இனி மறுபிறவி உண்டு என்றால் உனை என்றும், மறவாமையை எங்களுக்குத் தந்தருள வேண்டுமென வேண்டிக்கொண்டு அங்கிருந்த ஜம்மு மூலமாய் 8–10–99 அன்று டில்லி வந்தடைந்தோம்.

8–10–99 அன்று நாங்கள் டில்லியை அடைந்ததும், வழக்கமாகத் தங்குமிடமாகிய கரோல்பாக்கில் உள்ள ஆரிய சமாஜத்தில் தங்கச் சென்ற சமயம், 45 – வயது மதிக்கத்தக்க ஒரு துறவியைச் சந்தித்தோம். அவர் கடந்த 4 மாதங்களாக இரு சக்கர

மிதி வண்டியிலேயே இராமேசுவரத்திலிருந்து டில்லி வரையிலுள்ள எல்லாத் தலங்களையும் தரிசித்து விட்டு தற்சமயம் இவ்விடத்தில் தங்கி உள்ளதாகக் கூறினார்.

சிரசிலிருந்து இடுப்பு வரை உருத்ராட்ச மாலைகளை அவர் அணிந்திருந்ததைக் கண்டு எங்களுக்கு வியப்பாக இருந்தது. எங்களோடு 8–10–99 வெள்ளி அன்று ஆர்யசமாஜத்திலேயே உடனிருந்து இறை சம்பந்தமான கருத்துகளைப் பகிர்ந்துக் கொள்ளும் வாய்ப்பு கிட்டியது. நாங்கள் தொடங்க இருக்கும் சக்தி பீடங்களின் புனிதயாத்திரையைப்பற்றிக் கேட்டதும் மிகவும் மகிழ்ச்சி அடைந்து, யாத்திரை பூரண நிறைவோடு முடிவு பெற எங்களை ஆசிர்வதித்தது எங்களது பாக்கியம் எனக் கருதினோம்.

எங்களது புனித யாத்திரை அனுகூலமாக நிறைவு பெறவே இத்தகு துறவியின் சந்திப்பு எங்களுக்குக் கிட்டியது போலும் என எண்ணினோம். 8–10–99 அன்று இரவே நாங்கள் டில்லியிலிருந்து கல்கா என்னும் ஊருக்குப் பயணம் மேற்கொள்ளும் தருவாயில் எங்களோடு உடனிருந்து வழி அனுப்ப எங்கள் குருநாதரே இவருடைய உருவத்தில் வந்து துணைபுரிந்ததாக எண்ணி மன நிறைவோடு இமாச்சலப் பிரயாணத்தைத் துவங்கினோம். இதுபோன்ற துறவியின் சந்திப்பு எந்த முன்னறிவிப்பும் இன்றி இறைவனால், அருளிச் செய்யப்பட்டதைப் போகும் வழியெல்லாம் எண்ணி எண்ணி வியந்தோம். அடியேன் அத்துறவியிடம், சக்தி பீடங்களைத் தரிசித்து விட்டு, டில்லி திரும்புகையில் மீண்டும் சந்திக்க வாய்ப்பு அளிக்கும்படிக் கேட்டுக்கொண்டோம். அத்துறவி தமது பயணத்தை டில்லியிருந்து மேலும் தொடரப் போவதாகவும் இறைவன் திருவருள் கூட்டுவித்தால் சந்திப்போம் எனவும் பதில் அளித்தார்.

நாங்கள் 8–10–99 வெள்ளி இரவே சண்டிகர் வழியாக கல்கா என்னும் ஊரை 9–10–99 விடியற்காலை 4 மணி அளவில் அடைந்தோம், உடனே அங்கிருந்து குறுகிய மலைப் பாதையில் புகை வண்டியில் காலை 4.30 மணி அளவிற்கு சிம்லா என்னும்

இடத்திற்குப் புறப்பட்டோம். கல்காவிலிருந்து சிம்லாவிற்குப் பஸ்ஸிலும் போக வசதியுண்டு. கல்காவிலிருந்து சிம்லா ஏறத்தாழ 80 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

மலைப்பாதையில் குறுகிய புகை வண்டியில் காலைப் பயணம் செய்வது இனிமையான அனுபவம் ஆகும். கல்காவிலிருந்து குறுகிய புகைவண்டியில் மலைப் பாதை வழியாகச் செல்லும்போது இருபுறங்களிலும் ஆங்காங்கே மலைப்பகுதியில் உள்ள வீடுகளில் அதிகாலை இருட்டில் மின் விளக்குகள் எரிவது, உமா தேவியே வைரக்கற்கள் பதித்த பச்சைக் கம்பளத்தால் ஆன போர்வையை அணிந்திருந்ததுபோல் காட்சி அளித்தது.

இத்தகு காட்சியைக் காண்பது, இறைவனால் எங்களுக்கு அளிக்கப்பட்ட வரப்பிரசாதம் என்றே கருதினோம். ஒரு முறை பயணம் செய்தாலே வாழ்க்கை முழுவதும் இயற்கை அன்னையின் இனிய காட்சிகள் நம் மனதில் பசுமையாக நிலைத்து நிற்கும் விதத்தில் அமைந்துள்ளது என்றால்மிகையாகாது. காலை 10-30 மணியளவில் 7166 அடி உயரம் உள்ள சிம்லா என்னும் எழில் கொஞ்சும் நகரத்தை அடைந்தோம். சியாமளா என்னும் தேவியின் இருப்பிடமாக இருப்பதால், இதற்கு சியாமளா என்ற பெயர் முதலில் வழங்கலாயிற்று. பிற்காலத்தில் சியாமளா என்ற பெயர் சுருங்கி, சிம்லா என்று வழங்கலாயிற்று.

சிம்லா பஸ் நிலையம் உலகிலேயே மலைப் பிரதேச பஸ் நிலையங்களுள் முதன்மையானதாகும். சிம்லா நகரமானது இமாசலப் பிரதேசத்திற்கு அருகிலேயே மேட்டுப்பாங்கில் உள்ள "ராம்மந்திர்" என்னும் தங்கும் இடத்தில் தங்கினோம், மாலை 3 மணியளவில் சிம்லாவில் உள்ள (Sandal point) ஸாண்டல் பாயிண்ட் என்னும் உல்லாச வாசஸ்தலத்தையும், அதற்கு 2 கி.மீ. தூரத்தில் 8300 அடி உயரத்தில் கொண்ட Jaggu Hill ஜக்குஹில் என்னுமிடத்தில் அனுமன் சஞ்சீவி மலையை எடுத்து வருகையில் இளைப்பாறிய இடத்தையும் கண்டுகளித்து விட்டு, மால் ஏரியா

என்னும் சிறிய மேட்டுப்பாங்கான இடத்தில் இருக்கும் கடை வீதிகளையும், பழைய இம்பீரியல் கட்டிடத்திற்கு அருகிலே உள்ள சிம்லாவை நிர்வாகம் செய்த லாலாலஜபதிராயின் உருவச் சிலையும் கண்டு விட்டு, இரவு விடுதியில் தங்கி விட்டோம்.

மறுநாள் 10–10–99 ஞாயிறு காலை 7 மணியளவில் சிம்லாவிலிருந்து 16 கி–மீ. தூரத்தில் உள்ள குப்ரி (**Kufri**) (இதன் உயரம் 8450 அடி) என்னும் இடத்தில் பனிச்சறுக்கு இடத்தையும் கண்டு ரசித்துவிட்டு, உடனே 190 கி.மீ. தூரத்தில் உள்ள குளு என்னும் ஊருக்குப் புறப்பட்டோம், மதியம் உணவுக்காக நடுவழியில் தாபா எனப்படும் சிற்றுண்டி நிலையத்தில் பஸ் நின்றதும், அவ்விடத்தில் பால்முருகன் மயில் மேல் அமர்ந்து காட்சி அளிக்கும் ஒரு பெரிய படத்தைச் சுவரில் மாட்டி இருந்ததைக் கண்டதும், திருவொற்றியூரில் சங்கிலியாரைக் கண்டதும் சுந்தரர் இளமைமீதுற இன்பத்துறையில் எளியரானது போன்று, அடியேனது மனமும் பாபா பாலகநாத் என்னும் முருகனின் படத்தைப் பார்த்ததும் அவனழகில் மயங்கி எளியனானேன்.

''செங்கோடைக் குமரன் என எங்கே நினைக்கினும் அங்கே வந்து எதிர்முன் நிற்பனே!'' எனும் கந்தரலங்காரப் பாடல் ஞாபகத்திற்கு வந்தது. அப்படத்தைப்பற்றி ஓட்டல் முதலாளியை விசாரித்ததில், குளு அல்லது மனாலியில் கிடைக்குமென்று சொன்னார். அங்கிருந்து புறப்பட்டு மாலை 6 மணி அளவில் குளுவை அடைந்து, பஸ் நிலையம் அருகில் உள்ள ''சயாலி மகாதேவ் தர்மசாலா'' எனும் இடத்தில் தங்கினோம். இவ்விடத்தில் விமான தளமும் உண்டு, அன்று அவ்வூரில் நவராத்திரி விழா கோலாகலமாக நடக்கும் காட்சியைக் கண்டுகளித்தோம். குளுவில் பாபா பாலகநாத் எனும் முருகன் படம் வாங்கச் சென்றபோது எங்குமே கிடைக்காமல் போகவே, சீதையைப் பறிகொடுத்த இராமரின் மன நிலையைப்போல் என் மனமும் ஏக்கமடைந்தது.

மறுநாள் 11–10–99 திங்கள் காலை 7 மணிக்கு அங்குள்ள ரகுநாத் மந்திர், பிஜ்லி மகாதேவ் மந்திர் என்ற ஆலயங்களையும்

தரிசித்து விட்டு, அங்கிருந்து 40 கி. மீ. தூரத்தில் உள்ள மணிக்கரண் என்ற தலத்திற்குப் பேருந்தில் பயணமானோம். உமையவள் ஊர்த்துவதாண்டவம் ஆடும்போது காதில் உள்ள குண்டலம் இங்கு விழுந்ததாக அறியலானோம், இவ்விடத்தில் அளவுக்கதிகமான சூடான வெந்நீர் ஊற்று வருடம் பூராவும் ஓடுகிறது. அதில் குளித்து மகிழ்ந்தோம். அதன் பக்கத்திலேயே வியாசர் ஆறு எனப்படும் பியாஸ் ஆறு மிகுந்த குளிர்ச்சியோடு பாய்ந்து ஓடுவது மிகவும் வியப்பிற்குரியதொன்றாகும். இறைவனது சிருஷ்டியின் லீலையை என்னவென்று சொல்வது? அங்குள்ள மக்கள் அரிசி, பருப்பு, காய்கறி, களைக் கொண்டு ஊற்றெடுத்து வரும் வெந்நீரிலேயே உணவைத் தயாரித்துக் கொள்கிறார்கள். அங்கு சீக்கியரின் குருத்துவாரா மந்திரையும், ரகுநாத் மந்திரையும் தரிசித்தோம். இவ்விரு ஆலயங்களிலும் தினமும் காலை 7 மணி முதல் இரவு 10 மணிவரை சாப்பாடு, சப்பாத்தி, சப்ஜி, லஸ்ஸி போன்றவைகளை விளம்பரம் இல்லாமலேயே யாவருக்கும் இல்லை என்னாது இலவசமாக வழங்கி வருவது மிகவும் பாராட்டுவதற்குரியதாகும்.

தானங்களில் சிறந்தது அன்னதானம் என்பதைக் கண்கூடாக நிரூபிக்கும் வகையில் ஒருவித விளம்பரமும் இன்றி இமாலயப் பிரதேசம் விளங்குகிறது என்றால் உண்மையில் இது வியப்பிற்கு உரியதாகும். மதியம் உணவைக் குருத்துவாரில் முடித்துக் கொண்டு, அங்கிருந்து 15. கி.மீ. தொலைவிலுள்ள பார்வதி லேக் என்ற இடத்தில் கார்த்திகேயன் ஜனித்த சரவண பொய்கை ஒன்று உள்ளதாகக் கேட்டறிந்தோம். ஆனால் 10 கி.மீ. வரைதான் ஜீப்பில் செல்ல முடியும் என்றும் மேலும் 5 கி.மீ. தூரத்தை மலைப்பாதை வழியாகத்தான் நடந்து செல்ல வேண்டும் எனக் கூறக் கேட்டதும் எங்களால் அங்கு செல்ல முடியாது போய்விட்டது. அதனால் அதைப்பற்றி விவரிக்க இயலவில்லை, மணிகரணிலிருந்து பார்வதி லேக் இருக்கும் திக்கை நோக்கி வணக்கம் செய்து அருணகிரியார் வேடிச்சி காவலன் வகுப்பில் பாடியுள்ள,

*" உவகையொடு கிருத்திகையர், அறுவரும் எடுக்க அவர்
ஒருவர் ஒருவர்க்கு அவண் ஓர்புத்ரன் – ஆறுவனும் "*

என்னும் அடியை 6 முறை ஓதி, உடனே அங்கிருந்து பேருந்தில் மாலை 6.30 மணிக்குப் புறப்பட்டு, குளு என்னும் இடத்திற்குத் திரும்பவும் வந்து அடைந்தோம்.

மறுநாள் 12–10–99 செவ்வாய்க்கிழமையன்று காலை 7 மணி அளவில் குளுவிலிருந்து 40 கி.மீ. தூரத்திலுள்ள மனாலிக்குப் பேருந்தில் பயணம் ஆனோம். குளுவிலிருந்து மனாலி வரை, சாலையின் இருபுறங்களிலும் ஆப்பிள் தோட்டங்களைக் கண்டுகளித்தோம். இங்கு யார் வேண்டுமானாலும், எவ்வளவு தேவைப்பட்டாலும், பறித்தோ, கீழே விழுந்து கிடக்கும் ஆப்பிள் பழங்களையோ, பணம் காசு இன்றி எடுத்துச் சாப்பிடலாம்.

இச்செய்தியை அறிந்ததும், ஆப்பிள் சாப்பிட யாவருக்கும், வாயில் நீர் ஊறும் எனக் கருதுவதில் தவறு ஏதுமில்லை, அதைவிட ஆப்பிளைப்பற்றிய செயதியை அறிய யாவருக்கும் சிந்தனையில் உற்றெடுத்தால் மனத்திற்கும் சாந்தியளிக்கும் என்பதில் சந்தேகமில்லை, அதைப்பற்றி நாங்கள் குளுவிற்குச் சென்றிருந்த போது, அடியேன் இளமையில் படித்த ஆப்பிளைப்பற்றிய செய்திகள் ஞாபகத்திற்கு வரவே அங்குள்ளோரிடம் அதைப் பகிர்ந்து கொள்ளலானேன்.

குளுவிலிருந்து மனாலி வரை ஆப்பிள் விளையும் பள்ளத்தாக்கு ஆகும். முற்காலத்தில் ஆப்பிள் பழம் இந்தியாவில் கிடையாது, முதன் முதலாக ஆப்பிள் (மரத்தை) உற்பத்தி செய்வதை, 1915ஆம் ஆண்டு கலிபோர்னியாவிலிருந்து சிம்லாவிற்குக் கொண்டு வந்தவர் சாமுவேல் எவன்ஸ் ஸ்டோஜஸ் (Samuel Hearens stoges) என்பவர் ஆவார். அதற்குப் பிறகு அப்பகுதிகளில் ஆப்பிள் மரங்களை வளர்க்க ஆரம்பித்தனர். சாமுவேல் என்பவர் தன் கடைசிக் காலத்தில் இந்தியாவிலேயே தங்கிவிட்டதால் சத்யானந்தர் என்ற பெயரில் இந்துவானார்,

அவரது காலம் 1782 – 1846 என்பதாகும். இப்பொழுது ஆப்பிள் சாப்பிட உங்களது வாயில் தண்ணீர் ஊறுவதோடு, அறிவுபூர்வமான சிந்தனையிலும், மனம் ஈடுபடும் எனக் கருதுகிறேன்.

இச்செய்தியைக் கேள்விப்பட்டதும் அங்குள்ளோர் யாவரும் மிகவும் மகிழ்ச்சியுற்று ஒரு கூடை நிறைய ஆப்பிள் பழங்களோடு அவர்களது எல்லையற்ற அன்பு பழத்தையும் எங்களுக்கு அளித்து மேலும் எங்களது சக்தி பீட பயணத்தை மேற்கொள்ள எல்லா விதமான உதவிகளையும் அளித்தது எங்களது வாழ்நாளிலே என்றும் மறக்க முடியாத ஒரு சம்பவம் ஆகும்.

மனாலியை காலை 9.00 மணியளவில் சேர்ந்தும் பஸ் நிலையத்திற்கு அருகில் உள்ள தர்மசாலா என்னும் கட்டிடத்தில் தங்கினோம். அங்கு அடியேனுக்கு பாபா பாலகநாத் எனும் முருகனின் படம் ஞாபகத்துக்கு வரவே அங்கு தங்கியுள்ள ஒரு துறவியைக் கண்டதும், இவர் தமிழ்நாட்டைச் சேர்ந்தவராய் இருக்க வேண்டும் எனக் கருதி அவரிடம் பேச அணுகியபோது, துறவி வள்ளிமலை எனும் ஊரைச் சேர்ந்தவர் என்றும், தம் பெயர் சுப்பிரமணியன் என்றும், 40 வருடங்களுக்கு மேலாக இங்கேயே கழித்துவிட்டதாகச் சொன்னதைக் கேட்டதும் என் மனக் கண் முன் வள்ளிமலையும் அடியேனது குருநாதரும் மின்னலைப்போல் தோன்றி மறைந்தனர்.

இறைவன் எந்தெந்த ரூபத்தில் அடியார்கள் பொருட்டு வந்து தோன்றாத் துணையாய் அருள் புரிகிறான் என்பதற்கு இந்த விஞ்ஞான உலகில் இதைவிட மெய்ஞானத்திற்கு விளக்கம் வேறு தேவையில்லை. அடியேனது வாழ்நாளில் இதுபோன்ற அதிசயங்கள் பலவிதத்தில் நிகழ்ந்த போதிலும், அதனை விரிக்கின்ற விஞ்ஞான உலகில் வாழும் மக்கள் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் அமையாவிடில், சூடேறிய மணலில் நிறை கர்ப்பம் வாய்ந்த ஒரு தவளை எவ்வாறு வேதனைப்பட்டு தத்தி தத்திச்

செல்லுமோ அதுபோன்று அடியேனின் மனம் துடிதுடிக்கும் எனக் கருதியே, போற்றக் கூடிய ஒரு சில நிகழ்ச்சிகளையே கூற அவசியம் ஏற்பட்டதால் உங்கள் நினைவுக்குக் கொண்டுவரச் செய்கிறேன்.

தமிழ்நாட்டில் எங்கோ ஒரு பகுதியில் இருந்து வந்த அடியேனுக்கு, இமயத்தில் அதிலும் வள்ளிமலையைச் சேர்ந்த சுப்பிரமணியம் என்னும் பெயருடைய துறவியின் சந்திப்பு முன் பின் அறிவிப்பு இன்றி கிட்டியது என்றால், நாங்கள் முருகனிடமும் திருப்புகழிலும் கொண்டுள்ள நீங்காப் பற்றே இதற்கு மூலகாரணம் என்றே கருத வேண்டியுள்ளது. இதுபோன்ற நிகழ்ச்சிகள் என் தந்தையாரது வாழ்நாளில் நிகழ்ந்துள்ளதையும் அடிக்கடி என்னிடம் கூறக் கேட்டுள்ளேன்.

நாங்களும் அந்தத் துறவியும் சேர்ந்து காலை 9.45 மணி அளவில் இமாசலப் பிரதேச சொகுசு பேருந்தில் 51 கி.மீ. தூரமுள்ள இமயத்தின் உரயமான பகுதியிலுள்ள பனிச் சிகரத்திற்குச் சென்றோம். இதன் உயரம் 13050 அடி ஆகும். எங்களால் அங்கு வீசுகின்ற பனிக்காற்றின் வேகத்தினாலும், தாங்க முடியாத பனியின் குளிராலும் அவ்விடத்தில் நிற்க முடியாது மிகவும் நடுக்க முற்றோம்.

முதுமையின் காரணமாக உடலில் வலிமை குன்றியபோதிலும் உள்ளத்தால் வலிமை குன்றாது சற்று மேலேயுள்ள வியாசர் குகையும் அவர் பெயரால் அங்கு உற்பத்தி ஆகும் வியாச நதியின் மூல குண்டம் போன்றவைகளையும் தரிசித்தோம். அதோடு இன்னும் வடக்கே (Keylong) வழியாக 60 கி.மீ. தூரத்திலுள்ள உதயப்பூர் அருகே 4 கி.மீ. தூரம் சென்றால் திரிலோக நாதரைத் தரிசிக்கலாம் என்று அங்குள்ளவர்கள் கூறக் கேட்டோம். எங்களால் அங்கு சென்று தரிசனம் செய்ய முடியாது போனபோது அங்குள்ளவர்களால் திரிலோகநாதரின் படம் கிடைக்கப் பெற்றுப் பேருவகை அடைந்தோம்.

எங்களால் திரிலோகநாதரை நேரில் காண முடியாமல் போனாலும் அங்குள்ள மூர்த்தியின் அழகினைக் கொண்ட

படத்தைப் பார்த்ததும் அதைக் காண கண்கோடி வேண்டும், மேலும் நேரில் கண்டு மகிழ பல கோடி நெஞ்சம் வேண்டும். விழிகளில் உயிரைத் தேக்கி வைத்துக் கொண்டு பலகாலம் கண் இமைக்காமல் பார்த்து ரசித்துக் கொண்டே இருப்பினும் படத்திலுள்ள அத்திருவுருவக் காடசி தெவிட்டாத காட்சியாகவே எங்கள் மனக்கண்முன் தோன்றியதும்,

> ***" நானேயோ தவமம் செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்***
> ***தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்***
> ***தானே வந்து எனதுள்ளம் புகுந்து அடியேற்கு அருள் செய்தான்***
> ***ஊனாறும் உயிர்வாழ்க்கை ஒறுத்து அன்றே வெறுத்திடவே"***

எனும் மணிவாசகர் பாடல் எங்கள் நினைவிற்கு வரவே, அப்பாடலையே கண்ணீர் மல்கப் பாடித் தொழுதோம், நேரில் கண்டுகளிக்க மறுபிறவியிலாவது எங்களுக்குத் திருவருள் வாய்க்கப் பிரார்த்தித்துக் கொண்டோம். இதுபோன்று இறைவனது காட்சிகளைக் காணும் போதெல்லாம் நாங்கள் முற் பிறவியில் செய்த தவப் பயனோ, மேலும் இப்பிறிவியில் செய்த புண்ணியமோ என எண்ணி உளம் பூரித்தோம். நாங்கள் பனி முடிய இமாலய சிகரத்தில் சிரசு முதல் கால் வரை கம்பளத்தால் ஆன அங்கியை அணிந்திருந்த போதிலும் காற்றின் வேகம் எங்களை நிலையாக, நிற்கமுடியாது நடுக்கமுற்றோம். இங்கிருந்து (Keylong, Lahul, Leh, Tibet) எனும் இடத்திற்கும் (Spiti) எனும் இடத்திற்கும் செல்ல பாதைகள் உள்ளன எனக் கேட்டறிந்தோம். ஆயினும் செல்வது உசிதமில்லை. நாங்கள் (Rotangpass) எனும் கணவாய் இடத்தில் இருந்தபோது அவ்விடத்தில் வாயைத் திறந்து பேசியபோதெல்லாம் வாயிலிருந்து வரும் வெண்புகை, இவர்களெல்லாம் புகை பிடிப்பவர்களா என எண்ணத் தோன்றியது. எங்களுக்கு நாடி நரம்புகளெல்லாம் ஸ்தம்பித்து விட்டதுபோல் தோன்றியது. மண்ணில் இருக்கிறோமா? விண்ணில் இருக்கிறோமா என்ற ஐயமும் உண்டாயிற்று. நாங்கள் பனி மலையில் கண்ட காட்சியை விவரிக்க வார்த்தைகளே இல்லை

என்றே கூறலாம். அதே சமயம் இக்காட்சியைக் காண, பிரம்மன் நமக்கு ஆயிரம் கண்கள் படைக்கவில்லையே என்றும் வருந்தத் தோன்றியது.

மாலை 4.30 அளவில் நாங்கள் முதலில் வந்த பேருந்து மூலம் மனாலிக்குத் திரும்பி விட்டோம். அன்றிரவு நாங்கள் தங்கியிருந்த இடத்திலுள்ள சிவன் சன்னதிக்குச் சென்று வள்ளி மலையைச் சேர்ந்த சுப்பிரமணியம் என்ற துறவியோடு சேர்ந்து தேவாரம் திருப்புகழைப் பாடி, காஞ்சியை சேர்ந்த தமிழ்க் குடும்பத்தினர் நடத்தி வரும் சென்னை கேப் என்னும் ஓட்டலில் சாப்பிடச் சென்றதும் அங்கு சுவரில் சுமார் 3'x 2' உள்ள திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் ஆசிர்வதிக்கும் பாணியில் வண்ணப்படம் மாட்டியிருந்ததைக் கண்டதும் வியப்பில் ஆழ்ந்தோம்.

தம் வாழ்நாளில் எங்கு சென்றாலும் திருப்புகழையே ஆதாரமாகக் கொண்டு பிரச்சாரம் செய்துவந்த ஒரு புண்ணிய சீலரின் படம் இமயத்திலும் காட்சி அளிக்கிறது என்றால் இவரது புகழுக்கு இதைவிட எடுத்துக்காட்டு வேறு தேவையில்லை. மேலும் இவரது கீர்த்திக்கு, இவரது ஆத்மா ஒன்றுதான் இந்தக் கலியுகத்தில் ஆகாய விமானத்திலேயே பிரிந்து சென்றது. இது யாவரும் கண்டிராத, கேட்டிராத ஓர் அரிய செய்தியாகும். எம்பெருமான் கருணையால் முதிர்ச்சி பெற்று வேறு பிரபஞ் சமாயையிலும் மனம் நாடாது, சைவமக்களால் போற்றப்படும் பல சிறந்த நாயன்மார்கள் எல்லாம் இறுதியில் இம்மண்ணுலகில் இருந்தே பூத உடலை விட்டு, இறைவனடி நீழலில் இரண்டறக் கலந்ததாகவே அறியப்பட்ட போதிலும், அதற்கு மாறாக திருமுருக கிருபானந்தவாரியாரின் ஆத்மா ஒன்றுதான் ஏனையோர் களைப்போல் மண்ணுலகில் இருந்து பிரியாமல் விண்ணிலேயே மறைந்தது. இந்தக் கலியுகத்தில் நாம் காணவும், கேட்கவும் கிடைத்த அற்புதமாகும். இதற்கெல்லாம் மூலகாரணம் அன்னார் திருப்புகழையே பற்றாகக் கொண்டு அதனையே வாழ்நாள்

முழுவதும் எங்கும் பிரசாரம் செய்த தொண்டேயாகும் எனக் கருதுவதில் பிழை என்ன இருக்க போகிறது?

13–10–99 புதனன்று காலை 7 மணிக்கு மனாலியில் உள்ள வசிஸ்டர் ஆலயத்துக்குச் சென்று, அங்குள்ள வெந்நீர் குண்டத்தில் ஸ்நானத்தை முடித்துக் கொண்டு, அங்கு உள்ள வசிஸ்டர் உருவச் சிலையை வணங்கி விட்டு, அங்கிருந்து **(Hadimbal)** எனும் இடும்பியின் (பீமன் மனைவி) ஆலயத்தையும் தரிசித்து, அவளது மகனான கடோத்கசனின் இருப்பிடத்தையும் கண்டுகளித்தோம். மனோரம்மியமான அந்தக் சூழ்நிலையைப் பார்த்ததும், அந்த இடத்தில் எத்தனை நாள் ஆனாலும் தங்கி இருக்க மனது தூண்டும் விதத்தில் அமைந்துள்ளது. பகல் 1.30 மணிக்கு மதியம் சாப்பாட்டை சென்னை கபேயில் முடித்துக் கொண்டு அங்கிருந்து பேருந்து மூலமாக மண்டி என்னும் இடத்தை இரவு 7 மணி அளவில் அடைந்தோம். அன்றிரவு மண்டியிலேயே தங்கினோம்.

14–10–99 வியாழன் அன்று காலை 7 மணி அளவில் மண்டியிலிருந்து 80 கி.மீ. தொலைவிலுள்ள **(Baijinath)** எனும் ஸ்தலத்துக்கு பேருந்தில் புறப்பட்டு பகல் 1 மணி அளவில் பஸ் நிலையம் அருகிலேயே உள்ள வைத்யநாத மந்திர் சென்றோம், யாவரும் கேட்பாரற்ற ஒரு மூலையில் இவ்வாலயம் உள்ளதைக் கண்டு மனம் நொந்தோம். இந்த ஆலயத்தில் அப்பரடிகளின் பாதம் பட்டிருந்தால், உழவாரப் பணி மூலம் ஆலயத்தைச் சீர்ப்படுத்தியிருப்பார் என நினைக்கத் தோன்றியது. கலைஞரது கைவண்ணத்தால் ஆலயம் முழுவதும் கல்லினால் வடிவு அமைக்கப்பட்ட உருவங்களை மெய்சிலிர்க்கும் வகையில் இவ்வாலயம் A.D. 804–ஆம் ஆண்டில் நிர்மாணிக்கப்பட்டதாக அங்குள்ள கல்வெட்டுக்கள் மூலமாய் அறியலானோம். அந்த ஆலய சுற்றுப்புறச் சுவற்றில் ஒரு பகுதியில் அர்த்தநாரீஸ்வரரின் உருவம் எழில் பொங்கும் தத்ரூபமாகக் கலைஞனின் கை வண்ணத்தால் வடிவமைக்கப்பட்டுள்ளதைக் காண ஒரு நாள் போதாது. தூண்களிலும், சுற்றுப்புறச் சுவர்களிலும் தென்னாட்டு

ஆலயங்களில் காணாத அற்புதமான சிற்பங்களைக் காணும்போதெல்லாம் அவ்விடத்தைவிட்டு பிரியவே மனம் வராது. மேலும் ஊடுருவி பார்க்கக் கண்கள் நாடியது. இராவணன் கையிலையை எடுக்க தவஞ்செய்து ஈஸ்வரனிடம் வரம் வாங்கிய தலம் இது ஆகும். இங்கிருந்து பெற்று வந்த ஆத்மலிங்கம்தான் இராமேசுவரத்தில் வைக்கப் பெற்றது என்று இங்குள்ளோர்களால் கூறப்பட்டது. இன்னும் சிலர் இராமபிரான் மணலில் பிடித்த சிவலிங்கம் என்றும் கூறுவர். இவ்வாலயத்தின் கர்ப்பகிரகத்தில் உள்ள சுயம்பு லிங்கம் மிகவும் பக்திரசம் ததும்பும் விதத்தில் நமக்கெல்லாம காட்சியளிப்பது அருமையிலும் அருமை என்றே கூறவேண்டும். இராமனது அழகைக் காண 1000 கண்கள் போதாது என வர்ணித்த கம்பர் இங்குள்ள மூர்த்தியைத் தரிசிக்கும் பாக்கியம் கிட்டியிருந்தால் 4000 கண்கள் படைத்திலனே அந்த பிரம்மா எனச் சாடியிருப்பார்.

*" கற்றவர் தொழுதேத்தும் பாண்டிக் கொடுமுடி*
*நற்றவா உனைநான் மறக்கினும் சொல்லும் நா*
*நமச்சிவாயவே "*

எனும் பதிகத்தை 5 முறை ஓதி, கண்மலராலும் மன மலராலும், கைமலராலும் போற்றி செய்தோம். கர்ப்பகிரகத்தை விட்டு வரவே மனம் வராது பிரியாவிடை பெற்று, அங்கிருந்து மேலும் சாமுண்டாதேவி எனும் சக்திபீடத்தை முதன் முதலாக நாங்கள் தரிசிக்க பேருந்தின் மூலமாகப் பயணத்தைத் தொடங்கி மாலை 4 மணி அளவில் ஆலயத்தை அடைந்தோம். இத்தேவி பீடமும் 9 சக்தி பீடங்களுள் ஒன்றாகும், இங்குள்ள சக்தியின் பெயர் சண்டிகா எனப்படுவதாகும். பிற்காலத்தில் இப்பெயர் சாமுண்டாதேவி என மருவி வழங்கலாயிற்று என அறியப் பெற்றோம், சண்டா, முண்டா எனும் இரு அசுரர்கள் இழைத்த கொடுமைகளைக் கண்டு சக்திக்கே அச்சம் உண்டாயிற்று என்றால், பக்தர்களாகிய நாம் எம்மாத்திரம்? உடனே தேவியின் கண்களின் புருவத்திலிருந்தே கோர உரவம் கொண்டு தோன்றிய சக்தியின் அம்சமான தேவதை சண்டா, முண்டா என்ற இரு அரக்கர்களையும் கொன்று, அவர்களது

தலையை அம்பிகையின் முன் நிறுத்தினாள். இதைக் கண்டதும் அம்பிகை இச்சக்திக்கு சாமுண்டா எனப்பெயர் வழங்கியதாகவும் வரலாறு கூறக் கேட்டோம். சாமுண்டா தேவியை வணங்கிய பின்னர் உடனே அங்கிருந்து 14 கி.மீ. தொலைவிலுள்ள தர்மசாலா எனும் ஊரை மாலை 6 மணி அளவில் அடைந்து, அங்குள்ள தங்கும் இடத்தில் இரவு தங்கினோம்.

மறுநாள் 15–10–99 வெள்ளி காலை 7 மணி அளவில், சக்தி பீடத்தில் ஒன்றாகிய காங்கராய என்னும் ஸ்தலத்திற்கு பஸ் முலம் காலை 9 .30 மணி அளவில் வந்து அடைந்தோம். இங்குள்ள சக்தியை காங்கரா தேவி, அல்லது வஜ்ரேஸ்வரி என்னும் பெயரோடு அழைக்கின்றனர். இத்தலமும் சக்தி பீடங்களில் ஒன்றாகும். சக்தி தேவியின் இரு மார்பகங்களும் விழுந்த இடம் இது எனக் கேட்டு அறிந்தோம். இத்தலம் 1905 ஆம் வருடம் பூகம்பத்தால் சிதைவுண்டு, 1920–ஆம் ஆண்டில் புணரமைக்கப் பட்டது எனவும் அறியலானோம். ஜ்வாலாமுகி என்னும் சக்தி பீடத்திலிருந்து 53 கி.மீ. தூரத்தில் உள்ளது. போக்குவரத்து வாகன வசதிகள் உள்ளன. காங்கரா என்னும் இடம் இமாசல பிரதேசத்தின் முக்கிய நகரமாகும். முதலில் இத்தலம் ''சுஸர்மா'' என்னும் அரசனால் ஆளப்பட்டதால் சுஸர்மாபுர் என வழங்கப்பட்டதாக மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ளது. நாங்கள் சென்றிருந்த சமயம் நவராத்திரி ஆனதால் பக்த கோடிகளின் கூட்டம் சொல்ல முடியாத அளவு காண முடிந்தது. கூட்ட நெருக்கடியால் எங்களது மனம் ஒருமைப்பாட்டுடன் தரிசனம் செய்ய இயலவில்லை. உடனே அங்கிருந்து உனா என்னும் மாநிலத்தைச் சேர்ந்த, சிந்த்பூரணி எனும் தலத்துக்குச் சென்றோம். இத்தலமும் சக்தீபீடத்தில் ஒன்றாகும். இங்குள்ள தேவியின் திருநாமம், சின்னமஸ்திகாதேவி என்பதாகும். இப்பெயரே பிற்காலத்தில் சிந்தபூரணி என மருவி வழங்கலாயிற்று என அங்குள்ளவரால் கேட்டறியலானோம். சக்தியின் பாதங்கள் விழுந்த இடம் இது. இங்குள்ள சக்தியின் அதிஅற்புதமான எழில் பொங்கும் விதத்தில் அமைந்த காட்சி எங்களது வாழ்நாளில் என்றைக்கும் மறக்க முடியாத

தொன்றாகும். இத்தலத்திலும் நவராத்திரி விழா நடைபெறுவதால் மக்களின் கூட்டம் சொல்ல முடியாது, இங்கு வீற்றிருக்கும் சக்தியானவள் மக்களின் குறைகளையும் கோரிக்கைகளையும் யாவும் நிறைவுபெற அருளும் சக்தி வாய்ந்தவள் எனக் கேட்டறிந்தோம். இங்கிருந்து ஜ்வாலாமுகி எனும் சக்தீ பீடத்தைத் தரிசிக்க மாலை 3.30 மணிக்குப் பேருந்து மூலமாகச் சென்றோம்.

மாலை 6.00 மணிக்கு ஜ்வாலாமுகி எனும் தலத்தை அடைந்ததும் அன்றிரவே சிறு மேட்டுப் பாங்கான இடத்தில் இருக்கும் ஆலயம் சென்று ஜ்வாலாமுகி தேவியைத் தரிசித்தோம். இத்தலம் தர்மசாலாவிலிருந்து 56 கி.மீ. தூரத்தில் உள்ளது. போக்குவரத்துச் சாதனம் வசதியாக அமைந்துள்ளது. சக்திதேவியின் நாக்கு இவ்விடத்தில் விழுந்து உள்ளதாகக் கேட்டறிந்தோம். இவ்வாலயத்தில், சிவன், பைரவராகக் காட்சியளிப்பதையும் கண்டோம். இவ்வாலயத்தின் கர்ப்பக் கிரகத்தில் பிரகாசமான நெருப்பு (ஜ்வாலை) வடிவமாய் எந்த வித உபகரணமும் இன்றி காட்சி தருவது மிகவும் விந்தையாக உள்ளது.

ஒரு சமயம் அன்றைய பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் இந்த ஜோதியைக் கண்டு வியப்படைந்து, தக்க பூமி சாஸ்திர வல்லுநர்களைக் கொண்டு' ஆராயச் சொன்னதாகவும், இதனடிப்படையில் பல வருட காலமாக ஆராய்ச்சி செய்தும் அவ்வாராய்ச்சி பயனற்றுப் போனது என்றும் கூறுகிறார்கள். இந்தப் பிர்காசமான ஜோதியைப்பற்றி காரணம் கூற முடியாததால், ஆராய்ச்சியை மேலும் தொடரவில்லை என்பதாகக் கேட்டறிநதோம். ஏதோ ஒரு சக்தி ஓர் இடத்தில் வெந்நீர் ஊற்று ஆகவும், ஜுவாலாமுகியில் பிரகாசமான ஜோதியுடனும் விளங்குவது விஞ்ஞானத்திற்கே விட்ட அறைகூவலாகும் எனலாம்.

முதலில் மாடு மேய்க்கும் ஒருவன், பூமி சந்த்ரா எனும் அரசினடம் தான் பிரகாசமான ஜோதியை இம்மலையில்

கண்டதாகவும், சதாகாலம் பிரகாசத்துடன் விளங்குவதாகவும் சொன்னதின்பேரில், அரசன் அங்கு நேரில் சென்று பார்த்து, அந்த மலைக்காட்டு பகுதியில் சிறு ஆலயம் நிறுவினான். பிற்காலத்தில் பாண்டவர்களால் அவ்வாலயம் புணரமைக்கப்பட்டுள்ளது. இது குறித்து பாரதத்தில்,

*"பஞ்ச பாண்டவ தேரா பவான் பனாயா*
*அர்ஜுன் நி சன்வார் துலாயா"*

**எனக் கூறப்பட்டுள்ளது.**

மேலும் அங்குள்ள ஆங்கிலம் தெரிந்த ஆன்றோர்களை அணுகிக் கேட்டபோது, பின்வருமாறு கூறியதை உங்கள் முன்னிலையில் கொண்டு வருவது அவசியம் எனக் கருதுகிறேன். டில்லியை ஆண்ட முகலாய சக்ரவர்த்தியாகிய அக்பர், ஒரு சமயம் நாடோன் கிராமத்தைச் சேர்ந்த தியானுக்கு என்பவன் 1000 – நபர்களோடு டில்லியில் இருந்து குதிரை மூலம் ஜுவாலாமுகி சென்றதைக் கண்டார். அவனை அழைத்து எங்கு செல்கிறாய் இத்தனைக் கூட்டத்தாரோடு என அரசன் வினவினான். அவனும் அடியார் கூட்டங்களும் ஜுவாலாமுகி சக்தியைத் தரிசிக்க செல்வதாய்ச் சொன்னான்.

ஜுவாலாமுகி என்பது யார்? நீங்கள் என்ன பலனைப் பெறப் போகிறீர்கள் எனக் கேட்டதும், அதற்கு அவன் ஜுவாலாமுகி சக்தியே உலகத்தைக் காக்கும் தாய் எனக் கூறினான். ஜோதி சொரூபமாய் எவ்வித உபகரணமுமின்றித் தோன்றி விளங்குவதாகவும் அடியார்கள் குறைகளைத் தீர்க்க வல்ல சக்தியாகவும் விளங்கும் அன்னையைத் தரிசிக்க வருடாவருடம் செல்வது வழக்கம் எனவும் அவன் சொன்னான்.

அதற்கு அக்பர் தாங்கள் சொல்வது உண்மையானால் தாங்கள் சவாரி செய்து வந்து குதிரையின் தலையை வெட்டுகிறேன், மறுபடியும் அந்தக் குதிரை உயிர்பெற்று எழ உங்களது பக்தியின் மூலம் நிரூபிக்க இயலுமா? எனக் கேட்டாள்.

குதிரையின் தலை வெட்டப்பட்டதும் தியானுபக்த் அக்பரிடம் தலை வெட்டிய குதிரையை ஒருமாதக் காலம் பாதுகாத்து வாருங்கள் என விண்ணப்பித்தான். தனது பயணத்தைத் தொடர்ந்து அடியார் கூட்டத்துடன் ஜுவாலாமுகி சன்னதி சென்று இரவு முழுவதும் துதி செய்து அடிமையினது பக்தியையும், உம்முடைய சக்தியையும் எடுத்துக்காட்ட குதிரையை மீண்டும் உயிர்ப்பெற்று எழ அருளவேண்டும் என வேண்டிக் கொண்டான்.

அதுசமயம் தமக்கு ஓர் அறிகுறியும் காணாது போகவே தனது தலையைத் துண்டித்து சக்தியின் பாதத்தில் வைத்தும், அன்னை பராசக்தி பக்தனுக்குக் காட்சி அளித்து அவனது தலையை உடலில் பொருந்தச் செய்து அதே சமயம் டில்லியில் துண்டிக்கப் பட்ட குதிரையின் தலையையும் பொருத்தி உயிர்ப் பிக்கவும் செய்ததை அறிந்த அக்பர் சக்ரவர்த்தி இவரது பக்தியின் பெருமையை உணர்ந்து தானே ஜுவாலாமுகி சென்று தேவிக்கு 1.50 மடங்கு எடையுள்ள தங்கக் குடைக் காணிக்கையாக்கி ஆலயத்திற்குச் சென்று வணங்கியதாகவும், அன்று முதல் தமது போர் வீரர்கள் அனைவரையும் அழைத்து மத வேறுபாடு இன்றி ஜுவாலாமுகியை வணங்கிட உத்திரவிட்ட தாகவும் வரலாறுகளைக் கேட்டறிந்தோம்.

சரித்திர வாயிலாக நிகழ்ந்த இச் செய்தியைஊர்ஜிதம் செய்யும் வகையில் ஆலயத்தின் இடப் புறத்திலுள்ள மண்டபத்தில் இன்றும் யாவரும் காணும் வகையில் அந்தத் தங்கக் குடை வைக்கப்பட்டுள்ளது. எங்களுக்கும் காண்பித்தனர். தங்கக் குடை வழங்கிய கொடையாளி என்னும் பெருமையைத் தங்க வைத்துக் கொண்ட அக்பரை எவ்வாறு புகழ்வது?

மறு நாள் 16–10–99 சனிக்கிழமை காலை 7 மணிக்கு பாபா பாலகநாத் எனும் பாலமுருகன் தலத்துக்குப் பேருந்தில் புறப்பட்டு, பகல் 12 மணி அளவில் அவ்வாலயத்தை அடைந்தோம். இம்மலை பழனி மலைக்கு நிகராக உள்ளது. மலை செங்குத்தாக உள்ளது.

பளிங்குக் கற்களால் படிகள் அமைத்தும் ஆங்காங்கே இளைப்பாறவும், குடிப்பதற்கு நீர் வழங்கும் குழாய்களைப் பொருத்தியும் மின் விளக்குகள் பொருத்தியும் அமைத்துள்ளனர். அடியேனது குருநாதரால் திருத்தணியில் திருப்புகழ் திருவிழா என ஒவ்வொரு வருடமும் நிகழ்த்திக் காட்டியதற்கு ஏற்ப இங்கும் அவ்வாறு நடத்த ஆலயத்தாரும் முயற்சி செய்யலாம் எனக் கூற எண்ணினேன்.

கர்ப்ப கிரகத்தில் அருகில் சென்றதும் மூலவராகிய பாலமுருகனைத் தரிசனம் செய்யப் பெண்கள் அனுமதிக்கப் படுவதில்லை என எழுதி இருப்பதைக் கண்டதும் எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. இதனால்தான் இங்கு திருப்படி விழா நடத்த வாய்ப்பு இல்லையென உள்ளுக்குள் நினைத்தக் கொண்டே அடியேன் மட்டும கர்ப்ப கிரகத்தின் அருகில் சென்று அமர்ந்த பாபா பாலகநாதனாக இருக்கின்ற முருகனை ''உதிரும் கனியை நறும்பாகில் உடைத்துக் கலந்து தேனை வடித்து ஊற்றி அமுதினுடன் கூட்டி ஒக்கக் குழைத்து ருசி பிறந்த மதுரம் கனிந்த திருப்புகழ் பாடலில் வரும்.

*"உனைப் பலநாளும் திருப்புகழாலும்*
*உரைத்திடுவார் தம் – குளிர்மேவி*
*உணர்த்திய போதந்தனைப் பிரியாதுன்*
*பொலச் சரண் நானும் – தொழுவேனோ"*

எனும் கருத்துடைய பாடலின் அடியை என்னையும் அறியாது என் நாவே சொல்லிக் கொண்டிருந்தது.

இவ்வாலயத்தின் நிர்வாகிகளையும் அரசாங்க மேற் பார்வையாளரையும் அணுகி இத்தலத்தின் வரலாறு கேட்டேன். அது சமயம் ஆலயத்தில் உள்ளோர், இங்குதான் ஒரு மூதாட்டி கயிலையைக் காணச் சென்றபோது இப்பகுதியில் வந்ததாகவும் மிகவும் களைப்பாக இருக்கவே அங்குள்ள ஒரு மரத்தடியில் தங்கியதாகவும், முருகனே ஆடு மேய்க்கும் சிறுபிள்ளையாக

வந்து பாட்டியை நோக்கிக் களைப்பாக இருக்கிறீர்களா? எங்கு செல்லப் போகிறீர்கள்? எனக் கேட்டதும், அதற்கு மூதாட்டி அப்பிள்ளையைப் பார்த்து நான் சாப்பிட்டு ஏழு நாள் ஆகிறது. மிகவும் களைப்பாக இருக்கவே ஓய்வு எடுக்கலாம் என எண்ணி சிறிது நேரம் கழித்து இங்கிருந்து கைலாயம் புறப்பட எண்ணி உள்ளேன் எனக் கூறியதும், மாடு மேய்க்கும் சிறுவன் பாட்டியை நோக்கி உங்களுக்கு தேவையான உணவுப் பண்டங்களான அப்பங்கள் எதிரே இருக்கும் மரத்தடியில் வைத்துள்ளேன் எனக் கூறினான்.

மூதாட்டியும் அப்பத்தைச் சாப்பிட்டுத் தண்ணீர் கேட்டதும் தன் கையிலுள்ள கருவியால் அச்சிறுவன் பக்கத்தில தரையில் குத்தி நீரை வரவழைத்துத் தந்ததையும் கண்ட மூதாட்டிக்கு ஒன்றும் புரியவில்லை. சிறுபிள்ளையைப் பார்த்து நீ யாரப்பா? இந்த நேரத்தில் முன்பின் தெரியாத எனக்கு இவ்வளவு உபசாரம் செய்வது ஒரே வியப்பாக உள்ளது என்று கூறினாள். அச்சிறுவன் நான் யார் என்று தெரியவில்லையா என்னைப் பார் எனக் கூறினான். சிறுபிள்ளையாக வந்தவன் சாட்சாத் பாலமுருகனே என உணர்ந்து கண்ணீர் மல்கித் தோத்திரம் செய்தார்.

இவ்வரலாற்றுக்கு ஆதாரமாக இம்மலைமேல் கர்ப்ப கிரகத்தின் அருகில் கருங்கல்லினால் செதுக்கப்பட்ட சுமார் 6 அடி உள்ள மரமும் அதனடியில் உண்பதற்குத் தேவையான அப்பங்களையும் அவற்றின் அருகில் ஒரு மூதாட்டி நிற்கும் நிலையில் சிறு உருவம் உள்ளதையும் எதிரே மாடு மேய்க்கும் சிறுபிள்ளை கோவணாண்டியாக இருப்பதையும் அடியேனுக்குக் காண்பித்தனர். இதுகாறும் தமிழ் நாட்டில் பௌராணியர்களால் கூறப்பட்ட ஔவையார் சம்பந்தமான நாவல் பழச் செய்திகள் என் மனக் கண்முன் மின்னலைப்போல் தோன்றி மறைந்தது. இச் செய்தியை அங்கு ஆலயத்தாரிடம் சொன்னதும் உங்கள் பகுதியில் இந்த நிகழ்ச்சி எந்தப் பகுதியில் நிகழ்ந்தது என ஆதாரம் உள்ளதா எனக் கேட்டதும், பதில் சொல்லத் தோன்றாமல்,

*"ஆதாரமிலேன் உன் அருளைப் பெறவே*
*நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே..."*

எனும் சுந்தரனுபூதியில் வரும் பாடலை நினைவுக்குக் கொண்டு வரலானேன்.

அங்குள்ள கல்வெட்டில் அந்தச் செய்திகள் யாவும பொறித்திருந்ததைக் காட்டினார்கள். அண்மையில் கடந்த ஒரு மாத காலமாக தக்க அறிஞர்களையும் ஆராய்ச்சியாளர்களையும் கொண்டு கல்வெட்டில் உள்ள செய்திகள் அனைத்தையும் இந்தியிலேயே அச்சிட்டுத் தலப்புராணம் வெளியிடுவதாகக் கூறியதும் அது சமயம் இதே வரலாற்றினை ஆங்கிலத்திலும் தக்க அறிஞர்களைக் கொண்டு மொழிபெயர்த்து அச்சிட்டால் இச்செய்தி உலகம் பூராவும் அறிய வாய்ப்பு அளிக்கும் என விண்ணப்பித்துக் கொண்டேன். மேலும் "உலகெங்கும் மேவிய தேவாலயந்தொறும்– பெருமாளே" என்னும் அருணகிரியார் பாட்டை மெய்ப்பிக்கும் வகையில் அமையும் என கூறினேன். ஆலயத்தார் அதற்கு இசைந்து அச்சிடுவதாகக் கூறினார்கள். புத்தகம் வெளிவந்ததும் அடியேனுக்கு, 3, 4 புத்தகங்களையும் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொண்டேன்.

உடனே அங்கிருந்து பிரியா விடை பெற்று நங்கல் அணைக்கட்டு எனும் இடத்திற்குப் பேருந்து மூலமாக சென்று அன்று இரவே 7 மணி அளவில் நயனா தேவி என்னும் சக்தி பீடத்திற்குப் பிரயாணத்தைத் தொடங்கி இரவு 9 மணி அளவில் மலையின் அடிவாரத்தில் உள்ள தேவஸ்தானத்தாரால் கட்டப் பட்டுள்ள பிரம்மாண்டமான தர்மசாலா கட்டிடத்தில் தங்கினோம். அன்றிரவு எனக்குத் தூக்கமே வராமல் பாபா பாலகநாதரின் காட்சியைத் தரிசிக்க வாய்ப்பு கிடைத்ததைக் கண்ணீர் மல்க.

*"முருகன் குமரன், குகன் என்று மொழிந்து*
*உருகும் செயல் தந்து"*

ஆட்கொண்ட

பேராற்றலுக்கு நன்றிக்கடனாக இப்பிறவியில் செய்ய இயலாவிடினும் மறுபிறிவி எடுத்தாவது நிவர்த்தி செய்யக் கருணை புரிய வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

மறுநாள் 17–10/99 காலை மலைமீது எம்பிராட்டியான நயனாதேவியைத் தரிசிக்கப் புறப்பட்டோம். இவ்வாலயம் மலைமேல் மிக உயரமான உயரத்தில் மக்கள் செல்வதற்கு ஏற்ற வகையில் படிகள் அமைத்து நிறுவப்பட்டுள்ளது. மலையின் உயரம் ஏறத்தாழ் தமிழ் நாட்டில் உள்ள பழனி மலைகது நிகராக இருக்கும் எனத் தோன்றியது. இத்தலமும் நவசக்தி பீடங்களில் ஒன்றாகும். பஞ்சாப் மாகாணத்தை ஒட்டி இவ்வாலயம் சிவாலி மலைகளின் உச்சியின் நிறுவப்பட்டுள்ளது. பக்த கோடிகள் இவ்வாலயத்திற்குச் செல்ல வசதியாகப் பேருந்துகள் உள்ளன. பேருந்தில் நங்கல் அணைக்கட்டிலிருந்து இவ்வாலயத்தின் அடிவாரத்திற்குச் செல்ல 3 மணி நேரம் ஆகும். இங்குதான் சக்தியின் கண்கள் விழுந்ததாக அங்குள்ளவர்கள் சொல்லக் கேட்டோம். மேலும் ஆலயத்துப் பட்டர்களில் மூத்தவரைக் கண்டு இதன் வரலாற்றினைக் கேட்டறிய விருப்பப்பட்டேன், அவர்கள் கூறியதை இவ்விடத்தில் அறிவிப்பது அவசியம் எனத் தோன்றுகிறது.

நயனா என்னும் மாடு மேய்ப்பவன், இந்த மலைப்பகுதியில் மாடுகளை மேய்க்கப் போவது வழக்கம். ஒரு மாடு பிப்பல் (அரசு) மரத்தடிக்குச் சென்றதும் அங்கு நின்று தன் மடியில் இருந்து பால் செரிவதைக் கண்ட மாடு மேய்ப்பவன் அங்கு சென்று உதிர்ந்த இலைகளை அப்புறப்படுத்தி பார்க்கையில் பிண்டிவடிவத்தில் கல்லினால் ஆன சிலை உள்ளதைக் கண்டு இங்கு ஏதோ சக்தி உள்ளது என எண்ணினான். இதனை உறுதி செய்யும் வகையில் அங்குள்ள பட்டரும் அன்றிரவே இதனைப்பற்றிக் கனவு கண்டதையும் மக்களிடம் சொல்லியுள்ளார்.

அந்த சக்தியான பிண்டி, பட்டரிடம், தான் பிப்பல் (அரசு) மரத்தடியில் இருப்பதாகவும், என்னை வெளியே எடுத்து

ஆலயத்தைக் கட்டுங்கள் என்றும், அடியார்களின் வேண்டுதலைப் பூர்த்தி செய்வதாகவும் கனவில் சொல்ல, மக்கள் ஒன்று சேர்ந்து ஆலயத்தைக் கட்டி, அதே பிண்டியை மூல விக்ரகமாக வைத்து பூஜை செய்யலாயினர். நயினா என்னும் மாடு மேய்ப்பவன், ஆலயம் உண்டாகக் காரணமாக இருந்ததால் இந்த ஆலயத்துக்கு நயனாதேவி எனப் பெயர் வழங்கப்பட்டதாகவும் சொன்னார்கள். ஆலயத்தில் கர்ப்பக்கிரகத்தின் பக்கத்தில் ஒரு சிறிய குகை உள்ளது. அதனை நயினாதேவி குகை என வழங்குகின்றனர்.

நாங்கள் சென்ற சமயம் 'நவராத்திரி' ஆனதால் கூட்டம் முன் கண்டிராத அளவுக்குக் காணப்பட்டது. தரிசனம் செய்யவே 2 மணி நேரம் ஆயிற்று. பகல் 1.00 மணியளவில் மதியம் சாப்பாட்டை முடித்துக் கொண்டு அங்கிருந்து சண்டிகருக்குப் பேருந்தில் சென்றோம்.

நாங்கள் 17–10–99 அன்று சண்டிகர் என்னும் புகழ் பெற்ற நகரத்தின் அருகிலே உள்ள மணிமஜ்ரா என்னும் பகுதியிலுள்ள மானஸாதேவியின் ஆலயத்திற்குச் சென்றோம், மானஸாதேவியும் நவசக்தி பீடங்களில் ஒன்றாகும் எனக் கூறக் கேட்டோம். மேலும் நவசக்தி பீடங்களில் இச்சக்தி பீடமே முதன்மையானதும், கீர்த்தி வாய்ந்ததும் ஆகுமென அறியக் கேட்டோம். இங்குதான் சக்தியின் தலை வீழ்ந்த இடமாகும் என்று அங்குள்ளவர்களால் கூறப்படுகிறது. பலவிதமாக வரலாறுகள் இதைப்பற்றிய கூறப்பட்டிருந்தாலும் சரித்திர வாயிலான முக்கியத்துவம் வாய்ந்த வரலாற்றினை மட்டுமே இங்குள்ளவர்கள் கூறியதை உங்கள் நினைவிற்குக் கொண்டு வருவது அவசியம் என எண்ணுகிறேன்.

முகாலாய வமிசத்தினரான அக்பர் சக்ரவர்த்தியின் ஆட்சிக்குட்பட்ட மணிமஜ்ரா என்னும் நிலப்பகுதி, இராஜபுத்திர வம்சத்தைச் சேர்ந்த நிலக்கிழார் ஒருவருக்குச் சொந்தமாக இருந்தது, கப்பம் பெறும் பொருட்டு அரசர் அங்குள்ளவர்களிடம் விவசாய தானியங்களைப் பெற்று வருவது வழக்கம். ஒரு சமயம் மழை பெய்யாமல் வறுமை தாண்டவம் ஆடிய சமயத்தில்

மக்களால் கப்பம் கட்ட இயலாது போனபோது அரசரை அணுகி தங்களின் வறுமையைப்பற்றி கூறியபோதும், அரசர் அவர்களின் குறைகளை ஏற்காது சிறையில் அடைக்க உத்தரவு இட்டார். இச்செய்தி பல இடங்களுக்கும் பரவியது.

அதுசமயம் தேவி உபாசகரும், கவியுமான காரிப்தாஸ் என்பவர் மக்களை ஒன்று திரட்டி யாகம் ஒன்றை வளர்த்தார். இவருடைய யாகத்தை மெச்சி தேவி அவர்மன் தரிசனம் தந்து அவர் விருப்பப்படி சிறையில் அடைக்கப்பட்ட எல்லோரும் வழக்காடு மன்றத்தினரால் விடுதலை செய்யப்பட்டதோடு கப்பம் கட்டுவதும் தவிர்க்கப்பட்டது. இதனைக் கேள்வியுற்ற நில்ச் சுவான்தாரர்களும், ஏனைய மக்களும் ஒன்று கூடி ஓர் ஆலயம் நிறுவி அங்கு மானஸாதேவி என்னும் திருநாமத்தோடு உருவச் சிலையைப் பிரதிட்டை செய்து வணங்கலாயினர். மானஸா என்றால் மக்களின் மனச்சாந்தியடையச் செய்த தேவி – சக்தி எனப்படும்.

இங்குள்ள தேவியின் அழகை, எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியம் போன்ற காட்சியைக் காண ஆயிரம் கண் படைக்கவில்லையே அந்த நான்முகன் என நினைக்கத் தோன்றுகிறது. கடைசியாக உத்திர பிரதேசத்தில் ஸகரன் பூரிலிருந்து 4 கி. மீ. தூரத்திலுள்ள சாகம்பரி தேவியின் பீடதைத் தரிசிக்க இயலாது போய்விட்டது, காரணம் நாங்கள் 19–10–99 அன்று டில்லியிருந்து சென்னைக்குப் புறப்பட முன்கூட்டியே பயணச்சீட்டை பதிவு செய்திருந்ததே காரணம் ஆகும். இதனால் இது சம்பந்தமான விளக்கங்களை அளிக்க இயலாமைக்கு வருந்துகிறோம்.

இவ்வாறு மேலே விவரித்த சக்திபீடங்களை ஒருவித இடையூறுமின்றி அனுகூலமாகவே தரிசித்து முடிந்ததும், நவசக்தி தேவிகளை மனதார தியானித்து,

*"பூத்தவளே, புவனம் பதினான்கையும் பூத்த வண்ணம்*
*காத்தவளே, பின்கரந்தவளே கறைக்கண்டனுக்கு*
*மூத்தவளே, என்றும் மூவா முகுந்தர்க்கு இளையவளே*
*மாத்தவளே உனையன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே"*

என்ற பாடலை உருகிப் பாடி, சென்னைக்குப் புறப்பட எண்ணி 19-10-99 அன்று மாலை டில்லியிலுள்ள மலை மந்திர் எனப்படும் (உத்திரசுவாமி மலை ) முருகனையும் வணங்கிவிட்டு, அன்று மாலையே ஜி. டி. எக்ஸ்பிரஸ் புவைண்டி மூலம் சென்னைக்குப் புறப்பட்டோம்.

நவசக்தி பீடங்களில் எட்டினை மட்டும் 15 நாட்களில் அயராது செய்த யாத்திரையின் பயனாகக் கண்ட "இமாலயச் செலவு" எனும் கட்டுரை படிப்போர்களின் மனதில் என்றென்றும் நீங்காது, நிலைத்து நிற்கும் எனக் கருதியே, சிற்றறிவுக்கு எட்டியவரையில் விளக்கமளித்து நிறைவு செய்கிறேன்.

*"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"*

# 35. காசி முதல் சித்திரக்கூடப் பர்வதம் வரை!

முக்திக்குத் தடையாக இருக்கும் மும்மலங்களை எரித்து, மானிடப் பிறவியை உய்விக்கும் முழுமுதற் கடவுள் சிவ பெருமான். அவர் கோயில் கொண்டுள்ள புனிதத் தலங்களுள் காசி தனிச் சிறப்பு பெற்றது.

இத்தகு பேறுபெற்ற காசிக்குச் சென்று இறைவன் சிவனைத் தரிசிக்க, நானும் நண்பர்கள் திரு. சின்னக்கருப்பன், திரு, இராமன், திரு. முத்து அனைவரும் முடிவெடுத்தோம்.

அன்றைய நாளிலேயே தமிழர்களின் சிவலிங்க வழிபாடு வடக்கேயும் இருப்பதைக் காண முடிகிறது. ஒரு காலத்தில் இமயம் முதல் குமரி வரை தமிழர்கள் வாழ்ந்தார்கள் என்பதற்கு இந்த சிவலிங்க வழிபாடு ஒரு சான்றாகும்.

இந்தியா மட்டுமின்றி, அமெரிக்கா, கம்போடியா போன்ற நாடுகளிலும் சிவலிங்க வழிபாடு பரவி இருந்தது.

அதனால்தான் மாணிக்கவாசகர்,

*"தென்னாடுடைய சிவனே போற்றி*
*எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"*

எனப் பாடினார் போலும்.

ஆங்கிலேயர் இந்தியாவை ஆண்ட சமயத்தில், தென்காசிக்கு அருகேயுள்ள குற்றாலத்தில் உள்ள அருவியில் இந்தியர் எவரையும் நீராட அனுமதிக்கவில்லை. அருவிக்கரையில் அமர்ந்து அருள் பாலிக்கும் குற்றாலநாதருக்கே அருவித் தண்ணீர் கிடையாது என கடுமையான சட்டத்தை, அன்றைய நெல்லை கலெக்டர் ''ஆஷ்' என்னும் ஆங்கிலேயர் பிரகடனப் படுத்தியிருந்தார் என்பதைச் சரித்திர வாயிலாக அனைவரும் அறிவர்.

ஆங்கிலேயரது செருக்கினை களையவே, வடகாசியில் வீற்றிருக்கும் விஸ்வநாதரே, பேற்றைத் தவம் சற்றும் இல்லாத ஆன்மாக்களை, பிரபஞ்ச் என்ற சேற்றிலிருந்து விடுவிக்க, தன் சடையில் என்றென்றும் வற்றாத கங்கையை வைத்துக்கொண்டு, வருடம் முழுவதும் வந்து ஆனந்தமாக நீராடுங்கள் என்று எல்லோரையும் அழைப்பு விடுப்பதுபோல், காசி நகரம் தோன்றுகிறது.

இக்காசித்தலம் உத்திரப் பிரதேசத்தில் உள்ளது, இந்தியாவை ஆளுவது உ.பி. மாநிலமே மற்ற எல்லாமாநிலங்களைக் காட்டிலும் பெரியதாகும். இராமாயணம், பாரதம் காலத்திலேயே இம்மாநிலம் சிறப்புற்று விளங்கியது. கண்ணன் பிறந்த மதுராவும், இராமர் பிறந்த அயோத்தியும், பாண்டவர்கள் ஆண்ட அஸ்த்தினாபுரமும் உ.பி.யில்தான் உள்ளது. சரித்திரத்தின் அடிப்படையிலும் அசோகர் முதல் அக்பர் போன்ற கீர்த்தி வாய்ந்த மன்னர்களும் கொலுவீற்றிருந்தது இம்மாநிலமே ஆகும். உ. பி. யில் உள்ள காசித்தலம் முக்தி தலங்களில் ஒன்று. இங்கு அருள் பாலிக்கும் விஸ்வநாதரும், பன்னிருஜோதிர் லிங்கங்களுள் ஒன்றாகும்.

அன்றைய நாளில் காசிமா நகருக்குப் போக்குவரத்து வசதிகள் இல்லை. கால்நடைப் பயணமாகவே சென்று வந்துள்ளனர். யாத்திரை முடித்து ஊர் திரும்புவார்கள் என்பது உறுதியாகக் கூறமுடியாது. காரணம் வழியில் திருடர்கள் பயமும், உடல்

நலத்தாலும் மொழிப் பிரச்சனைகளாலும், பல இன்னல்களுக்கும் ஆளாக நேரிடும்.

தற்போது, வெளியூருக்குச் செல்பவர்கள், ஆபத்துகளைத் தவிர்க்க, உள்ளூரிலேயே பணத்தைச் செலுத்தி, வங்கி வரைவோலை பெற்றுச் செல்லும் வசதிகள் உள்ளன.

400 வருடங்களுக்கு முன்னரே, நடை பயணமாகக் காசி யாத்திரை செல்லும் அன்பர்கள், இங்கு, திருப்பனந்தாள் மடத்தில் பணம் செலுத்தி, அதற்கான கடிதத்தைப் பெற்று, வடக்கேயுள்ள குமாரசாமி மடத்தில் கடிதத்தைக் கொடுத்துப் பணம் பெற்றுக் கொண்டனர். இதற்கு 'தரிசன உண்டியல்' எனப் பெயர்.

கடல் பொங்கி குமரி – இராமேஸ்வரம் இடையே இடைவெளி அதிகமாகவே இராமேஸ்வரமும் இலங்கையும் நெருங்கிவர, காசி இராமேஸ்வரம் என்ற சொற்றொடர் மருவி வழங்கப்பட்டுவிட்டது. மேலும் இதன் உட்பொருள் – உலகில் இரண்டே உயிர்கள் அதாவது ஆண் – பெண் என்பதாகும். இதனை, சக்தி – சிவம் எனக் கூறுவதுண்டு. தென குமரியில் சக்தி சொரூபமாய் அன்னை காட்சியளிக்கிறாள். வடகாசியில் சிவனே "லிங்க வடிவில்" காட்சி அளிக்கிறார். என்பதனையே உருவகப்படுத்தி ஆன்றோர்கள் கூறியுள்ளார்கள்.

இன்றைய நாளில் காசி இராமேஸ்வரம் என்னும் சொல் வழக்கு அண்மைக் காலத்தில் வழங்கப்பட்ட சொல்லேயாகும். முதன் முதலில் 'காசி – கன்னியாகுமரி' என்றுதான் ஆன்றோர்களால் வழங்கப்பட்டது. இதன்மூலம் வடக்கும் தெற்குக்கும் இடையே உள்ள உறவை ஏற்படுத்திக் கொள்ளவே இத்தகைய புனித யாத்திரைகள் பயன்படட்டன.

இதற்கு ஆதாரங்கள் பல உள்ளன, காசியில், கங்கைக் கரையில் வாழ்ந்த சாலி என்ற பெண் தன் பாவத்தைப் போக்கிக்கொள்ள காசியிலிருந்து நடந்தே வந்து கன்னியாகுமரி

கடலில் குளித்தாள் என்னும் வரலாறு ‘மணிமேகலை’ காப்பியத்தில் வந்துள்ளது. காசியை, சேர்ந்த பிரயாகையில் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் மூன்று நதிகள் சங்கமம் ஆவதாலேயே திரிவேனி சங்கமம் எனப் பெயர் பெற்றதுபோல் தெற்கே குமரியிலும் முக்கடல்கள் (அரபிக்கடல், வங்காள விரிகுடாக் கடல், இந்துமகா சமுத்திரம்) சங்கமம் ஆகின்றன. எனவே குமரியில் ஸ்நானம் செய்வது அலகாபாத்தில ஸ்நானம் செய்வதற்கு, சமமாக கருதப்பட்டது? இதனை உறுதிப்படுத்தும் வகையில்

***“கங்கை ஆடில் என், குமரி ஆடில் என்”***

என அப்பர் தேவாரம் கூறுகிறது, ‘தென் திசை குமரியாடி, என்கிறது மணிமேகலையில். “தென்திசை குமரியாடி, வட திசைக்கு ஏகுவீர் ஆயின்” என சத்திமுற்றப்புலவர் பாடியுள்ளார். மகாபாரதத்திலும் அர்ச்சுனன் குமரி வந்து குளித்ததாகக் கூறுகிறது. சிலப்பதிகாரத்தில் வரும் மாடலமறையோன், குமரியில் நீராடினான் என அறியப்படுகிறது. ஆகையால் கன்னியாகுமரிக் ‘ஆதிசேது’ என ஒரு பெயரும் உள்ளது. காசி இராமேஸ்வரம் என்னும் கருத்துக்கு ஈடாக எங்கும் சான்றுகள் உள்ளதாகத் தெரியவில்லை. இராமபிரானே பாலம் கட்டியது கன்னியாகுமரியில்தான் என வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றார்கள். இராமர் தீர்த்தம் ஆடியதும் குமரியில்தான், அனுமான் மலைமீது இருந்து இலங்கைக்குத் தாவிச் சென்று மகேந்திர மலையும் கன்னியா குமாரிக்கு அருகில்தான் உள்ளது. இதனை உறுதி செய்யும் வகையில் கால்நடையாகவே சென்ற அரு. சோமசுந்தரனாரும்,

***“காசி முதல் குமரி வரை உனது எல்லையே கால்***
***நடந்து வந்தவருக்கு கவலை இல்லையே”***

என பாடியுள்ளது கவனிக்கத் தக்கது.

எங்கள் குழுவினர் 29–05–2000 திங்கள் – அன்று சென்னை யிலிருந்து வாரணாசி எக்ஸ்பிரஸ் இரயிலில் புறப்பட்டு 31–11–2001 புதன் காலை 9.45 மணியளவில் வாரணாசியை

அடைந்தோம். நகரத்து சத்திரத்தின் மேலாளர் திரு.வள்ளியப்பன் இரயிலடிக்கு வந்து எங்கள் எல்லோரையும் மடத்து சத்திரத்திற்கு அழைத்துச் சென்று தங்க எல்லா வசதிகளையும் செய்து உபசரித்தார். சிறிது ஓய்வுக்குப்பின் நாங்கள் யாவரும் நேரே கங்கையில் நீராடி விட்டுச் சத்திரத்தில் மதியம் சாப்பாட்டை முடித்துக்கொண்டோம். மாலை 5.00 மணியளவில் அன்று பிரதோஷம் ஆகையால் சத்திரத் திலேயே உள்ள சிவாலயத்தில் அம்மை – அப்பனுக்குத் திருமஞ்சனமும் அலங்காரமும் வைதீக முறைப்படி நடைபெற்றது. கர்ப்பகிரகத்தைச் சுற்றியே மூன்று முறை எம்பெருமான் நந்திவாகனத்தில் ஆரோகணித்து வலம் வரும் காட்சியினைக் காண கொடுத்து வைத்திருக்க வேண்டும். அது சமயம் அடியேனும் எங்கள் குழுவினரோடு தேவாரம், சிவபுராணம், திருப்புகழ்ப் பாடல்களைப் பாடிக் கொண்டு மெய்மறந்து பக்தியில் திளைத்து மகிழ்ந்தோம்.

அதே நேரத்தில் நகரத்தார் சத்திரத்தில் தங்கியிருக்கும் ஆன்றோர்கள் வாயிலாக சில அரிய செய்திகளை கேட்டறிந்தேன்.

*"யான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்"*

என்னும் நன்னோக்கில் இச்செய்திகள் யாவையும் அவ்வப்போது எங்கள் குழுவினரிடம் பகிர்ந்துக் கொண்டேன்.

''இத்தலத்தை நான் இருப்பிடமாகக் கொண்டுள்ளேன். இதை விட்டு ஒருநாளும் அகல மாட்டேன்'' என்று விஸ்வநாதர் சத்திய பிரமாணம் செய்துள்ளதாக இலிங்க புராணத்தில் கூறியுள்ளதை அறிந்தேன். அதனாலேயே வாரணாசிக்கு ''அவிமுக்த ஷேத்திரம்'' என்ற பெயரும், விஸ்வ நாதருக்கு ''அவிமுக்தேஸ்வரர்' என்ற திருநாமமும் வழங்கப் பட்டன. 'காசி' என்பதற்கு 'தானே ஒளி விடக்கூடியது' என்று பொருள். இங்கே வீற்றிருக்கும் லிங்கம் ஒளியாய் அமைந்துள்ளதால் இதற்கு காசி என பெயர் வழங்கலாயிற்று.

இப்பொழுதுள்ள விஸ்வநாதர் ஆலயம் 200–ஆண்டுகளுக்குமுன் கட்டப்பட்டதாகும், இதற்குமுன் இருந்த கோயில் 1669–ல் சில எதிரிகள் இடிக்கப்பட்டதாக அறிந்தோம். தப்பிப் பிழைத்த ஒரே கோயில் 'காலபைரவர்' கோயிலேயாகும். அதற்குப் பிறகு பல ஆண்டு காலமாக காசியில் கோயில் இல்லை. இப்போதைய கோயிலை 1783ல் இந்தூர் ராணிஅகல்யாபாய் மீண்டும் எடுத்து 7வது முறையாகக் கட்டினார், ராணியே பழைய லிங்கமூர்த்தியை பிரதிஷ்டை செய்ய தகுந்த இடம் கிடைக்காததால் சிவலிங்கத்தை எதிரிகள் அழித்து விடாமல் இருக்க, பாதாள அறையில் பிரதிஷ்டை செய்து பூஜை நடத்தி வந்தார்.

பிரிட்டிஷார் ஆட்சியில் கங்கையில் யாத்திரிகள் நீராடுவதற்கு, வருவதற்கும் வரி விதித்தனர். பின்னர் பரோடாவை ஆண்ட 'கெய்க்வாட் ' என்ற மன்னர் வரியை ஆட்சேபித்து பிரிட்டிஷ் அரசிடம் விண்ணப்பித்தபோதும் அதை பிரிட்டிஷார் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள். இதனால் காசி வாசிகள் ஒன்று சேர்ந்து அரசாங்கத்தை எதிர்த்தார்கள். நவாப் மன்னர் காசியை முஸ்லீம் நாட்டு ஆதிக்கத்தில் சேர்க்கும் உடன்பாட்டில் கையெழுத்திட்டதைக் கேள்விப்பட்டு மேலும் மக்கள் கொந்தளித்து எதிர்த்தனர்.

பிறகு வல்லபாய்பட்டேலின் பெரும் முயற்சியால்தான் காசிமா நகரம் இந்தியாவுடன் சேர்ந்தது. 1951ஆம் ஆண்டு ஆலயம் புதுப்பிக்கப்பட்டு விழா எடுக்கும் தருவாயில் வல்லபாய் பட்டேல் அமரர் ஆகிவிட்டபடியால் பாபு இராஜேந்திர பிரசாத்தே விழாவை நிகழ்த்தும் பாக்கியம் பெற்றார் என அறியலானேன். ராணி அகல்யாபாய் அமைத்த வளாகத்திலேயே சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, கோபுரத்தின் மேல் இரண்டு தங்கக் கவசங்கள் அகல்யாபாய் அவர்களாலேயே நிறுவப்பட்டது.

புகழ் பெற்ற பஞ்சாப் மன்னன் இரஞ்சித்சிங் இக்கோயில் விமானத்திற்குத் தங்கத் தகடு பதித்தார், இதற்கு ஒரு டன் தங்கம்

தேவைப்பட்டது என அறியப்படுகிறது. இதனால் இவ்வாலயம் 'பொற் கோயில்' என வழங்கலாயிற்று. பிரதோஷ தினத்தன்று சத்திரத்தில் உள்ள சிவாலய தரிசனம் முடித்ததும் அன்று இரவே நகரத்தாரால் நிகழ்த்தித் தரப்படும் அர்த்தஜாம பூஜைக்கு (அலங்கார பூஜைக்கு) எல்லோருமாகச் சேர்ந்து விஸ்வநாதர் ஆலயத்திற்கு, குறுகிய தெருக்கள் வழியாக காசி தலத்து திருப்புகழ் பாடல்களைப் பாடிக்கொண்டு போனபோது, மோட்ச உலக வாசலில் நுழைந்து போவதுபோல் இருந்தது.

விஸ்வேஸ்வரர் – கர்ப்பகிரகத்தில் ஒரு சிறு பள்ளத்தில் மேற்கு நோக்கி ஒரு மூலையில் இக்கருவறை 10'x10' (அடி) அளவுக்குத்தான் இருக்கிறது. முழுவதம் சலவைக் கற்களால் பதிக்கப்பட்டிருக்கிறது. இங்குள்ள காசி விஸ்வநாதரின் கர்ப்பகிரகத்தில் சுற்றியுள்ள பிரகாரத்தில் தரையில் அந்நாளைய வெள்ளிக் காசுகள் பதிக்கப்பட்டிருந்தன, இதனால் 'பணம் கால் தூசுக்கு சமம்' என்ற எணணம் மக்களுக்கு ஏற்படவேண்டும் என்ற நோக்கத்திலேயே செய்திருப்பார்கள் என நினைக்கத் தோன்றுகிறது. அன்றிரவு அர்த்தஜாம பூஜையில் அலங்காரக் காட்சியைக் கண்டு சத்திரத்திற்கு திரும்புகையில் மணி 10.30.

குளிர்காலத்தில் விஸ்வேஸ்வரருக்கு குளிர்கால சட்டை (மக்மல்பட்டு) அணிவிக்க நகரத்தார்கள் கட்டளை ஏற்படுத்தி உள்ளன், என நண்பர் திரு.வள்ளியப்பன் கூறியதைக் கேட்டதும், நகரத்தார் இறைவன்பால் கொண்டுள்ள தூய பக்தியும், தங்களையே இறைவன் பால் அர்ப்பணித்துக்கொண்டு பருவ காலத்திற்கு ஏற்ப உடைகளை நாம் அணிவதுபோல் இறைவனுகரும் அணிவித்து மகிழும் பேற்றினை நினைக்குந் தோறும் நகரத்தார் குடும்பங்கள் அனைத்துமே நயத்தக்க நாகரீகத்தின் எல்லைக்கே சென்றுவிட்ட காட்சியை என் நெஞ்சில் வைத்துப் பாற்றினேன்.

நகரத்தார்கள் பல நாடுகளுக்கும் சென்று வர்த்தகம் புரிந்து பொருள் ஈட்டியதிலிருந்து ஒரு பகுதியைத் தெய்வப்பணிக்குச் செலவு செய்வதோடு அன்றி அவற்றினை நெறியினின்றும் வழுவாது இன்றுவரை கடைப்பிடித்தும் வருகிறார்கள்.

காசிவாசம் 10 மாதம் என்பது பழமொழி. அதனால் காசிக்கு போனால் 10 மாதம் தங்கியிருக்கு வேண்டும், அதன் அடிப்படையில் தங்கள் இறுதிக் காலத்தில் செல்லும் யாத்திரிகர்கள் எப்படியும் 10–மாதத்தில் உடலை விட்டுவிடுவார்கள் என்ற நம்பிக்கைதான். அதன் பின்பு 45 நாட்களாகக் குறைந்து, பிறகு 9 நாளாகிவிட்டது.

காசியிலேயே இப்புனித கங்கையானது தெற்கே 32 கி.மீ. தூரத்திலிருந்து வடக்கே 32கி.மீ தூரம் வரை உத்தரவாஹினியாக (தெற்கிலிருந்து வடக்கு நோக்கி) ஓடுகின்றது. ஹரித்துவாரத்தில் மிக வேகமாக ஓடுகின்ற கங்கையானது, விஸ்வநாதர் எழுந்தருளியுள்ள காசியில், கணவனிடம் பயபக்தியோடு வாழ்ந்து காட்டும் கற்புடையவளைப்போல், மெல்ல தவழ்ந்து ஓடுகின்றது. இந்நதி சற்று வளைந்து பாய்வதுபோல் தோன்றுவதால் கரையில் உள்ள 64 கட்டங்களையும் ஒரேசேர, ஒரே இடத்திலிருந்து பார்க்கலாம்.

இக்காசிமா நகரம் பார்வதி தேவியார் பெண் வடிவம் பெற்று சிவனை வணங்கி, ''என்னை வணங்குவோர் முக்தி அடைய வேண்டும்'' என வரம் பெற்றாள் என்பது வரலாறு. ''முக்தி'' என்றால் முற்றப்பெறுதல் எனப் பொருள். அதனால் மறு பிறவி கிடையாது என்பதையே முக்தி என்று சொல்கின்றனர். இந்தலத்தில் இறப்போர்க்கு பார்வதி தேவியே உபசாரம் செய்ய, சிவன் தாரக மந்திரம் கூறி, பிறவியை முற்றுப்பெறச் செய்வார் என்பது ஐதிகம். இதனைக் குறித்து,

*" மாதவத்தால் காசிதனில்*
*மாண்டவர்கள் தம் செவியில்*
*தீது அகல விச்வேசன்*
*செப்புவான் ஐந்தெழுத்தை மாதவள்*
*விசாலாட்சி*
*மடிக்கிடத்தி வீசுவாள்*
*வேதனை எல்லாம் தீர்த்து*
*வென்றிடுவர் பின் பிறப்பை'*

எனும் பாடலால் அறிய முடிகிறது, கந்த புராணத்திலும் ''தாரகப் பொருளாய் நின்றான்'' என கூறப்பட்டுள்ளது.

இங்கு இறப்பது புண்ணியம் எனக் கருதப்படுவதால் காசிக்கு 'மாமயானம்' என்ற பெயரும் உண்டு. காசியில் வருணை, அளி என்னும் இரண்டு ஆறுகள் ஒன்று கூடுவதால் வாரணாசி எனவும் வழங்கலாயிற்று, முஸ்லீம்கள் ஆண்ட காலத்தில் இந்நகரம் ''முகமதாபாத்'' என்று பெயரும் பெற்றிருந்தது.

காசி விஸ்வநாதருக்கு நகரத்தாரால் இன்றுவரை 3 வேளை பூஜை நிகழ்த்தி வருவது எவருக்கும் கிடைக்காத ஒரு பெரிய வரப்பிரசாதமாகும். இந்நகரத்தார் அமைத்துள்ள அனைத்து சத்திரங்களில் செய்து வரும் அன்னதானம் மறுபிறவியில் பசியே இல்லாத சுகு ஜீவிகளாக நகரத்து மக்கள் வாழ்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

நகரத்தார்கள், நகரத்தார் அல்லாதாரிடமிருந்து நன்கொடை பெறுவது கிடையாது, 1942–ஆம் ஆண்டு ஆகஸ்ட் கிளர்ச்சியின் விளைவாக ஊரில் ஊரடங்கு சட்டம் இருந்த நிலையிலும், இவர்களது பூஜைக்கு மட்டும் விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

இதுபோன்று அரிய செய்திகள் யாவையும் அடியேனுடன் வந்த குழுவினர்களிடம் அர்த்த ஜாம பூஜை முடித்து வந்ததும், இரவு 10.30 மணிக்குமேல் பகிர்ந்துக் கொண்டேன். இதை யாவரும் மெய் மறந்து கேட்டதோடு, அதே சிந்தனையில் படுக்கைக்குச் சென்றனர்.

1–6–2000 வியாழன் அன்று காலை 7.30 மணி அளவில் தனியார் சொகுசு பேருந்தின்மூலம் கயாவுக்குப் பயணமானோம். கயா காசியிலிருந்து 225 கி.மீ. தூரத்தில், கல்கத்தாவுக்குப் போகும் பாதையில் பிகார் மாநிலத்தில் உள்ளது. கயாவிற்கு மாலை 6 மணி அளவில் போய்ச் சேர்ந்தோம். அன்றிரவு நகரத்தார் சத்திரத்தில தங்கிவிட்டு மறுநாள் காலை 2–6–2000 வெள்ளி அன்று அமாவாசை ஆனதால் கங்கையின் கிளை ஆறான பல்குனி ஆற்றங்கரையில் பிதுரர்களுக்குப் பிண்டதானம் செய்தோம். பல்குனி ஆற்றை ஒரு வடநாட்டு வைகை ஆறு என்றே கூறலாம், கை வைத்துத் தோண்டினால்தான் தண்ணீர் கிடைக்கும்.

பிரயாகையில் முண்டம், காசியில் தண்டம், கயையில் பிண்டம் என்பது பழமொழி, அதாவது பிரயாகையில் மடி வாங்கிக்கொள்ள வேண்டும், காசியில் விஸ்வநாதரை உள்ளன்போடு வணங்க வேண்டும், கயையில் பிதுரர்களுக்குப் பிண்டம் போட வேண்டும் என்பதாகும். கயாவைப்பற்றிய செய்திகளைக் கேட்க ஆவலோடு எதிர்பார்த்திருந்த குழுவினர்களுக்கு அடியேன் அறிந்தவற்றைக் கீழ்வருமாறு கூறலானேன். இதனால் யாவரும் கருத்தறிந்து பக்தி உணர்வோடு இறைவனைத் தியானித்து வணங்க வாய்ப்பளித்தது. கயாசுரன் என்பவன் சிறந்த நாராயண பக்தன், அவன் இங்கிருந்து (கயை) தவம் செய்து நற்கதி பெற்றதினால் இத்தலம் தூய்மை பெற்றது. அதனால் அவன் பெயராலேயே இத்தலம் கயா எனப் பெயர் பெற்றது.

பல்குனி நதிக்கரையில் விஷ்ணு பாதம் என்ற ஆலயம் உள்ளது. கர்ப்பகிரகத்தில் விஷ்ணு பாதமே உள்ளது. அப்பாதத்திற்கு மேலிருந்து நீர்த்துளி அவ்வப்போது சொட்டுகின்றது. அது எங்கிருந்து எப்படி சொட்டுகின்றது என்பதை அறிய முடியவில்லை.

கீழே விழுந்து தளி உலர்ந்ததும் மற்றொரு துளி விழுகின்றது. இதை நேரில் யாவரும் கண்டறிந்தோம். இதனை ஒரு அதிசயம் என்றே கூறலாம். இப்பாதத்தில் பித்துரு பிண்டம் போடவேண்டும். அதோடு பல்குனி நதி, அட்சயவடம் என்னும் இடங்களிலும் பிண்டம் போட வேண்டும் என்பது ஐதிகம். நாங்கள் யாவரும் இந்த சங்கல்பத்தை முடித்துக்கொண்டு, காலை 10.30 மணி அளவில்

கயாவிலிருந்து 13 கி. மீ. தொலைவில் உள்ள புத்தகயாவுக்குச் சென்றோம். அங்கேதான் புத்தர் ஞானம் பெற்றார். அவர் தவம் இருந்த போதிமரமும் இருக்கிறது. அசோகர் கட்டிய மாபோதி ஆலயம் உள்ளதை தரிசித்தோம். இங்குள்ள ஆலய கோபுரம் 170 அடி உயரம் கொண்டுள்ளதையும் கண்டோம். இப்போதுள்ள போதிமரம் அனுராதபுரத்திலிருந்து மரக் கிளையைக் கொண்டு வந்து இவ்விடத்தில் நட்டு வளர்த் திருந்ததையும் கண்டு வணங்கினோம்.

கடைசியாக காசியில் உள்ள நகரத்தார் சத்திரம் சென்றடைந்தோம். அன்றிரவு யாவரும் இறைவனது சிந்தனையி லேயே மனம் பாவித்துப் படுக்கைக்குச் சென்றோம்.

மறுநாள் 3-6-2000 சனி அன்று காலை சிற்றுண்டியை முடித்துக் கொண்டு மேலும் அன்றைய பொழுது காசியில் உள்ள எல்லா கட்டங்களிலும் ஸ்தானம் செய்ய முடியாது போனபோதிலும் பஞ்சதீர்த்த கட்டங்களான அளிசங்கமம் கட்டம், தசாசுவேத கட்டம், வருணசங்கமம், கட்டம், பஞ்ச கங்கா கட்டம், மணிகர்னிகா கட்டம் போன்றவைகளில் ஓடம் மூலமாக நீராடச் சென்றபோது முதலில் இரயில் பாலத்தை நோக்கி ஓடம் சென்றதும் 3500 அடி நீளமுள்ள மிகப் பெரிய இரண்டடுக்கு பாலத்தை கண்டோம். கீழே இரயில் பாலமும் மேலே பேருந்துகள், லாரிகள் செல்லும் பாலமுமாக இருந்தது.

மணிர்கணிகா கட்டத்தைப்பற்றி அடியேனுக்குத் தெரிந்தவரை எங்கள் குழுவினருக்கு முதற்கண் விளக்கம் அளித்தது, யாவருக்கும் மனச்சாந்தி அளித்தது என்பதை அவர்களது முகத்திலிருந்தே அறியலானேன். மணிகர்ணிகா கட்டத்தில் நள்ளிரவில் சிவன் நடனமாடுகிறார் என்பது ஐதிகம். இது பெரிய சுடுகாடல்லவா! சிவனும் சுடலை ஆண்டிதானே! காசிக்கு பகிரதனால் கங்கை வருவதற்கு முன்னர் திருமால் சக்கரத்தால் ஒரு திரக்குளத்தை உண்டாக்கி அதன் கரையில் சிவபெருமானை வேண்டி மாதவம் புரிந்தார். விஸ்வேஸ்வரரே அவர்முன் காட்சியளித்து அவரது தவத்தை ஏற்று சிரக்கம்பம் செய்தார். அத்தருணத்தில் அவருடைய திருச்செவியில் உள்ள குண்டலத்தின் நாகமணி நழுவி அக்குளத்தில் விழுந்தது, அதனால் அக்குளத்திற்கு மணிகர்ணிகா என்னும் பெயர் வழங்கப்பட்டது. பின்பு மணிகர்ணிக்காவில் கங்கையும் கலந்ததால் இதன் பெருமை மேலும் சிறப்புற்றது. இக்கட்டத்தில் முப்பத்து முக்கோடி தேவர்களும் உச்சி காலத்தில் நீராட வருவர் எனக் கூறப்படுகிறது. அதனால் கடும் வெப்பத்தைத் தணிக்கத் தூய்மையான உள்ளத்தோடு உச்சிவேளையில் நீராடினால் நாமும் தேவர்களாக மாறாவிட்டாலும், ''பெற்றாலும் பிறந்தேன் இனி பிறவாதத் தன்மை வந்தெய்தினேன்'' எனும் தேவராப் பாடலுக்கு உயிர் ஊட்டும் வகையில் இறைவன் அருள் புரிய. பிரார்த்திக் கொண்டோம்.

மணிகர்ணிகா கட்டம், 5 கட்டங்களிலும் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். இக்கட்டம் மிகவும் கீர்த்தி வாய்ந்ததால் எங்கள் குழுவினர் மேலும் மற்றொரு முறை சந்தேகத்திற்காக ஸ்நானம் செய்ய துணியலாயினர். ஸ்நானத்தை முடித்ததும் துண்டி இராஜ விநாயகரை,

*'' முப்புரம் எரி செய்த அச்சிவன் உரை ரதம்*
*அச்சது பொடி செய்த – அதிதீரா''*

என துதி செய்துக் கொண்டு நகர தனவணிகர்களால் உபயமாகச் செய்து வரும் உச்சிக்கால பூஜையையும், நிதானமாக தரிசனம் செய்து கொண்டு அங்கிருந்து விஸ்வநாதருக்கு அருகிலேயே மேற்கு நோக்கியுள்ள அருள் பாலிக்கும் அன்னப்பூரணி அம்மையை மனம் குளிர பாடல்களைப் பாடி வணங்கினோம். விஸ்வநாதர் ஆலயத்திற்கும், அன்னப்பூரணி ஆலயத்திற்கும் இடையே அட்சயவடம் (ஆலமரம்) என்பதையும் கண்டு வணங்கினோம். அங்கிருந்து விஸ்வநாதர் ஆலயத்திற்குச் சென்று துதி செய்தோம். இக்கோயிலை நகர தனவணிகர்கள் அண்மையில் புதுப்பித்துள்ளார்கள். மதவெறி கொண்ட வேற்று அரசர்களின் ஆட்சி நிகழ்ந்த காலத்தில் அச்சத்தினால் கீர்த்தி வாய்ந்த மூர்த்திகளை ஆங்காங்கு அஞ்ஞாத வாசம் போல் ஒளித்தும் மறைத்து வைத்தும் வழிப்பட்ட காரணத்தினால் ஆங்காங்குள்ள சக்தி வாய்ந்த மூர்த்திகளின் கோயில்கள் தென்னாட்டில் உள்ளது போன்று விசாலம் இன்றிச் சுருங்கிய இடத்தில் அமைந்திருப்பதையும், எங்கள் குழுவினருக்கு விளக்கினேன். காசியில் ஐந்து அதிசயங்கள் உள்ளன என்றதும், எல்லோரும் அவலோடு கேட்டறிந்தனர். 1. பிணம் நாறாது, 2. பூ மணக்காது, 3. மாடுகள் முட்டாது, 4. பல்லி சொல்லாது, 5. கருடன் பறக்காது – இன்றைய நடைமுறையில் இதனை ஏற்றுக் கொள்ளும் விதத்தில் அமைந்துள்ளதா! என ஆராய்ந்து அறிந்ததோடன்றி, அங்குள் ளோர்கள் வாயிலாகவும் உறுதிப்படுத்திக் கொண்டார்.

அன்று மாலையில் 4 மணி அளவில் குமாரசாமி மடத்தை ஒட்டிக் கட்டப்பட்டுள்ள கேதாரிஸ்வரர் கோயிலுக்குச் சென்றோம். முதலில் புற அழுக்கை நீக்க இங்குள்ள கேதார் கட்டத்தில் நீராடிவிட்டு அக இருளை அகற்ற எங்கள் கையாலேயே கேதாரீஸ்வரருக்கு அபிஷேகம் செய்தோம். இந்த அபூர்வமான வாய்ப்பு தென்னாட்டில் எங்கும் கிடைக்காத போதிலும், வடநாட்டில் காசியில் கிடைத்தது இறைவன் அளித்த வரப்பிரசாதம் என்றே கருதினோம்.

ஆலயத்திலிருந்து திரும்பிச் செல்லவே மனம் வராது அருகாமையிலுள்ள குமாரசாமி மடத்திற்குச் சென்றோம். மடத்தில் குமரகுருபரர் படமும், சுற்றுபிரகாரத்துச் சுவரில் குமரகுருபரர் வரலாற்றினை ஓவியமாகத் தீட்டியிருந்தது, எங்கள் யாவருக்கும் அன்னாரது வரலாற்றினைச் சொல்லாமலேயே அறிந்து கொள்ள முடிந்தது.

குமரகுருபர படத்திற்கு எதிரில் அவரால் காசியில் சரஸ்வதியின் மேல் பாடப்பட்ட சகலகலாவல்லி மாலை என்னும் பத்துப் பாடல்களையும் அடியேன் பாடியபோது என்னையும் அறியாமல் கண்களில் நீர் மல்கியதைக் கண்டதும், இப்பாடலில் என்ன அதிசயம் கண்டு ஆனந்தித்தீர் என குழுவினர் கேட்ட சமயம், குமரகுருபரரின் வரலாற்றினைக் கீழ்வருமாறு கூறலானேன்.

பிறவி ஊமையரான குமரகுருபரர் செந்தூர் முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்று, கவிகள் பாடும் திறனைப் பெற்றார். தன குருவின் ஆணைப்படி காசியில் ஒரு மடம் கட்ட எண்ணி, நவாப் அரசரைக் கண்டு நிலம் பெற வேண்டினார். அது சமயம் அரசர் தக்க மரியாதை தராததைக் கண்டு மறுநாள் கலைவாணியைத் துதி செய்து, தேவியின் அருளால் இந்தி பேசும் வல்லமையும் பெற்று சிங்கத்தின் மேல் அமர்ந்து அரசனிடம் சென்றதும், யாவரும் பயந்தோடி அரசனுக்குத் தெரிவிக்க அரசனும் அச்சமுற்று தக்க மரியாதைகளைச் செய்து சுவாமிகளை அணுகி தங்களுக்குத் தேவையானதைச் சொல்லும்படி கேட்க.

மடம் கட்ட நிலம் வேண்டும் எனக் கேட்ட குமரகுரு பரருக்கு, அரசர் அவ்வாறே தருகிறேன் என்று வாக்களித்தான். இதைக் கேட்ட அவனது மந்திரி எங்கு எவ்வளவு இடம் கேட்பானோ என்ற அச்சத்தால், காசியிலே என்றும் கருடன் பறக்காததைத் தெரிந்திருந்தால், அரசனிடம் கருடன் பறக்கும் கீழ்

உள்ள இடத்தைத் தருவதாக வாக்களிக்கும்படி கூறியதைக் கேட்டு, அரசனும் அவ்வாறே குமரகுருபரருககு வாக்களித்த சமயம், குமரகுருபரர் சரஸ்தியைத் துதி செய்ததும், என்றுமே பறக்காத கருடன், குமரகுருபரருக்காக வானத்தில் வட்டமிட்டுக் காட்டியதும் அந்நிலப் பரப்பை அரசன் அளித்தான். குமரகுருபரரும் ஒரு மடத்தையும், கேதாரீஸ்வரர் ஆலயமும், கட்டி முடித்தார், அங்கு தலைமை வகித்த 20 வது பட்டம் அருணந்தி தம்பிரான், தனது இறுதிநாளில் காசியிலேயே ஆவியை விட எண்ணி 1972ஆம் ஆண்டுமே மாதம் 18–ம் நாள் ஜல சமாதி மூலம் தன்னைக் கங்கையில் அர்பணித்துக் கொண்டது யாவரும் அறிந்ததே. நம் குழந்தைச் செல்வங்களுக்கு, இன்றிலிருந்தாவது, சகலாவல்லி பாடல்களைக் கற்றுக் கொடுத்து தினமும் காலையில் பாடிவிட்டு, பள்ளிப் பாடங்களை படிப்பார்களேயானால், நிச்சயம் வருங்காலத்தில் டாக்டர் உ.வே.சா, திரு.வி. க. சர். சி. பிர. இராமன், கணித மேதை ராமானுஜம் போன்றோர்களைப் போல் சிறப்போடு விளங்குவார்கள் என்பதில் சந்தேகமில்லை. எல்லோரும் மெய்மறந்து, சகலகாலவல்லி 10 பாடல்களையும் அடியேனைப் பாடச் சொல்லி, அப்பாடல்களைக் கொண்ட புத்தகங்களையும் மடத்திலேயே வாங்கிக் கொண்டனர்.

உடனே, கால பைரவரை தரிசித்தோம். காசியிலிருந்து வெளியேறுகிறவர்கள், இவரது அனுமதி பெற்றுதான் போக வேண்டும் என்பது ஐதீகம். காலபைரவரை ஒரு திரை போட்டு மூடியுள்ளார்கள். திரையை விலக்கிக் காட்ட ரூ.20/– கட்டணம் கொடுத்தால் காட்டுகின்றனர். பணம் கொடுத்து அடியேன் மட்டும் பார்த்தேன். சிதம்பர ரகசியம்தான். திரைக்குப் பின்னால் ஒன்று மில்லை. இங்கு புரோகிதர் எங்கள் ஒவ்வொருவர் முதுகிலும் ஓர் அடி கொடுத்தார். சிவன் சொத்து எதையும் நாங்கள் எடுத்துப் போகிறோமா என்பதைத்தான் அப்படித் தட்டிப் பார்க்கிறார். உடனே அங்கிருந்து 8 கி.மீ. தூரத்திலுள்ள சாரநாத்துக்குப் போனோம். இது புத்த மதத்தினரது புனித இடம். ஞானம் பெற்ற

புத்தர் தனது முதல் அறிவிரையை இங்குதான் நிகழ்த்தினார். புத்தமதம் தோன்றியதே இங்குதான். 1956ல் புத்தரின் 2500வது பிறந்த நாள் விழாவை, சாரநாத்தில்தான் இந்திய அரசு கொண்டாடியது யாவரும் அறிந்ததேயாகும்.

உடனே அங்கிருந்து காசி மன்னன் அரண்மனைக்குச் சென்று, அன்றைய காலத்தில் பயன்படுத்திய உடைகளிலிருந்து ஆயுதங்கள்வரை கண்டு களித்தோம். கங்கையைத் தொட்டுக் கொண்டே பெரிய கோட்டையில் இந்த அரண்மனை கட்டப்பட்டுள்ளது. பிறகு அங்கிருந்து பல்கலைக்கழகத்தை வெளியில் இருந்தே பார்த்துவிட்டு. பிர்லா கோவிலையும், அங்கு உள்ள பெரிய ஐந்துமுக லிங்கத்தையும் கண்டு களித்தோம். பிறகு அனுமார் கோவிலையும் தரிசித்தோம். அங்கு விற்கும் லட்டு பால்கோவா என்ற இனிப்புகளை வாங்கி, அனுமாருக்குப் படைத்தவிட்டு, குரங்குகளுககும் கொடுத்தோம். உடனே மதியம் சாப்பாட்டிற்குச் சத்திரத்துக்குச் சென்றுவிட்டோம்.

# 36 . வட நாட்டு தலங்கள் – கேதார்நாத் – பத்ரிநாத் யாத்திரையின் வரலாறு

**நா**ங்கள் 10 நபர்கள் அடங்கிய ஒரு குழுவாக தல யாத்திரை செல்லும் நிமித்தம் பூலோக கைலாசமும், வைகுண்டமும் ஆகிய கேதார்நாத், பத்ரிநாத் என்னும் திருத்தலங்களுக்கு செப்டம்பர் 96ல் சென்று வந்தோம். நாங்கள் கண்டடதும் கேள்விப்பட்டதும் ஆகிய அனுபவங்களை அனைவருடன் பகிர்ந்து கொள்வதால் மேலும் தல யாத்திரை செல்பவர்களுக்கு உபயோகமாக இருக்கும் என்று நண்பர்கள் கூறியதையொட்டி எங்கள் அனுபவங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். நாங்கள் கண்டதைவிடக் காணாமல் விட்டது மிகப் பல. ஆயினும் எங்கள் அனுபவமும், கேட்டறிந்த தகவலும் உபயோகமாக இரந்தால் எங்கள் முயற்சியின் பலன் எங்களுக்குக் கிட்டியதாக மகிழ்வோம்.

27–09–96 வெள்ளியன்று நாங்கள் பத்துப் பேர் இந்திய தலைநகராம் டெல்லி மாநகரிலிருந்து இரவு 11 மணிக்குக் கிளம்பும் டி.எல். 8320 என்ற தனியார் சொகுசு பேருந்து மூலம் எங்கள் தல யாத்திரையைத் துவங்கினோம். இரவு முழுவதும் பேருந்தில் பயணித்து 267 கி.மீ. தொலைவில் உள்ள ஹரித்வார் என்னும் இடத்தை 28–09–96 சனிக்கிழமை அன்று காலை 6 மணி

அளவில் அடைந்தோம். இவ்விடத்தையே மாயாபுரி எனவும் கூறுவர்.

ஹரித்வார், திருப்புகழ் பாடல் பெற்ற தலம். இது இமயமலை அடிவாரத்திலே உள்ள ஒரு மிகப் பழமையான திருத்தலம். ''டெஹ்ராடூன்''ல் இருந்து சுமார் 30 கி.மீ. தொலைவிலும் ''ரூர்க்கி'' என்னும் தொழில் நகரத்தில் இருந்து சுமார் 25 கி.மீ. வடக்கிலுகமாக உள்ள ஒரு பெரிய ஊர். டெல்லியிலிருந்து புகைவண்டித் தடமும் உண்டு. இந்தத் திருத்தலத்தில் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை 'கும்பமேளா' என்னும புண்ணிய விழாவும் 6 ஆண்டுகளுக்கு ஒருமுறை அர்த்தகம்பமேளா விழாவும் நடைபெறுகிறது. இத்தலம் பிரம்மலோகமோ, வைகுண்டமோ அல்லது கைலாசமோ என்று தோன்றுமளவில், சந்நியாசிகளும், ஞானிகளும், அறிஞர்களும் மற்றும், இறையன்பர்களும் இலட்சக்கணக்கில் கூடி அத்திருநாளில் புண்ணய நதியாம் கங்கையில் நீராடுவதை வாழ்க்கையின் பெறும் பேராகக் கருதுகின்றனர். அத்தகைய நாட்களில் தர்மசிந்தனை உள்ளவர்களால் நிறுவப்பட்ட அறக்கட்டளைகளும், உத்திரப் பிரதேச மாநில அரசும் உணவு, தங்க இருப்பிடம் முதலிய வசதிகளை யாத்திரிகர்களக்குத் தாராளமாகச் செய்து கொடுக் கின்றனர். ''உத்திரகாண்ட்'' அல்லது ''சார்தாம்'' எனக் கூறப்படும் கங்கோத்ரி, யமுனோத்ரி, கேதார் நாத் மற்றும் பத்ரிநாத் செல்ல ஹரித்வார் ஒரு நுழைவு வாயில். வடமொழியில் ஹரித்வார் என்னும் சொல் திருமால் திருக்கோயிலில் நுழையும் வாயில் என்னும் பொருளைக் குறிக்கிறது. இங்கிருந்து தான் புண்ணிய நதியாகிய கங்கை பிரிந்து விரிந்து பல கிளைகளாகப் பரிந்து வடநாடு முழுமைக்கும் வளமை கொழிக்க, பிரவாகம் எடுக்கிறது.

**ரிஷிகேசம் :**

எங்கள் குழு ஹரித்வாரத்தில் முதலில் நிற்காமல்அங்கிருந்து 83 கி.மீ. தொலைவில் உள்ள ரிஷிகேசம் என்னும் தலத்தைக் காலை 9 மணி அளவில் அடைந்தது. இந்த ஊரின் பெயரே தவமகிமையை

நமக்கு உணர்த்தி விடுகிறது. எப்பொழுதும் மகரிஷிகள் சூழ்ந்த இடமே ரிஷிகேசம். கங்கை நதி எப்பொழுதும் பனி சூழ்ந்த இமயமலையிலிருந்து இறங்கிச் சமதரையை தொடும் இந்தத் தலத்தில் வனங்களும், மலைகளும் சூழ்ந்து ஆசிரமங்களும், பர்ணசாலைகளும், திருக்கோயில்களும், விடுதிகளும் நிரமபி ஒரு அமைதியான ஆன்மீக சூழ்நிலையை அளிக்கின்றன. ரிஷிகேஷ் ஹரித்வாரைவிடச் சற்றே சிறிய ஊர் ஆகும். இங்கிருந்துதான் மலை ஏறி யாத்ரீகர்கள் ''உத்தரகாண்ட'' திருத்தலங்களை அடைய வேண்டும். எனினும் வாகன வசதிகளுக்காக யாத்திரிகர்கள் ஹரித்வாரத்தில் இருந்து பயணத்தைத் துவங்குவதுதான் வழக்கம். இந்த ஊருக்கு அழகு கூட்டுவது கங்கை நதியின் மேல்தூண்களின் உதவி இன்றி உள்ள மிக நீண்ட இரு தொங்கு பாலங்கள்ஆகும். இந்த பாலங்களில் வாகனங்கள் செல்ல இயலாது. பாதசாரிகள் மட்டும் செல்ல இயலும். இதில் சுமார் 100 ஆண்டுகள் ஆன ''லக்ஷ்மணஜூலா'' என்னும் பாலம் ''முனீகிரெட்டி'' என்னும் இடத்தையும் மகரிஷி மகேஷ்யோகி அவர்களின் ஆசிரமத்தையும் இணைக்கிறது. இந்த பாலம் துவங்கும் இடத்தில் இளைய பெருமாள் இலக்ஷ்மணனுக்கு ஒரு திருக்கோயிலும் உண்டு.

இந்த பாலத்தின் மூலம் கங்கை நதியைக் கடந்து ஆரண்ய பகுதியாக உள்ள வனங்களின் ஊடே செல்லும் நடைபாதை வழியாக சுமார் 1 கி.மீ தொலைவு சென்று ''கீதாபவன்'' என்னும் இடதனை அடைகிறோம். வழியில் ஆங்காங்கே துறவிகள் தங்கும் பர்ணசாலைகளும் சிறு சிறு ஆலயங்களும் மற்றும் யாத்திரிகர்கள் தங்க வசதியான விடுதிகளும் நிரம்ப உள்ளன. அவற்றுள்ள குறிப்பிடத்தகுந்தது, ''காலிகம்பளிவாலா'' தர்மசாலை. இது 100 ஆண்டுகளுக்கு முன்பாக வங்காளத்தைச் சேர்ந்த துறவிகளால் நிறுவப்பட்டது. வாகன வசதிகள் இல்லாது இருந்தபொழுது யாத்திரிகர் அனைவரும் ரிஷிகேஸத்திலிருந்து கிளம்பி, கங்கை நதியின் கரையோரமாகவே மாதக்கணக்கில் நடந்து யாத்திரை செய்வர். அத்தகைய யாத்ரீகர்கள் அனைவரும் ரிஷிகேஸத்தில்

இந்தச் சத்திரத்தில் தங்கி மடாதிபதிகளின் ஆசி பெற்றுக் கொண்டு அவர்களால் அளிக்கப்பெறும் கம்பளிப் போர்வையைப் பெற்றுக் கொண்டு செல்வர். யாத்திரிகர்களுக்கு இலவசமாக இடவசதி, உணவு, ஊன்றிச் செல்ல ஒரு கம்பு மற்றும் கருப்பு நிற கம்பளியை அளிப்பதை இவர்கள் ஒரு விரதமாகவே கொண்டு இருந்தனர். இப்பொழுதும் இங்கு மட்டுமல்ல, பத்ரியிலிருந்து வரும் அலகனந்தாவும், கேதார் நாத்திலிருந்து தோன்றி வரும் மந்தாகினி நதியும் சங்கமிக்கும் ''ருத்ரப்பிரயாகை'' என்னும் இடத்திலும் இவர்களுடைய சத்திரம் நவீன வசதகளுடன் பராமரிக்கப்பட்டு வருகிறது. சிறு கட்டணங்களில் வசதியான தங்குமிடங்களும் பொருள் இல்லாதவர்களுக்கு இலவசமாக தங்க விசாலமான கூடங்களும் உள்ளன. அடுத்து ''கீதாபவன்'' என்னும் இடம் ஒரு மிகப் பெரிய சத்திரம் ஆகும். இங்கு நான்கு புறங்களிலும் உள்ள சுவர்களில் மகாபாரதக் கதைகளைக் கண்ணைக் கவரும் வண்ணச்சிததிரங்களாக வடித்து இருக்கின்றனர். மற்றும், பரமார்த்த நிகேதன், சொர்க்க ஆசிரமம் இரண்டும் அனைவராலும் ரசிக்கப்படும் இடங்களாக உள்ளன. மலையில் இருந்து இறங்கி மனிதனால் மாசு படுத்தப்படுவதற்கு முன்பு உள்ள கங்கைப் பிரவாகம் தொட்டவுடன் பனிக்கட்டி என சிலிர்க்கும் வகையில் பாறைகளின் ஊடே சலசலக்கிறது. இதில் அமிழ்ந்து ஸ்நானம் செய்வது ஒரு தனி அனுபவம். இத்துடன் திரும்பி நகர்ப்பகுதிக்கு ஆற்றைக் கடந்து வந்தவுடன் ஊர் எல்லையில் வரவேற்பது ஆந்திரப்பிரதேச சுற்றுலா துறையினரால் நிர்வகிக்கப்பட்டுவரும், சமீபத்தில் கட்டப்பட்ட திருப்பதி வெங்கடாஜலபதி பெருமாளின் திருக்கோயில், கம்பீரமாகத் தோற்றம் அளிக்கும் ராஜகோபுரத் துடன் காணவும் நாம் தென்நாட்டிற்குத் திரும்பிவிட்டோமோ என்ற உணர்வு உடனே ஏற்படுகிறது. கைலாச மலையிலிருந்து குமரிமுனை வரையிலும் நமது பாரத தேசம், ஒன்றே என்னும் பெருமித உணர்வு நமக்கு உண்டாகிறது. சுவாமி சிவானந்த ஆசிரமம், இராமகிருஷ்ணர் மடம் இந்திய மற்றும் உத்திரப்பிரதேச மாநில

சுற்றுலா விடுதிகளும் யாத்திரிகர்களுக்கு எல்லாவித வசதிகளையும் செய்து கொடுத்து மகிழ்வூட்டுகின்றன. சற்றே ஊருக்குள் சென்றால் காய்கறி, பழங்கள், மளிகை மற்றும் யாத்திரைக்குத் தேவையான இதர தளவாடங்கள் விற்பனை ஆகும் கடைத்தெருவும், பேருந்து நிலையமும் உள்ளன. நாங்கள் மனம் நிரமப் அமைதியும் திருப்தியும் அடைந்து ரிஷிகேஸத்தைத் தரிசித்த பெருமையுடன் அங்கு பகல் உணவு உண்டு பேருந்து மூலம் ஹரித்வாருக்குத் திரும்பினோம். திரும்பும் வழியில் ஓரிடத்தில கங்கை நதி ஏழு பிரிவுகளாகப் பிரிந்து நம் திருவரங்கத்தில் உள்ள காவிரியை நினைவுப் படுத்துவதுபோல மீண்டும் கூடுகிறது. இந்த இடத்திற்கு ''சப்தரிஷி'' என்று மிகப் பொருத்தமாகப் பெயர் சூட்டப் பட்டுள்ளது. கௌதம, காசிப, வசிஷ்டர் முதலான சப்தரிஷி களுக்கும் சிறுசிறு கோயில்களும், அதனுள் பெரிய – பெரிய மூர்த்தங்களும் ஆகக் காட்சி அளிக்கின்றன. இந்த இடம் முழுவதும் ''மா'' முதலிய பழமரங்கள் நிரம்பிய வனப்பகுதிகள் ஆகும். மாலை 4.30 மணி அளவில் ஹரித்வார் திரும்பினோம்.

**ஹரித்வார் :**

கங்கை நதியின் மேற்புறத்தில் ஒரு குன்றின்மேல் ''மானஸா தேவி''யின் ஆலயம் உள்ளது. படிவழி தவிர (Ropeway) என்னும் தொங்கும் ஊர்தி அடிவாரத்தில் இருந்து குன்றின் உச்சிக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. அந்த ஊர்தியில் செல்லும்போது ஹரித்வார் நகரமும் ஆங்காங்கே உள்ள கோயில்களும் வனப்புடன் திகழும் கங்கை நதியும் கண்ணுக்கு விருந்து அளிக்கின்றன. இந்த ஆலயத்தைத் (Ropeway) தரிசிப்பதற்கு மூலம் ஒரு ஆளுக்கு ரூ. 20/– கட்டணம் செலுத்தி பளிங்குக் கல்லினால் செய்யப்பட்ட மானஸாதேவியைத் தரிசித்து செந்தூரக் கலரில் உள்ள குங்குமப் பிரசாதத்துடன் திரும்புகிறோம். இருட்டுவதற்கு முன் அனைத்தையும் கண்டு களிக்க வேண்டும் என்பதால் உடனே திரும்பி கங்கைக் கரையை அடைகிறோம். இலட்சக்கணக்கான

யாத்திரிகர்கள் கூடும் இடமாகையால் அகலமான தளங்களுடன் ஆங்காங்கே பாலங்கள் கட்டப்பெற்று நடுவில் ஒரு உயரமான மணிக்கூண்டுடன் தோன்றும் கங்கைக் கரையே நமக்கு ஒரு தேவலோகக் காட்சியை நினைவூட்டுகிறது. இங்கு பிரவாகம் மிக வேகமாகச் செல்வதால் நதி இரண்டு. மூன்றாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பக்கக் கரையோரத்திலும், படிக்கட்டுகளும், இரும்புக்கம்பிகளும் பொருத்தப்பெற்று, பிடிமானத்திற்கு ஏதுவாக சங்கிலிகளும் தொங்கவிடப்பட்டுள்ளன. நீச்சல் கலை தெரிந்த காவலாளிகளும் ஆங்காங்கே பாதுகாப்புப் பணி ஆற்றுகின்றனர். நூற்றுக்கணக்கான வாகனங்களை நிறுத்த, நதியின் எதிர் புறத்தே வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இவ்வளவுக்கும் மத்தியில் சிறு. சிறு கோயில்கள் நதியிலும் கரையிலுமாக நிரமபிய புராதனமான ஸ்நானக் கட்டத்தை ''பிரம்மகுண்டம்'' என்று கூறுகிறார்கள். இந்த இடத்தில் புனித கங்கை நதி ஹரியின் பாதங்களை வலமாக வந்து கீழ் உள்ள ஆயிரக்கணக்கான கி/மீட்டர்களில் பரந்து – விரிந்து உலகின் ஒரு மிக வளமையான கங்கைச் சமவெளிக்கு வித்தாகிறது. இந்த இடத்தில் குளித்து புனித கங்கைத் தாயாருக்கு பூஜை செய்கிறோம். இந்த இடத்தில் பெண்கள் குளிப்பதற்கு வசதியாக கங்கை நதியில் தடுப்புகள் ஏற்படுத்தி இருக்கின்றனர். மாலையில் சூரியன் அஸ்தமிக்கும்பொழுது கோயில் பூசாரிகளும், ஆயிரக்கணக்கான பக்தர்களும் கைகளில் கற்பூரத்தட்டையும், நெய் தீபங்களையும் எடுத்துக் கொண்டு ''ஓம் ஓம்'' எனும் மணிகள் நாதத்துடனும், பலவித வாத்யகோஷத்துடனும் கங்கை நதிக்கு தீப ஆராதனை செய்கின்றனர். அவ்வமயம் வடநாட்டு பக்தர்கள் அனைவரும ''ஓம் ஜய ஜகதீக்ஷகரே'' என்பது போன்ற ஆரத்திப் பாடல்களை லஜ்ஜை இன்றிக் குரல் எடுத்துப் பாடி தாங்களும் மகிழ்ந்து அனைவரையும் மகிழ்விக்கின்றனர். மதவெறி பிடித்து மனித நேயம் இன்றிப் பயனற்ற வாழ்க்கையினின்று கரையேறும் பொருட்டே நம் முன்னோர்கள் இறைவனின் பெயரால் ஆலயங்களையும், தீர்த்தங்களையும் அமைத்துள்ளதை இதிகாச

புராணப் பாடல்கள் மூலம் நம்மால் அறிய முடிகிறது. இந்த அடிப்படையில் நம் பாரதத்தில் உள்ள அநேக புண்ணிய தீர்த்தங்களுள் மிகச் சிறப்பாகக் கொணடாடப்படும் கங்கை நதியில் நாங்கள் நீராடும்பொழுது "ஈன்ற தாய் தன் குழந்தையை எடுத்து அதன் புற அழுக்கை நீக்க நீராட்டுவதைப்" போன்ற சுகத்துடன் நம் அனைவரின் தாயான புனித நீராம் கங்கையின் ஸ்பரிஸம் நம்மேல் பட்டவுடன் நமக்கு நம்முடைய புற அழுக்கை மட்டும் அல்லாது ஆன்மாவில் படிந்துள்ள அழுக்கையும் அறவே அகற்றி, பிரயாணக் களைப்பைப் போக்கிப் பல பிறவிகள் எடுத்து சலித்த இப்பிறவிக் களைப்பும் நீங்கியதுபோல் ஓர் உணர்வு தோன்றியதில் வியப்பு ஒன்றும் இல்லை. இத்தகைய பனித யாத்திரையின் பொழுது இன்னலும், இடையூறும் நேரிடாமல் எமக்குத் தோன்றாத துணையாயிருந்து கருணை மழை பொழிந்த எம்பெருமானுக்கு நன்றி சொல்ல வார்த்தைகள் தோன்றாது போன போதிலும் அருணகிரி அடிகளாரால் பாடப்பெற்ற

*"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய்விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"*

என்னும் பதிகத்தைப் பாடி கண்மலராலும், மனமலராலும், கைமலராலும் போற்றி பூஜை செய்வதில் பெருமிதம் அடைகிறோம்.

இந்த ஊரில் நவீன காலத்தில் கட்டப்பட்ட சிவன், விஷ்ணு, அனுமன் முதலிய தெய்வங்களுக்கான கோயில்கள் பல உள்ளன. அவற்றுள் முழுவதும் கண்ணாடியால் ஆன நுணுக்கமான திருக்கோயிலும் ஜம்முவின் அருகில் உள்ள ஸ்ரீ வைஷ்ணவி தேவியின் ஆலயத்தின் உருவமைப்புடன் கூடிய ஆலயமும் அதன் செயற்கைக் குகைவழிப் பாதையும் நமக்கு மிக மகிழ்ச்சி அளிக்கின்றன. ஹரித்வாருக்கு தென்புறத்தில் சுமார் 5 கி.மீ.

தூரத்தில் புராதான கங்கை நதிக்கரையில் ''தட்சகுண்டம்'' என்னும் இடம் இருக்கிறது. சாட்சாத் ஸ்ரீ பரமேஸ்வரனுக்கு மாமனாரும் உமாதேவியின் தகப்பனாரும் ஆகிய தக்ஷனுக்கும் ஒருமுறை மனவேறுபாடு ஏற்பட்டது. மிகப் பெரிய யாகம் செய்து அதன் அவிர்பாகத்தை அதற்கு உரிய ஈஸ்வரனுக்கு அளிக்காமல் அவமானம் ஏற்படுத்தி அதன்மூலம் தக்ஷன் அழிந்த வரலாறு நமக்குத் தெரியும். இந்த யாகத்தில்தான் பார்வதி தேவி தனக்கு அழைப்பு இல்லாதபோதிலும் ஈசனின் தடையையும மீறி தந்தையிடம் வந்து அவமானப்படுத்தப்பட்டு ஈசனாலும் தண்டிக்கப்பட்டு, கடைசியில் உலகம் உய்ய பிணக்கு தீர்ந்த கதையை அறியாத மானிடரும் உண்டோ. இந்த இடம்தான் ''தக்ஷகுண்டம்'' இங்கு அழகான திருக்கோயிலும் உண்டு. நாங்கள் இந்தக் கோயிலுக்கு 7–10–06 அன்று திரும்பும் வழியில் தரிசிக்க வந்தோம் என்றாலும் இந்த க்ஷேததிர மகிமை அனைத்தையும் ஒரே இடத்தில் கூறுவது யாத்திரிகர்களுக்கு வசதியாகும் என்பதால் ஈண்டு இயம்புகிறோம். நாங்கள் செல்லும்போதும் திரும்பும் பொழுதும் இந்த ஊரில் தங்கிய இடம் பஞ்சாப் – சிந்து தர்மசாலா என்றுஅழைக்கப்படுகிறது. இந்த ஊரில் பிரம்ம குண்டத்தில் அனைவரும் ஸ்நானம செய்து அவரவர் இல்லத்திற்கு புனித கங்கை நீரை எடுத்துச் செல்வது வழக்கம். கங்கை நீரின் மேன்மையை விளக்க இந்த நீரை எடுத்து எத்தனை ஆண்டு வைத்து இருந்தாலும் அது கெடாது என்பதே சான்று.

29–09–96 ஞாயிறு அன்று காலை 4.30 மணிக்கு பேருந்து மூலம் கிளம்பி 8 மணி அளவில் 71 கி.மீ தொலைவில் உள்ள தேவப்பிரயாகை என்னும் இடத்தை அடைந்தேம். வழியில் சிறிது தூரத்தில் இடது புறம் ஒரு பாதை திரும்பிப் பழைய ''கர்வால்'' நாட்டின் தலைநகரமும் அரசரும் இருந்த ''நரேந்தர நகர்'' என்னும் ஊர் வழியாக இன்று அரசாங்கத்திற்கு மிகவும் பிரச்சனையாகி உள்ள அடைக்கப்பட்டிருக்கும் ''டெஹ்ரி'' வழியாக 1992ல் மிகப் பெரிய பூகம்பத்தால் பாதிக்கப்பட்டதும் புராதன இதிகாசங்களில்

குறிப்பீடப்படும் ஆதிவிஸ்வநாதர் கோயில் உள்ள ''உத்தரகாசி'' வழியாக ''கங்கோத்ரி'' மற்றும் ''கோமுகி'' செல்கிறது. ''கங்கோத்ரி – கோமுகி'' தான் கங்கை நதியின் உற்பத்தி ஸ்தானம், ''டெஹ்ரியிலிருந்து உத்தரகாசி'' செல்லும் வழியில் மறுமுறை இடது புறம் திரும்பிச் செல்லும் பாதை யமுனாநதியின் உற்பத்தி ஸ்தானம் ஆகிய யமுனோத்ரிக்குச் செல்லும் வழி.

## தேவப்பிரயாகை :

கடல் மட்டத்திற்கு மேல் 1700 அடி உயரம்.

''பிரயாக்'' என்பது நதிகளின் சங்கமத்தைக் குறிக்கும் சொல். இங்கு கோமுகியிலிருந்து உற்பத்தி ஆகிவரும் பாகீரதி என்னும் கங்கை நதியும் பத்ரிநாத்திலிருந்து வரும் அலகனந்தா நதியும் சங்கமிக்கின்றன. இந்த சங்கமத்தில் புராண காலத்தில் ஸ்ரீ ராமபிரான் பித்ரு கடன் செய்து பிரம்ம புத்திரனாகிய ராவணனைக் கொன்ற பிரம்மஹத்தி தோஷம் நீங்கப் பெற்றார் என்பது வரலாறு. குளிப்பதற்கு வசதியாகப் படிக்கட்டுகளும் இரும்பு சங்கிலிகளும் பொருத்தப்பட்டுள்ளன. இங்கு இராமருக்கு ஒரு அழகான ''ரகுநாத்ஜி'' கோயிலும் உண்டு– யாத்திரிகர்கள் பித்ருகடன் தீர்க்கவும் கங்கை நதிக்கு பூஜை செய்யவும் ''பண்டாக்கள்'' என்னும் பூசாரிகள் உள்ளனர். உணவுச் சாலைகளும் மருந்து கடையும் தொலைபேசி வசதியும், தங்கும் வசதிகளும் சாலை ஓரத்தில் உள்ளன. நாங்கள் இங்கு நீராடி காலைச் சிற்றுண்டி முடித்துக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம்.

## ருத்ரப்பிரயாக் : தூரம் 70 கி.மீ

இராணுவ கேந்திரமாக உள்ள கீர்த்திநகர் சரித்திர காலத் தலைநகரான ஸ்ரீ நகர் (காஷ்மீரில் உள்ள ஸ்ரீ நகர் வேறு) வழியாக ''ருத்ரபிரயாகை'' அடைந்தோம். ருத்ரபிரயாக் ஊரை சேருவதற்கு 4கி.மீ. முன்பாக சாலை ஓரத்தில் ஒரு மரத்தின் அடியில் ஒரு தகவல்

பலகை உள்ளது. அதைப் படித்து மக்களையும் யாத்திரிகர்களையும் கதிகலங்க தாக்கி 125 மனித உயிர்களைக் குடித்த கொடுமையான ஒரு புலியை 02-5-1926-ஆம் ஆண்டு ''ஜிம்கார்பட்'' என்னும் ஆங்கிலேயர் சுட்டுக் கொன்றதை அறிகிறோம். ருத்ரபிரயாக் என்பது எல்லா வசதிகளையும் கொண்ட ஒரு சிறு நகரம் ஆகும். இங்கிருந்து வலது புறமாக ''பௌரி-கர்வால்'' வழியாக நைநிட்டால் செல்லும் பாதை பிரிகிறது. சாலையின் இடது புறம் அலகனந்தா நதியில் வடதிசையிலிருந்து வரும் மந்தாகிநதி கலக்கிறது. இந்த சங்கமத்தில் ருத்ரநாதருக்கும், சாமுண்டாதேவிக்கும் அழகான சிறு கோயில்கள் உள்ளன. ருத்ரநாதர் கோயிலின் முன்பாக சங்கமத்தில் குளிக்கும் வசதியும் உண்டு. அலகனந்தாவின் வெண்ணி நீருடன் கேதார் நாத்திலிருந்து வரும் பாகீரதியின் பசுமையான நிறமுடைய நீர் கலப்பது ஒரு கண்கொள்ளாக் காட்சி ஆகும். இங்கு அலகநந்தா நதியைக் கடக்க ஒரு அழகான பாலமும் அதன் வழியாக ஒரு குகையில் நுழைந்து வெளியேறி கேதார்நாத் செல்லும் பாதையும் உள்ளன.

## கர்ணப்பிரயாக் : 32 கி.மீ

நாங்கள் ரிஷிகேசத்தில் கிளம்பியதிலிருந்து பத்ரிநாத் செல்லுமவரையிலும் அலகனந்தா நதியின் கரையோரமாகவே செல்கிறோம். அடுத்து 32 கி. மீட்டரில் ''கர்ணபிரயாக்'' என்னும் ஊரைக் கடந்தோம். இந்த இடத்தில்தான் மகாபாரதத்தில் வரும் கர்ணன் பரசுராமரிடம் சீடனாகச் சேர்ந்து அஸ்திரங்களைப் பயின்றான் என்பது வரலாறு. வலதுபுறத்தில் தூரத்தில் எப்பொழுதும் பனிக்கட்டியால் மூடப்பட்டிருக்கும். ''பிண்டாரி - கிளேசியரி'' லிருந்து வரும்''பிண்டார் நதி'' அலகநந்தாவுடன் கலக்கிறது.

வடமொழியில் ''ஹிம்'' என்றால் பனிக்கட்டி என்றும் ''ஆலயம்'' என்றால் கோயில் என்றும் பொருள்படும். ''ஹிமாலயம்'' அல்லது இமயமலை என்பது இதையே குறிக்கிறது.

## பிப்பல் கோட்டி : 48 கி.மீ. 4000 அடி உயரம்

தொடர்ந்து நந்தப் பிரயாகை அடைகிறோம். இங்கு நந்தா தேவி மலையிலிருந்து வரும் நந்தகங்கா நதி சங்கமிக்கிறது. 10 கி.மீ. தொலைவில் உள்ள சமோலியிலிருந்து இடது புறமாக ஒரு சாலை சமோலி மாவட்ட தலைநகராகிய கோபேஷ்வர் வழியாக குப்தகாசி சென்று கேதார்நாத்தை அடைகிறது.

நாங்கள் நந்தப் பிரயாகையை கடந்து ''பிப்பல்கோட்டி'' என்னும் சற்றே பெரிய சமவெளிப் பிரதேசத்தை அடைந்தோம். நந்தப் பிரயாகை வரையிலும் சுமார் 2500 அடி உயரத்தில் உள்ள பிப்பல்கோட்டிக்கு மட்டுமே வந்து 4000 அடி உயரத்தில் வந்தவுடன் காற்றில் ஒரு குளுமையை உணர்கிறோம். இங்கு வசதியான தங்குமிடங்களும் ஓட்டல்களும் உள்ளன. மாலை 7 மணி அளவில் வந்து இரவு தங்கினோம்.

## ஜோசிமட் : 29 கி.மீ. 6150 அடி உயரம்

30–9–96 காலை 4.30 மணி அளவிலே கிளம்பி ஒரு புறம் செங்குத்தான மலையும் மறுபுறம் பாதாளத்தில் தெரியும் கங்கையுமாக குறுகலான திருப்பங்களும், மேடு பள்ளங்களும் நிரம்பிய, ஓட்டுநரை சோதிக்கும் வகையில் சிரமமாக உள்ள சாலை வழியாகக் கடந்து ஒரு சிறு நகரமாகக் காட்சி தரும் ''ஜோசிமடத்தை'' அடைகிறோம். 6150 அடி உயரத்தில் உள்ளது இந்த பிரசித்திப் பெற்ற ஊர். இது மலைச்சரிவில் வீடுகளுடனும், இராணுவ கூடார கேம்ப்களுடனும் இருப்பதால் கண்ணுக்கு மிக அழகான காட்சியை அளிக்கிறது. நவம்பர் முதல் மார்ச் முடிய, பனிக்காலத்தில் பத்ரிநாத் மூடப்படும். ஆதலால் ஸ்ரீ பத்ரிநாதரை ஜோஷி மடத்தில் கொண்டுவந்து ஆராதிக்கின்றனர். இந்த ஊரில் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம சுவாமிக்கு ஒரு கோயில் உண்டு. ஸ்ரீ ஆதி சங்கரரால் பூஜிக்கப்பட்ட 12 ஜோதிர்லிங்கங்களில் ஒன்றும் இங்குண்டு. இந்த ஊரில் சற்றே உயரத்தில் பல்லாயிரம்

ஆண்டுகளுக்கு மேலான வயதுடைய ஒரு கற்பக விருக்ஷமும் உள்ளது.

ஜோஷி மடத்திலிருந்து சுமார் 4000 அடி அளவில் கிடுகிடுவென கீழ் இறங்கி விஷ்ணுப்பிரயாகையில் ஒரு பாலம் மூலமாக நதியைக் கடந்து உடனடியாக அதே உயரத்தைத் திரும்ப ஏறவேண்டி இருக்கிறது. ஆகவே இந்த 6 கி.மீ. தொலைவிற்கு ஒரு வழிப்பாதையாக (Gate System) அமைத்து ஒரு புறம் இருந்து அனைத்து வண்டிகளையும் அனுப்பிய பின் எதிர்புறம் இருந்து வண்டிகள் செல்ல அனுமதிக்கின்றனர். எல்லைப்புறக் காவல் படை இந்தப் பணியை மிகவும் சிறப்புடன் ஆற்றுகிறது.

## கோவிந்த காட்'' 14 கி.மீ. (6000 –அடி)

ஜோஷி மடத்திலிருந்து இறங்கி உடன் மறு மலையில் ஏறிப் பயணத்தைத் தொடர்ந்தபொழுது முதலில் வரும் சிற்றூர் ''கோவிந்த – காட்'' என்று சொல்லப்படுகிற சீக்கியர்களின் புனித குருத்துவாரா உள்ள இடம் ஆகும். இங்கு தங்கிச் செல்ல அனைத்து வசதிகள் செய்து கொடுக்கப்படுகின்றன. இங்கிருந்து வலதுபுறத்தில் இறங்கி நதியைக் கடநது 19 கி.மீ. நடந்தால் 1100 அடி உயரத்தில் மலர்கள் பள்ளத்தாக்கும் (Velley Flowers) 1400 அடி உயரத்தில் ஹேமகுண்ட் சாஹிப் என்னும்குருத்வாராவும் உள்ளன. மலர்கள் பள்ளத்தாக்கில் மனிதர்கள் செல்ல இயலாது. சௌகந்திகா மலரைத் தேடி அலைந்த பீமன் அனுமனைக் கண்டு திரும்பிய இடம் இதுதான் என அறிகிறோம். கோவிந்தகாட்டின் அருகிலேயே பாண்டு கேஷ்வர் ஆலயமும் ''ஹனுமான் சட்டி'' என்னும் ஊரும் உள்ளன. பயணத்தைத் தொடர்ந்தால் ஒரு முனையில் திரும்பும் பொழுது, சுமார் 8 கி.மீ. தொலைவில் பத்ரிநாத் க்ஷேத்திரம் நம் கண்ணுக்குப் புலப்படுகிறது.

## பத்ரிநாத் : 35 கி.மீ. 10250 அடி உயரம்

பூலோக வைகுண்டம் ஆகிய பத்ரிகாஸ்ரமம் என்னும் க்ஷேத்திரம் கண்ணுக்குத் தெரிந்தவுடன் நாம் அடையும் இன்பம் சொல்லத்தக்கதன்று. பேருந்தில்தான் சென்றோமென்றாலும் மிக நீண்ட மலைப்பாதையில் சென்ற சிரமம் முழுவதும் நீங்கப் பெற்ற புத்துணர்ச்சி பெற்றோம். தொலைவில் தெரிந்த காட்சியை விவரிக்க இயலாது அளவு உணர்ச்சி வயமாக நாம் ஆனோம் என்றால் அது மிகையாகாது. வெள்ளியை உருக்கி ஊற்றிய பிரம்மாண்டமான சிவலிங்கத் தோற்றத்துடன் உள்ள நீலகண்டம் என்னும் (Clacier) பனிமலையின் முன்புறத்தில் நாராயண மலையின் அடிவாரத்தில் வண்ணமயமாக பத்ரிநாதரின் ஆலயம் தெரிந்தது. அதன் முன்புறம் அலகநந்தா நதியும் எதிர் திசையில் (நமக்கு வலது புறத்தில்) நரமலையும் உள்ளது. நர நாராயண மலைகளை – ஒவ்வொருவரும் வாழ்க்கையில் ஒரு முறையாவது கண்டு தரிசிக்க வேண்டும். பாதை சரிவாக இருப்பதால் மிக விரைவில் பத்ரிநாத் திருத்தலத்தை அடைகிறோம்.

பத்ரிநாத்தில் பனிக்கட்டி ரயிலாக அசுரவேகத்துடன், அலகநந்தா நதி பாய்கிறது. இங்கு யாத்திரிகர்கள் தங்க சகல வசதிகளும் உள்ளன. தென்னாட்டின் ''தோசை'' (தோசா) இங்கு அனைவராலும் விரும்பிச் சாப்பிடப்படும் சிற்றுண்டி ஆகும். இங்கு ''பத்ரி – தர்மசாலா'' என்னும் இடத்தில் இரவு தங்க ஏற்பாடு செய்துகொண்டோம்.

சாலையிலிருந்து சற்றே இறங்கி நடந்தால் நதியின் மேல் கட்டப்பட்டுள்ள பாலம் வருகிறது. பாலத்தின் மேல் பிச்சைக்காரர்களும் பாலத்தின் கீழே ஊழிக்கால பிரளயமாக ''ஹோ'' என்ற இரைச்சலிட்டுக் கொண்டு செல்லும் அலகநந்தாவும் நம் கவனத்தை ஈர்க்கின்றன. இந்த சிறிய பாலத்தைக் கடந்தவுடன் பத்ரிநாதரின் ஆலயத்தை அடைந்து விடுகிறோம். முதலில் வலது புறமுள்ள விஸ்வநாதரை தரிசித்து, இடது புறம் உள்ள தலைமைப்

பூஜாரியின் இல்லத்தைப் பார்த்துக் கொண்டு வலது புறம் திரும்பினால் இந்த விஞ்ஞான யுகத்திலும் அதிசயமாகத் தோன்றும் ''தப்த குண்டம்'' உள்ளது. இந்தக் கோயில் ஸ்ரீ ஆதி சங்கரரால் நிறுவப்பட்டது என்பதற்கு ஒரு அத்தாட்சியாக, இக்கோயிலின் ''ராவல்'' என அழைக்கப்படும் தலைமைப் பூஜாரியாக பரம்பரை பரம்பரையாக வரும் கேரளத்து நம்பூதிரி இருக்கிறார்.

பனி நதியின் கரையோரத்தில் உள்ள தப்த குண்டத்தில் கொதிநீர் கொப்பளித்து வருகிறது. ஸ்நானம் செய்ய நல்ல வசதி செய்யப்பட்டுள்ளது. வருடம் முழுவதும் கொதிநீர் வந்து கொண்டேயிருக்கும் இடத்திற்கு மிக அருகில் உறைய வைக்கும் தண்ணீர் ஓடிக்கொண்டிருப்பது எவ்வாறு இயலும் என்பது விஞ்ஞானிகள் ஆராய்ச்சிக்கும் அப்பாற்பட்ட இயற்கையின் விளைவே என்பது நிதர்சனம். பூகர்ப்ப விஞ்ஞானிகள் எத்தனை விளக்கம் தந்தபோதிலும், இயற்கையின் பெருமை அல்லது ஆற்றல் குறைந்து விடவா போகிறது? நம் அறிவுக்குப் புலப்படாத இயற்கையின் அதிசய உண்மைகளை ஆண்டவன் செயலாகக் கருதிப் போற்றி வணங்குவதில் தவறென்ன? எல்லாவற்றையும் அறிந்துள்ளதாக இறுமாந்திருக்கும் விஞ்ஞானிகூட சில சமயம் மூக்கில் விரலை வைக்கிறார். தலையையும் சொறிந்து கொள்கிறார். நம்மை மிறிய சக்தி ஒன்று உள்ளதென்று அரை மனதுடன் ஒப்புக்கொள்கிறார்.

தப்த குண்டத்தில் பொங்கிவரும் கொதிநீரும், அருகாமையிலேயே குதித்து ஓடும் பனிநீராகிய அலகநந்தா நதியும் காண்பவர்க்கு, கீதையில் கண்ணன் குறிப்பிடும் ''அனேக இரு சொற்கள்'' ஞாபகத்திற்கு வருகின்றன. குதூகலத்துடன் துக்கம், இன்பத்துடன் துன்பம், புகழ்ச்சி – இகழ்ச்சி குளுமை வெம்மை ஆகிய அனைத்து சமன்பாடுகளும் இறைவனின் நியதியே என்பதை துல்லியமாக உணர்கிறோம். 10250 அடி

உயரத்தில் உள்ள இத்தலத்தில் குளிரில் பல் கிட்டும் யாத்ரீகனுக்கு இதமளிக்கக் கொதிநீர் (Hot Spring) அளிக்கும் இயற்கை யன்னைக்கு நம் கண்களிலிருந்து மித உஷ்ணமான கண்ணீரையே காணிக்கையாக்குகிறோம்.

காலை சில வினாடிகள் மட்டும் பத்ரிநாத் ஆலயத்தின் பின்புறம் தெரியும் நீலகண்ட சிகரத்தைக் கண்டதும், என்ன தவனம் செய்தோமோ இப்பாரத பூமியில் பிறப்பதற்கு, இன்னும் இப்பிறவியில் என்ன புண்ணியம் சேர்த்தோமோ, இப்புனித தலத்துக்கு வந்து தரிசனம் செய்ய என நினைக்கும்தோறும் நீலகண்ட மலையில் பனி உருகி வருவதைப்போல, எங்களையும் அறியாமல் ஊற்றெழும் கண்ணீர் அதனால் உள்ளமும் உடலும் நனைந்து ''குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிழ்சிரிப்பும், பனித்தசடையில் பால்போல் வெண்ணீரும்'' என்னும் பதிகத்தைப் பாட ஆரம்பித்து உணர்ச்சிவசப்பட்டு மேலும் பாடவராது பரவசமடைந்தோம். நீலகண்ட சிகரத்தின் உயரம் 21600 அடி. பத்ரிநாத்தைவிட இருமடங்குச் இச்சிகரத்தின் மறுபுறத்தில் யமுனோத்ரி என்னும் இடத்திலும், பக்கவாட்டிலும் உள்ள கௌரி குண்டத்திலும (கேதார்நாத்தின் அடிவாரம்) இது போன்ற வெந்நீர் ஊற்றுக்கள் உள்ளன.

கீழ்க்கண்ட தல வரலாற்றை நாங்கள் கேட்டறிந்து கொண்டோம். ''பத்ரிகாச்ரமத்தில் ஸ்ரீமன் நாராயணன் ஒரு சிறு குழந்தையாக விளையாடிக் கொண்டிருந்ததை அன்னை உமையவள் ஒரு நாள் கண்டனள். குழந்தையை வாரியெடுததுக் கொண்டு எம்பெருமானிடம் காட்ட அவர் இக்குழந்தையின் மேல் சிறிதளவும் பரிவு காட்டாதிருந்து விட்டார். பிறகு நாராயணனும் சிவபெருமானும், இங்கு யார் நிரந்தரமாகத் தங்குவது என விவாதித்தனர். அவ்வமயம் இமவான் புதல்வி தாயுள்ளத்துடன் எம்பெருமானிடம் நாம் கேதாரத்திற்குச் சென்று விடுவோம் எனக் கூற அவர்கள்அங்ஙனமே சென்றனர்.

அன்னை பார்வதி தீர்க்க தரிசனமாகப் பிற்காலத்தில் மகாபாரத காலத்தில் இந்தத் தலம் பெருமையடையப் போகிறது எனக் கூறினார். இதை ஏற்றுக் கொண்ட சிவபெருமான் தன்னுடைய அம்சமாக ஸ்ரீ விஸ்வநாதரை இங்கு விட்டுச் சென்றார். ஆகவே இன்றும் பக்தர்கள் அனைவரும் முதலில் விஸ்வநாதரை தரிசித்து பிறகு பத்ரிநாராயணரை தரிசிப்பது வழக்கமாகிவிட்டது.

நாங்கள் அனைவரும் தப்த குண்ட ஸ்நானத்தை முடித்துக் கொண்டு அருகிலுள்ள, 'பிரம்ம கபாலம்' என அழைக்கப்படும் பாறையில் பித்ரு கர்மாவை நிறைவேற்றிக்கொண்டு, மதிய உணவையும் உட்கொண்டோம். மாலை தீப தரிசனத்தின்போது பத்ரி நாராயணரின் வண்ணமயமான நுழைவு வாயிலின் வழியாக ஆலயத்துள் சென்றோம். ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமம் எங்கும் ஒலித்துக் கொண்டிருக்க, ஸ்ரீ பத்ரி நாராயணர், நர நாராயணர், மஹாலட்சமி மற்றும் குபேரன் சந்நிதிகளையும் தரிசித்து அங்கு ஆதிசங்கரரால் நிறுவப்பட்ட மண்டபத்தில் நின்றபடி எங்களுக்குத் தெரிந்த பாடல்களைப் பாடி மகிழ்ந்தோம்.

பத்ரி என்னும் வடமொழிச் சொல்லுக்கு இலந்தை என்று பொருள். இங்குள்ள தல விருக்ஷம் ''இலந்தைமரம்.'' மேலும் இங்கு ஸ்ரீ நாராயணர் தவம் இயற்றியபொழுது லட்சுமியே பத்ரிமரமாக இருந்து நிழல் அளித்தார் என்பதாலும் இத்தலத்திற்கு பத்ரிநாத் எனப் பெயர் அமைந்தது.

## மகாபாரதத் தொடர்பு : அழகாபுரிப் பட்டணம்

1–10–96 அன்று காலை பேருந்து மூலமாக சுமார் 5 கி.மீ. தூரத்திலுள்ள ''மானா'' என்னும் சிற்றூர் சென்றோம். இந்திய நாட்டின் வட எல்லை கிராமங்களில் ஒன்றான மானாவில் திபேத்திய குடி மக்களே வாழ்கின்றனர். இச்சிறு கிராமத்தை நடந்து கடந்ததும் ஸ்ரீ கணேசர் சந்நிதியாக உள்ள சிறு குகைக் கோயிலை அடைந்தோம். இங்கு அமர்ந்துதான் ஸ்ரீ விநாயகப் பெருமான்

மகாபாரதத்தை, வியாஸ முனிவர் சொல்லச் சொல்ல எழுதினா ராம். அருகாமையிலேயே வியாசர் குகை உள்ளது. இங்கு வியாஸ பகவனுக்கும் சிலை ரூபம் உள்ளது. கை விளக்கு இல்லாமல் உள்ளே ஒன்றையும் காண இயலாத அளவுக்கு இருள் சூழ்ந்துள்ளது. அங்கிருந்து சற்று தூரத்தில் மாதாமந்திர் ஆலயம் உள்ளது. வியாஸ குகையிலிருந்து சற்று மேலே சென்றால் ''வசுதாரா'' என்னும் அருவி வெள்ளிக் கம்பியென இறங்குவதைக் காணலாம். இங்கு ஸரஸ்வதி நதியின் கிளைநதி ஒன்றும் அதன்மேல் பெரிய பாறைப்பாலமும் உள்ளன. இந்த பாறையை, மற்ற சகோதரர்களும், தாய் குந்திதேவியும் மகாபாரத முடிவில் உயிருடன் மேலுலகம் செல்வதற்கு வசதியாக பீமன் அமைத்தான் என்று கூறுகிறார்கள். இதற்கு மேலும் செல்வது இயலாது என்பதுடன் அனுமதியும் கிடையாது. ஆகவே தூரத்திலிருந்து, இந்திய எல்லையிலிருந்து சீனாவிற்கு இடையிலுள்ள ''மானா கணவாய்'' தெரிவதைப் பார்த்து ரசிக்கிறாம். நம் நாட்டின் மேற்கு திசையில் உள்ள கைபர், போலன் கணவாய் போன்ற இது அமராவதி மலையின் அருகில் உள்ளது. இந்த அமராவதி மலைதான் குபேரனின் அரசாங்கம் ஆகும். இதைக் குறிப்பிடவே, குபேரனின் சந்நிதி, பத்ரிநாராயணர் ஆலயத்தில் கண்டு களித்தோம். இந்த மானா கணவாய் வழியாக சீன நாட்டில் உள்ள ''மான ஸரோவர்'' மற்றும் கயிலாய மலை வழியாகத்தான் பஞ்சபாண்டவர்கள் மேலுலகம் அடைந்தனராம்.

## திரும்புதல் :

இந்த மானா கிராமத்தின் அருகில் உள்ள முகாமில் இருந்து கொட்டும் பனி மழை, குளிர் முதலியவைகளைப் பொருட்படுத்தாது அல்லும் பகலும் காவல் இருக்கும் நம் எல்லைக் காவல் படை ஆண்டு முழுவதும் பணியாற்றுகிறது. இவர்களின் இச்சீரிய பணியினால் நாம் அனைவரும் நிர்சிந்தையாக வாழ்கிறோம். இவர்களின் ஒப்பற்ற இக்கடமைக்கும் தியாகத் தொண்டிற்கும் நாம் தலை வணங்கி அஞ்சலி செய்து, மனதை

முழுவதுமாக அங்கேயே விட்டுவிட்டுத் திரும்பகிறோம். நாம் சென்ற வழியிலேயே ஜோஷிமடம் கடந்து மாலை 5.00 மணி அளவில் பிப்பல் கோட்டி அடைகிறோம். அங்குள்ள பஜனை மடத்தில் திருப்புகழ் தேவாரம் மற்றும் அம்பிகைப் பாடல்களைப் பாடி மகிழ்ந்து இரவு தங்குகிறோம்.

## குப்தகாசி ருத்ரபிரயாகையிலிரந்து 42 கி.மீ. 6000 அடி உயரம் :

03–10–96 காலை 5 மணிக்குப் புறப்பட்டு ருத்ரப்பிரயாகை வழியாக மந்தாகினி நதியின் கரையோரமாக வலது புறம் திரும்பி, கேதார்நாத்தை நோக்கிப் பயணிக்கிறோம். இந்த வழியில் கற்பூர தைலம் (டர்பன்டைன்) தயாரிக்கும் தொழிற்சாலைகள் அனேகம் உள்ளன. முதலில் வரும் பெரிய ஊர் ''அகஸ்த் முனி'' என்று அழைக்கப்படுகிறது. இங்குதான் குறுமுனி அகஸ்தியர் தென்னாட்டின் பொதிகைக்கு வருமுன் வசித்து வந்தார். இங்கு ஒரு ''ஹெலிபேட்'' உள்ளது. இதைக் கடந்தால் முழுவதம் கீழிறங்கி மந்தாகினி நதியை பாலம் வழியாகக் கடந்து இடது புறம் உள்ள பெரிய மலையின் மேல் செல்கிறோம். பாலத்தைக் கடக்காமல் நேராகச் செல்லும் பாதை ''கோபேஷ்வர்'' பஞ்சகேதாரில் ஒன்றான ''உக்கிமடம்''வழியாக ''சமோலி'' சென்று ''நந்தப்பிரயாகையை'' இணைக்கிறது. ஊக்கி மடம் என்னும் ஊரில் தான் பனிக்காலத்தில் கேதார்நாதரை ஸ்தாபித்து பூஜிக்கிறார்கள். ஆனால் நாம் செல்லும் பாதை உயரே ஏறி 6000 அடி உயரத்தில் உள்ள குப்த காசியை அடைகிறது. இங்கு புராதனமான விஸ்வநாதர் கோயிலும் ஒரு ருத்ராட்சி மரமும் உள்ளன. இங்கு கோமுகி, போன்ற மணிகர்ணிகா குண்டம் என அழைக்கப்படும் ஒரு சுனையிலிருந்து இரண்டு சிறு ஊற்றுக்கள் உற்பத்தியாகின்றன. அவற்றை கங்கை யமுனை என்று அழைக்கிறார்கள். இங்கு ஸ்நானத்தை முடித்துக் கொண்டு மதிய போஜனததையும் முடித்துக்கொண்டுப் பயணத்தைத் தொடர்கிறோம்.

## திரியுக நாராயணர் :

குப்த காசியிலிருந்து கிளம்பி சித்தாப்பூர் அடைந்து அங்கிருந்து 14 கி.மீ. தொலைவிலுள்ள திரியுக நாராயணன் திருக்கோயிலுக்குச் சென்று அடைந்தோம். இங்கு ஸ்ரீ நாராயணர் மூன்று யுகங்களாகக் கோயில் கொண்டுள்ளார். இந்த இடத்தில்தான் பரமேஸ்வரனுக்கும் பார்வதி தேவிக்கும் திருமணம் நடந்தது என்று கூறப்படுகிறது. அந்த தெய்வீகத் திருமணத்திற்கு வளர்க்கப்பட்ட ஹோமகுண்டம் இன்று வரையில் அணையாமல் காப்பாற்றப்பட்டு வருகிறது. பனிமழை பொழியும் இடத்தில் இதுவும் ஒரு அதிசயம். இந்த ஹோமகுண்டத்தைத் தரிசித்து, இங்குள்ள பிரம்ம குண்டம், விஷ்ணு குண்டம், ருத்ர குண்டம் ஆகிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யும் வாய்ப்பு இல்லாவிடினும், ப்ரோக்ஷணம் செய்து கொண்டு சௌபாக்ய பூஜை செய்த இடத்தில் தூப தீபம் காட்டி வணங்கி, சித்தாப்பூர் திரும்பி இரவு தங்கினோம்.

## கௌரிகுண்டம் : 19 கிமீ. 7000 அடி உயரம் :

04–10–96 காலை 6.00 மணிக்கு ''சோன்கங்கா'' வழியாகச் சென்று கௌரிகுண்டம் அடைந்தோம். இந்த இடத்தைப்பற்றி நம் தேவாரத்தில் ''அனேக தங்காவதம்'' என்ற பெயரில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்குமேல் வாகனங்கள் செல்ல இயலாது. நடந்து, குதிரையில், அல்லது ஆளின் முதுகில் தூளிபோன்ற கூடை (கண்டி என அழைக்கிறார்கள்)யில் அமர்ந்து தான் கேதார்நாத் செல்ல வேண்டும். இவை தவிர நான்கு பேர் தூக்கிச் செல்லும் தண்டியும் உண்டு. இங்கும் பத்ரிநாத்தில் உள்ளது போல, இறைவன் தன்னைத் தரிசிக்கவரும் பக்தர்களின் களைப்பையும், குளிரையும் நீக்கும் பொருடு வருஷம் பூராவும் ஒரு 20 அடி சதுர குண்டத்தில் கொதிநீர சுனை அமைத்துத் தந்து அருள் பாலிக்கிறார். பக்தர்கள் தன்னை தரிசிக்க முயற்சித்தாலே, அவர்தம் உடலுக்கும் உள்ளத்துக்கும் இதமளிக்க வேண்டும் எனறு,

வேறு யாரிடமும் பக்தர்கள் உதவியை எதிர்பார்க்கலாகாது என இயற்கையாக கொதிநீர் குண்டத்தை ஏற்படுத்தியிருக்கிறார். இந்தக் காலத்தில்தான் ஜாதிமத வேற்றுமை நம் நாட்டில் எப்படியோ புகுந்து நாசமாக்கிவிட்டது. உயரத்தின் காரணமாக குளிரும், குறைவான பிராணவாயு உள்ளதாலும், நடந்து செல்ல இயலாமல் நாங்கள் நன்றிக்கடன் பட்டுள்ள குதிரைகள் மூலம் ரூ. 300 வீதம் ஏற்பாடு செய்து கொண்டு எங்கள் பயணத்தை மேற்கொண்டோம்.

## கேதார்நாத் 14 கீ.மீ. 11753 அடி:

கௌரிகுண்டத்தில் காலை 9.30 மணிக்குக் கிளம்பி 7வது கி.மீ. தூரத்தில் உள்ள கருட்சட்டியைக் கடந்து, மந்தாகினி நதியைப் பாலத்தின் வழியாகக் கடந்து கேதார்நாத்தின் திருக்கோயிலை மாலை 4 மணி அளவில் அடைந்தோம். இங்கும் பூஜாரியை ''ராவல்'' என அழைக்கின்றனர்.

## தலத்தைப் பற்றிக் கேட்ட வரலாறு :

பாரதப் போர் முடிந்து, ஓய்வும் மனச்சாந்தியும் பெறுவதற்காக, பாண்டவர்கள் இப்பகுதிக்கு வந்தபோது, அவர்களைக் கண்டதும் சிவபெருமான் எருமை வடிவம் தாங்கி ஓட ஆரம்பித்தார். அம்மிருகத்தினிடம் தெய்வீக அம்சம் ஒளிர்வதைக் கண்டு, பாண்டவர்கள் அதைப் பிடிக்கச் சென்றார்கள். உடனே, சிவபெருமான் பூமிக்குள் புகுந்து மறைந்துவிட எண்ணினார். ஆனால் அதற்குள் பீமசேனன் எருமையின் வாலைப் பிடித்து இழுத்து விட்டான். மாட்டின் முன்பகுதி பூமிக்குள் மறைய, பின்பாகம் மட்டும் வெளியே தங்கிவிட்டது. சுவாமியின் முன்பாகம் நேபாளத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது. எங்களது இமயமலைப் பயணங்களில் மிகவும் கவர்ந்தது அங்கு வாழும் மக்களின் எளிமையும், பண்பும், தூய்மையான பக்தியும் தான். ஆலயத்திற்கு எதிரேயுள்ள கடைவீதியில் ''உதக்குண்டம்'' எனும் சிறுசுனை, எனறும் வற்றாமல் இருக்கிறது. வழிபாடு

முடிந்ததும், அங்கு சென்று அந்தத் தீர்த்தத்தை வாங்கிப் பருகினால், தரிசனத்தின் பலன் பூர்ணமாகும் என்றும், அத்தீர்த்தமே முக்கிய பிரசாதமாகக் கருதப்படுகிறது என்றும் பண்டா கூறக் கேட்டோம். பீமனால் பிடித்து இழுக்கப்பட்ட மாட்டின் பின்பக்கம்தான் இப்பொழுதுள்ள சுயம்புநாதர் என்று அழைக்கப்படுகிறது. அன்றிரவு ''கேதாரீஸ்வர''ருக்கு பீதாம்பர அலங்காரம் செய்துள்ளதைக் கண்டு களித்தோம். இது மிகவும் மனதைக் கவரும் அழகிய கோயிலாகும். முறைப்படி பூஜா கிரமங்கள் ''ராவல்ஜி'' என்பவர்களால் நடந்து வருகிறது. மே மாதம் முதல் அக்டோபர் 20 தேதி வரை பக்தர்களுக்கு ஆலயம் திறந்திருக்கும். அக்டோபர் அவ்விடம் பூராவும் பனிக்கட்டியால் மூடப்பட்டுவிடும்– தரிசனம் செய்ய இயலாது. போர் வீரர்கள்தாம் பனிக்கட்டிகளை உடைத்து, பக்தர்களுக்கு மே மாதம் முதல் வசதி செய்து வருகிறார்கள். இது மிகவும் போற்றத்தக்கதொன்றாகும். நாட்டுக்குத் தொண்டு செய்வதோடு இறைவனுக்கும் தொண்டு செய்வது போற்றத்தக்கது. நாங்கள் குதிரைமேல் சவாரி செய்யும்போது, வழி நெடுக சூரிய வெப்பம் இல்லாதிருந்த போதும், சிற்சில இடங்களில் மழைத்துளி விழுந்து கொண்டிருந்தது. மேகக் கூட்டங்கள் ஆங்காங்கே எங்களைக் கடக்கும்போது எல்லாம் நாங்கள் விண்ணில் உள்ளோமா? அல்லது மண்ணில் உள்ளோமா? எனும் சந்தேகம் தோன்ற மேகக்கூட்டங்கள் பாதையை மறைத்து வந்தன. இங்கு அடிக்கடி நிலச்சரிவு ஏற்பட வாய்ப்புள்ளது. எனினும் போர் வீரர்களால் உடனுக்குடன் சரிசெய்யப்படுவது மிகவும் போற்றத்தக்கது. நாங்கள் யாவரும் கேதார்நாத்திலும், பத்ரிநாத்திலும் பேச வாய் திறந்த போதெல்லாம் புகை பிடிப்பவர்கள் வெளி விடும் புகையைப் போல் ஆவி ஆவியாக வெண்புகை வெளிவந்தது. அத்தனை பேரும் புகை பிடிப்பவர் களா என்ற சந்தேகம் உண்டாயிற்று. வானுயர நிற்கும் மலைத்தொடர்கள் செவிடுபடும் ஓசையுடன் நீர்வீழ்ச்சிகள் இங்கும் அங்கும் காணப்பட்டன. ''மந்தாகினி''

நதிக்கரையோர மாகவே பாதை சென்றது. மிக மிகத் தூய்மையாகவும், வெண்மையாகவும் நுரைத்துக் கொண்டு வெகுவேகமாக மந்தாகினி ஓடுகிறாள். இமாலயத்தல் நாம் உயரப் போகப் போக, ஹரித்வாரிலும், ரிஷிகேஸத்திலும் நம்முடன் லாகவமாக பேசிப் பழகிய கங்கை, மெள்ள மெள்ள ஒதுங்கியும், சில இடங்களில் பதுங்கியும், சலங்கை சத்தத்துடன் ஓடத் துடிக்கிறாள். பள்ளத்தாக்கிலும் பாறைகளுக்குமிடையே மறைந்தும், பாய்ந்தும் வருகிறாள். கொஞ்சும் சலங்கையுடன் கும்மாளமிடும் நங்கையாக குலுங்கிக் குலுங்கி ஓடி வருகிறாள். இக்காட்சியினை அருணகிரிநாதர் அப்படியே படம் பிடித்து கந்தரலங்காரப் பாடல் ஒன்றில் வெளிப்படுத்தகிறார். அப்பாடலை பார்ப்போம்.

*" பேற்றைத் தவம் சற்றும் இல்லாத என்னை, ப்ரபஞ்சம் என்னும்*
*சேற்றைக் கழிய வழிவிட்டவா – செஞ் சடாடவீ மேல்*
*ஆற்றைப் பணியை இதழியைத் தும்பையை அம்புலியின்*
*கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன், க்ருபாகரனே"*

நம்முடைய மும்மலமாகிய ப்ரபஞ்சமெனும் சேற்றைக் கழியவே, அவனது சடைமுடியிலிருந்து அவள் வருவது போல் தோன்றுகிறது. அன்றிரவு ஏற்பாடு செய்திருந்த கட்டிடத்தில் தங்கினோம்.

5–10–96 காலை 5 மணிக்கு, குளிக்க இயலாது போனாலும், தந்த சுத்தி ப்ரோட்சணம் செய்துகொண்டு, ஆலயத்தில் ஏற்பாடு செய்திருந்தபடி அபிஷேகத்தை எங்களது கைகளாலே சுயம்பு மூர்த்திக்குச் செய்து, புஷ்பம் சாற்றி உலர்ந்த பழங்களின் கலப்பை நைவேத்தியமாகப் படைத்து, தூபதீபம் செய்தோம். எங்களுக்கு இத்தகைய வாய்ப்பு, தமிழ் நாட்டில் கிடைக்காது போனாலும், எங்கோ பிறந்து வளர்ந்த எங்களை, இறைவன் இங்கு கூட்டுவித்து தேவாதி தேவர்கள் எல்லாம் தீண்டற்கரிய திருமேனியை, எங்கள் கரங்களால் எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் செய்வித்த

கருணையை எவ்வாறு புகழ்வது? வடநாட்டில் இறைவன் எங்களுக்கு இப்பேற்றினை அளித்ததை நினைக்கும்தோறும் உடலும் உள்ளமும் புல்லரிக்கிறது. பிறகு கோயிலை வலம்வந்து, ஆலயத்திற்குப் பின்புறத்தில், ஞானசம்பந்தர் அருளிச்செய்த கேதாரப்பதிகங்களையும் சுந்தரர் அருளிச் செய்த கேதாரப் பாடல்களையும், வெண்பளிங்குக் கற்களில் தமிழிலும், இந்தியிலும் பொறித்துப் பதிக்கப்பட்டிருந்ததைப் பார்த்தோம். அந்தப் பாடல்களைப் படித்து வரும்போதே எங்களையும் அறியாத கண்களினின்று கண்ணீர் வெளிவந்தது. 1300 ஆண்டுகளுக்கு முன் ஞானசம்பந்தராலும், 700 ஆண்டுகளுக்குமுன் சுந்தரராலும் வைப்புத்தலப் பாடல்களாக அருளிச் செய்யப்பட்ட பாடல்கள் அன்றும், இன்றும், என்றும் இமயத்தின் சிகரத்தில், புகழோடு விளங்குகிறதென்றால் அப்பெருமை, காஞ்சிகாமகோடி மடத்துக்கும், திருப்பனந்தாள் மடத்துக்குமே உரியதாகும் எனக் கூறிக்கொள்வதில் எந்தவித ஆட்சேபமுமில்லை. வைப்புத்தலமாக வைத்து பாடின இவற்றிற்கே த்தகைய கீர்த்தி ஏற்பட்டு இருக்கிறதென்றால், மேலும் சம்பந்தரும், சுந்தரரும் இத்தலத்துக்கே வந்து பாடியிருந்தால், எத்தகைய பொலிவைப் பெற்றிருக்கும் என நினைக்கும்போது எல்லாம், கல்நெஞ்சமும் நெகிழ்ந்து கரையும். இத்தகு பாடல்களை இறைவனே ரசித்து மகிழ்ந்து, வருங்கால பக்தர்களுக்கு உணர்த்தவே அமைத்தக் கொண்டான்போலும். இமயத்தின் உச்சியிலும் நற்றமிழ் பாடல்களாக மணக்கிறது. அங்கு, ஆதிசங்கரர் நினைவாலயமும், அவர் வைத்திருந்த தண்டமும் பார்த்து, அனுபூதியில் வரும் கடைசிப் பாடலாகிய

*"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"*

என்று மீண்டும் ஒரு முறை பாடி மெய்மறந்தோம். அங்கிருந்து காலை 8 மணிக்குப் புறப்பட்டு குதிரை மூலமாக இறங்கிப் பேருந்து மூலமாக மாலை 3 மணிக்கு சித்தாப்பூர் அடைந்து, அங்கு இரவு தங்கினோம்.

6–10–96 காலை 4–30மணிக்கே பேருந்தில் புறப்பட்டு, ருத்ரப்பிரயாகை எனும் இடத்தை 8 மணி அளவில் அடைந்தோம். இங்கு மந்தாகினி கேதாரேஸ்வரர் முடியிலிருந்தும், நீலப்பச்சை வண்ணத்தில் விஷ்ணு பாதத்தைத் தொட்டுக் கொண்டு நுரைகளைக் கக்கிக் கொண்டு வரும் அலகநந்தா கலக்கிறது. இக்காட்சி வெகு ரம்யமாயுள்ளது. இங்கு ஸ்நானம் முடித்துக்கொண்டு, பிறகு மிக குறுகலான பயங்கரமான நீண்ட மலைப்பாதையில், மலையோரம் மலைச்சரிவில் பேருந்து சென்றது. ஒரு பக்கம் மலைச்சரிவைப் பார்க்கும்போதெல்லாம், பயத்தால் நடுங்கினாலும் வாயினால் இயற்கையாகவே இறைவன் திரநாமத்தைச் சொல்லத் தூண்டியது. பேருந்து சாரதியின் (**Driver**) திறமை மிகமிக மெச்சவும், போற்றவும், தக்கது. நம் அனைவர் உயிரும் ட்வர் கையில்தான் என்ற நம்பிக்கையில் பிரயாணம் செய்தோம். மாலை 4 மணி அளவில் ஹரித்துவார் வந்தடைந்து, பஞ்சாப் – சிந்து தர்மசாலாவில் தங்கி, மாலை 6 மணி அளவில், கங்கையில் தீப ஆர்த்தி எடுத்து, கங்காமாதாவுக்கும் தூபதீபம் காட்டும் அழகினையும் கண்டு களித்து, இரவு இங்கேயே தங்கிவிட்டோம்.

7–10–96 காலை 7 மணிக்கு பிரம்மகுண்டத்தில் ஸ்நானம் முடித்துக்கொண்டு, இல்லத்துக்குக் கங்கை நீரையும் எடுத்துக்கொண்டு 11 மணி அளவில் அங்கிருந்து டில்லிக்குப் புறப்படும் வழியில் தக்ஷன் யாகம் வளர்த்த இடத்தையும் தரிசித்துக் கொண்டு இரவு 8 மணி அளவில் டில்லியை அடைந்தோம்.

8–10–96 காலை ஸ்நானத்தை முடித்துக்கொண்டு, மலை மந்தீர் என்ற ''உத்தரசுவாமி மலைக்கு'' (**R.K. Puram**) பேருந்து 750 எண்ணுள்ள தடம் மூலமாக சென்று சிறிய குன்றின் மேல்

அமைக்கப்பட்டுள்ள ஆலயத்தில், ஸ்ரீ முருகப்பெருமானையும், வள்ளி, தெய்வயானை இருபக்கங்களிலும் வீற்றிருப்பதை கண்குளிர தரிசித்து, திருப்புகழ் பாடல்களைப் பாடி, மதியம் நாங்கள் தங்கியிருந்த "ஆர்யசமாஜ் மந்திர்" எனும் இடத்திற்கு வந்தடைந்தோம். இதுகாறும் யாத்திரையின்போது ஒரு வித இடைஞ்சலோ, உடல் நலக்குறைவோ சிறிதும் ஏற்படாவண்ணம் எங்களனைவரையும் காத்தருளிய இறைவனின் கருணையைப் பாராட்டி, மலை மந்திரில் உள்ள முருகனை கண்மலராலும், மனமலராலும் கைமலராலும் போற்றித் துதி செய்து பிரியா விடை பெற்று அன்றிரவே டில்லி மாநகரை விட்டு இரவு 10.30 மணிக்குப் புறப்படும் ரயில் மூலமாக 10–10–96 காலை 7.30 மணிக்கு சென்னைக்கு நலமாக வந்து சேர்ந்தோம்.

**சுபம் சுபம் சுபம்**



## நூலாசிரியர்

திருப்புகழ் மாமணி

### மு. அருணகிரி

சென்னை, புரசைக் கடுத்த குயப் பேட்டை யில் வாழ்ந்து வருகிறார். திருப்புகழடிமை. கா. ரா. முருகேசனாருக்கும், திருமதி தனபாக்கியம் அம்மாளுக்கும் இரண்டாவது மகனாகப் பிறந்தார்.

தம் தாய், தந்தையரைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றி வாழ்பவர். இவரது தந்தையார், வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளின் பிரதம சீடருள் ஒருவராவர்.

தந்தையின் மூலமாக வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளைக் குருவாக ஏற்றவர். திருப்புகழ் ஆசிரமத்தில் குருகுலம் பயின்றவர்.

குருநாதரால் கற்றுத் தந்த இசையிலேயே திருப்புகழ்ப் பாடல்களைப் பாடும் ஆற்றல்பெற்றவர்.

குருகுல வாசத்தின்போது திருவண்ணாமலை – சேஷாத்ரி முனிவரே திருப்புகழ் ஆஸ்ரமத்தில் கீரிப்பிள்ளை வடிவத்தில், குருநாதருக்குக் காட்சி தந்த சமயம் தாமும் உடனிருந்து அனுபவித்தவர்.

அதோடு, கீரிப்பிள்ளைக்கு, மதியம் எஞ்சிய சாதத்தில் வெல்லத்தைக் கொண்டு பிசைந்து, எதிரில் வைத்து வணங்கி, அருளாசியைப் பெற்றவர்.

அன்றுதொட்டு, "உமக்குத் திருப்புகழே நிரந்தர பொக்கிஷம்" எனக் குருநாதரால் அருளாசி வழங்கப்பெற்றவர்.

திருப்புகழில் பொதிந்துள்ள கருத்துகளையும், அரிய நயங் களையும் வெளியிடும் நூலாசிரியராக விளங்குபவர்.

கணவன் பொருட்டன்றி, பிறரை வணங்காப் பத்தினிப் பெண்டிரைப்போல், திருப்புகழ் ஒன்றின்மீதே நாட்டம் கொண்டு பல ஆன்மீகப் பெரியோர்களின் வரலாறுகளைக் கட்டுரையாக எழுதும் வழக்கம் கொண்டவர்.

இறையோனால், தம் 80–வது வயதைத் தொடங்கப் போகும் இவர், கருவில் உதித்த திருவாக திருப்புகழை அனுபவித்துப் பாடி வருபவர். தம் முதிய வயதிலும், உடலால் தளர்ச்சி அடைந்தாலும் உள்ளத்தால் அயராது, திருப்புகழில் புதைந்துள்ள பல அரிய பெரிய நயங்களை வெளியிடுவதற்கு, திருப்புகழுக்கு உரை கண்ட தணிகைமணி, வ.சு. செங்கல்வராயப் பிள்ளை. எம்.ஏ., அவர்களும், இவரது தந்தை யாரும் தோன்றாத் துணையாயிருந்து வழிகாட்டி ஆவார்கள்.